# கல்வெட்டுகளில் புதுவைப் பகுதிகள்

புலவர் சு. குப்புசாமி



புதுவை வரலாற்றுச் சங்க வெளியீடு
1974

# பதிப்புரை

கல்வெட்டாய்வாளரும், புதுவை வரலாற்றுச் சங்க உறுப்பினருமான, புலவர் சு. குப்புசாமி அவர்கள் எழுதிய "கல்வெட்டுகளில் புதுவைப் பகுதிகள்" என்ற நூலைத் தமிழுலகுக்கும், முக்கியமாகப் புதுவை மக்களுக்கும் அறிமுகம் செய்து வைப்பதில் புதுவை வரலாற்றுச் சங்கம் பெருமிதமும் திருப்தியும் அடைகிறது.

அரசின் துணையும், புலவர்களின் உதவியுமின்றி இத்தகைய பணிகளைச் சங்கம் மேற்கொள்வது இன்றைய சூழ்நிலையில் அசாத்தியமாகவே படுகிறது. இடர்ப்பாடுகள் பலவற்றிற்கிடையிலும், இச் சங்கம் தனது பணியினைத் தொடர்ந்து நிறைவேற்றி வருதற்கு இதுகாறும் புதுவை வரலாற்றார்வலர்களின் விடா முயற்சியும், தன்னம்பிக்கையுமே, தூண்டுகோல்களாய்த் துணை நின்றன.

புதுவை வரலாற்றுச் சங்கத்தின் இம்முயற்சிகட்கு எல்லோரது நல்லாசியும், ஆதரவும், உதவியும் தொடர்ந்து இருந்துவரும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

இவண்,

புதுவை,
5, பிப்ரவரி 1975.

ந. சேதுராமன்

தலைவர், புதுவை வரலாற்றுச் சங்கம்.

# அணிந்துரை

புலவர் குப்புசாமி அவர்கள் எழுதிய "கல்வெட்டுகளில் புதுவைப் பகுதிகள்" என்ற நூலைப் படித்தேன். ஆற்றொழுக்கான, எளிய, தூய தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ள இந்த நூலானது புதுவைப் பகுதியில் உள்ள வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஊர்களைப் பற்றிய கல்வெட்டுச் செய்திகளைக் கூறுகின்றது.

புதுவைப் பகுதியில் உள்ள ஊர்களில் கல்வெட்டுச் செய்திகளில் அறியப்படும் வரலாற்றை இவ்வாசிரியர் புதுவையைச் சுற்றியுள்ள தென்னார்க்காடு மாவட்டத்தில் காணப்படும் கல்வெட்டுகளையும் ஆராய்ந்து எழுதியிருப்பது பாராட்டுதற்குரியதாகும். இதுவரை புதுவைப் பகுதியின் வரலாற்றை எழுதியவர்கள் புதுவைக்கு அப்பால் உள்ள கல்வெட்டுகளைச் சரிவர ஆராயவோ, துணைகொள்ளவோ இல்லை. புதுவை மாநிலம் என்பது மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னால்தான் ஏற்பட்டது. ஆதலின், புதுவை மாநிலத்தில் உள்ள கல்வெட்டுகளை வைத்துக்கொண்டு புதுவை மாநிலத்தின் முற்கால, இடைக்கால வரலாறுகளை ஆராய்வது முழுமையான ஆராய்ச்சி ஆகாது. அந்தவகையில் இந்த ஆசிரியர் புதுவைப் பகுதியின் வரலாற்றைக் கண்டறிய வெளிப்பகுதிகளில் உள்ள கல்வெட்டுச் செய்திகளை ஆராய்ந்து எழுதியது மிகவும் சிறப்பானதாகும்.

இந்த நூலில் கூறப்பட்டுள்ள பல செய்திகள் இதுவரை வெளி வராதனவாகும். பாகூர், திருபுவனை, மதகடிப்பட்டு ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுச் செய்திகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். இதுவரை தெரிந்த வரலாற்றுச் செய்திகளில் இருந்த குறைகளை நிறைவு செய்திருக்கின்றார். பண்டசோழநல்லூரில் உள்ள கல்வெட்டுகளை முதன் முதலாகப் படித்து புதிய செய்திகளைக் கூறியுள்ளார். புதுவைச் சம்பா கோயிலில் கிடைத்த ஒழுகைரையைப்பற்றிய கல்வெட்டுச் செய்திகளும் இந்நூலின் வழியாக வெளிவந்துள்ளன. வில்லியனூர் கோயில் வரலாற்றை எழுதும்போது பொருத்தமற்ற புராணச் செய்திகளை இதுவரை வரலாற்றுச் செய்திகள்போல சிலர் கூறி வந்தனர். இவ்வாசிரியர் இந்தச் செய்திகளை ஒதுக்கிவைத்து, உண்மையான வரலாற்றுச் செய்திகளைக் கூறியுள்ளது கவனிக்கத் தக்கதாகும். வில்வநல்லூர், உழவர்கரை என்ற பெயர்கள் எப்படி தவறானவை என்று காட்டியிருப்பதையும் காணலாம். மற்றும், பண்டசோழநல்லூர், பள்ளிநேலியனூர், நெட்டைப்பாக்கம், மதகடிப் பட்டு, திருவாண்டார்க்கோயில் முதலிய ஊர்களின் பழைய பெயர்

களையும் அவை மாறின வரலாற்றையும் எழுதியிருப்பது நன்முக உள்ளது. புதுவைப் பகுதியில் ஆங்காங்கே காணப்படும் சிலைகளையும் அச்சிலைகள் எந்த ஊர்களைச் சேர்ந்த கோயில்களுக்கு உரியனவாக இருக்கலாம் என்பதையும் ஆராய்ந்து எழுதியிருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும். ஆங்காங்கே அதிகாரிகளின் பெயர்கள், கோயில் சிற்பங்களின் பெயர்கள், தேவரடியார்களின் பெயர்கள், பலவகை வரிகளின் பெயர்கள் ஆகியவைகளுக்குரிய விளக்கம் கொடுத்திருப்பது தெளிவாக உள்ளது. கால ஆராய்ச்சியும் ஒவ்வொரு கோயிலுக்கும் செய்திருப்பது சிறப்பானதாகும்.

பொதுவாக, இந்த நூலானது புதுவைப் பகுதியில் உள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கோயில்களைப்பற்றியும், ஊர்களைப்பற்றியும் தெளிவான, விளக்கமான வரலாற்றுச் செய்திகளைக் கூறுகின்றது. இந்த நூல் புதுவை வரலாற்றை அறிய ஒரு சிறந்த கருவியாகும். இந்த நூலை இயற்றிய ஆசிரியர் மேலும் பல ஆராய்ச்சிகளைச் செய்து புதிய நூல்களைக் கொண்டுவர வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

1975 பிப்ரவரி 4. P. L. சாமி

நூலாசிரியர்

# முன்னுரை

இந்நூலின்கண் புதுவையைச் சார்ந்துள்ள எட்டு ஊர்களின் வரலாறுகள், கல்வெட்டுகளை அடியொற்றி ஆராயப்படுகின்றன. இத்துடன் அவற்றின் வரலாறுகள் முற்றுப்பெற்றதாக ஆகாது. அகழ்ந்து பார்க்க வேண்டிய இடங்கள், அங்கெல்லாம் ஏராளமாக உள்ளன. அவ்வரிய ஆராய்ச்சியை மேற்கொள்வார்க்கு, இந்நூல் சிறிதளவேனும் துணைநிற்கும் என்று எண்ணுகிறேன்.

புதுவை வரலாற்றுச் சங்கத் தலைவர் திருமுடி திரு. ந. சேதுராமன் அவர்கள், இப்பணியில் என்னை ஈடுபடுத்தி, அதற்கான தகவல்கள் பலவற்றையும் தந்துதவினார்கள். அன்னாருக்கு எனது உளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்வதோடு, இப்பேருதவிக்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் விரைந்து வெளிவருவதற்குப் பெருமுயற்சி எடுத்துக் கொண்ட வரலாற்றுச் சங்கச் செயலர் திரு. F. சிரில் அந்தோனி M.A., அவர்களுக்கு எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் பற்றிய தமது மதிப்பீடுகளை அணிந்துரை மூலமாக வெளிப்படுத்தி, இத்துறையில் எனது ஆர்வம் வளர்ந்திடும் வகையில் எனக்கு ஊக்கம் தந்துள்ள புதுவைச் சட்டப் பேரவைச் செயலர், ஆராய்ச்சியாளர் திரு. P. L. சாமி B. Sc அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரியது.

இதற்குத் தேவையான நிழற்படங்களைத் தந்துதவிய புதுவையிலுள்ள பிரஞ்சுப் பண்பாட்டுக் கழகத்தார்க்கும் (French Institute of Indology – Pondicherry), நன்முறையில் அச்சிட்டுதவிய புதுவை மிஷன் அச்சகத்தார்க்கும், திருபுவனை, திருவாண்டார்க் கோயில், மதகடிப்பட்டு முதலான ஊர்களில் யான் விரும்பிய வண்ணம் எல்லா இடங்களையும் காண்பதற்குத் துணைசெய்த திருபுவனை அரசினர் நடுநிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. சொ. குப்புசாமி அவர்களுக்கும் என் நன்றி உரியது.

அனைத்துக்கும் மேலாக கல்வெட்டுத்துறையில் நான் ஓரளவாவது பயிற்சி பெறுதற்குப் பெரிதும் காரணமாக விளங்கிய என்

ஆசிரியப் பெருந்தகை, கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர், வித்து வான் திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்களின் பெருங் கருணையைச் சிந்திக்கின்றேன்.

இவ்வூர்கள் பற்றி வழங்குகின்ற பழைய செய்திகளோடு எனது கருத்துக்கள் சில இடங்களில் உடன்பட்டும், பல இடங்களில் மாறுபட்டும் உள்ளன. எனது முடிவுகளே இறுதியானவை என்பதில்லை. புதிய சான்றுகள் கிடைக்கும்பொழுது அவை மாறுபடக் கூடும். ஆதலின், இந்நூலின்கண் எவையேனும் நிறைகள் இருப்பின் அவற்றை விடுத்து, குறைகளைமட்டும் தக்க சான்றுகளுடன் எனக்குத் தெரிவித்து, இதிலுள்ள களைகளை நீக்குதற்குத் துணைநிற்குமாறு அறிஞர்களை வேண்டுகிறேன்.

"பல்லவனும் பாரந்தகனும்" என்னும் எனது முதல் நூலைத் தொடர்ந்து வெளிவரும் இதனையும் தமிழுலகம் ஏற்று, இத்துறையில் எனக்குள்ள ஆர்வத்தை மேலும் வளர்த்திடும் என்று நம்புகிறேன்.

திருமுறை இல்லம், அன்பன்,

கிழக்கு மாட வீதி, சு. குப்புசாமி

பாகூர்.

# உள்ளுறை

# மேற்கோள் நூல்கள்

*(BIBLIOGRAPHY)*




1. அகநானூறு
2. அபிதான சிந்தாமணி
3. ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு
4. இந்திய வரலாறு
   திரு. வின்செண்ட் A. ஸ்மித்து
5. இலக்கிய வரலாறு
   திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை M. A.; M. L.
6. உரிச்சொல் நிகண்டு
7. ஊரும் பேரும்
   திரு. டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை M. A.; B. L.
8. கலிங்கத்துப்பரணி
   செயங்கொண்டார்
9. காலச்சுவடுகள்
   திரு. நடன. காசிநாதன், M. A.
10. குறுந்தொகை
11. கோப்பெருஞ்சிங்கன்
    திரு. S. R. பாலசுப்பிரமணியம் M. A.; L. T.
12. சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்
    திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி
13. சரித்திர மணிமாலை
    திரு. T. K. வெங்கடராமன்
14. சாசனத் தமிழ்க்கவி சரிதம்
    திரு. மு. இராகவ ஐயங்கார்
15. சூடாமணி நிகண்டு
    மண்டல புருடர்

33. பன்னிரு திருமுறை வரலாறு
வித்துவான் திரு. கா. வெள்ளைவாரணனார்

34. பிற்காலச் சோழர் சரித்திரம்
வித்துவான் திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார்

35. புதுவைச் செய்திகள்
மாநிலச் செய்தித் துறை வெளியீடு

36. புள்ளிருக்கு வேளூர் கும்பாபிஷேக மலர்

37. புறநானூறு

38. புறப்பொருள் வெண்பாமாலை
ஐயனாரிதனார்

39. பெரும்பாணாற்றுப்படை
கடியலூர் உருத்திரங்கண்ணனார்

40. மதகடிப்பட்டுக் கோயிலின் கல்வெட்டுச் சாசனங்களில் சில
திரு. பா. ஜெ. பட்டாபிராமன்

41. மதுரை நாயக்கர் வரலாறு
திரு. அ. கி. பரந்தாமனார், M. A.

42. மறைந்துபோன தமிழ் நூல்கள்
திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி

43. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்
திரு. S. R. பாலசுப்பிரமணியன் M. A.; L. T.

44. விக்கிரமச் சோழன் உலா
ஒட்டக்கூத்தர்

45. விந்தைப் பசு கண்ட விஸ்வநேசர்
திரு. ஜார்ஜ் மோசஸ் (தினமணிச் சுடர். 16–3–69)

46. வில்லிப்புராணம்
வீரராகவ கவி

47. Administration & Social life under the Pallavas.
Dr. Meenakshi

48. A History of Modern India from 1526 AD to the present day
V. N. Harirao M. A.

16. செந்தமிழ்

17. சோழர் கோயிற் பணிகள்
திரு. J. M. சோமசுந்தரம் பிள்ளை B. A.; B. L.

18. தமிழ் நாட்டு வரலாறு
திரு. டாக்டர் மு. ஆரோக்கியசாமி

19. தமிழகக் கோயிற் கலைகள்
தமிழ்நாடு தொல்பொருள் துறை வெளியீடு

20. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்
திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி

21. தனிப்பாடல் திரட்டு

22. திருத்தொண்டர் புராணம்
சேக்கிழார் அடிகள்

23. திருமுருகாற்றுப்படை
நக்கீரர்

24. திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள்
வித்துவான் திரு. வை. சுந்தரேச வாண்டையார்

25. தென்னிந்திய கோயிற் சாசனங்கள்

26. தேவாரம்

27. தொல்காப்பியம்
தொல்காப்பியர்

28. நற்றிணை

29. நன்னூல்
பவணந்தி முனிவர்

30. பட்டினப்பாலை
கட்டியலூர் உருத்திரங்கண்ணனார்

31. பல்லவனும் பராந்தகனும்
புலவர் திரு. சு. குப்புசாமி

32. பல்லவர் வரலாறு
டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனார்,
M. A.; M. O. L.; PH. D.

49. A Manual of the Pudukottai State.

50. Annual Report of the Archaeological Survey of India, South Circle.

51. Annual Reports on South Indian Epigraphy (A.R.E.)

52. A Topographical list of the inscriptions of the Madras Presidency
RaoBahadur C. R. Chrishnamacharlu, B. A.

53. Castes and Tribes of Southern India
E. T. Thurston

54. Census of India (1961)

55. Elements of Hindu Iconography, Vols
T. A. Gopinatha Rao

56. Epigraphia Carnatica, Vols.

57. Epigraphia Indica, Vols.

58. Further sources of Vijayanagara History
K. A. Neelakanda Sastri &
N. Venkata Ramanayya.

59. History of Ancient Dekkan
K. V. Subramaniya Ayyar

60. Indian Architecture
M. A. Anandhalvar & A. Rao

61. „ O. C. Gangoly

62. „ Percy Brown

63. Inscriptions of Krishnadevaraja's time
Raobahadhur K. Sitarama Reddigaru
B. A.; B. L.

64. Inscriptions of the Pudukkottai State

65. Journal of the Annamalai Univesity

66. Les Epigraphes Sanscrites et Tamoules de L'Inde Française
A. Singaravelu
67. Madras District Gazetteers,
South Arcot
B. S. Baliga
68. Madras Government Oriental Series.
69. Revue Historique de l'Inde Française
70. Selections from Orme maniscripts
C. S. Srinivasachariar
71. Sources of Vijayanagara History
S. Krishnaswami Ayyangar
72. South Indian inscriptions, Vols. (S. I. I.)
73. Studies in the History of the Third dynasty of Vijayanagara
N. Venkataramanayya.
74. Temple de Madagadipattou
P. Z. Pattabiraman
75. Travancore Archaeological Series.



# பாகூர்

## இருப்பிடம்

புதுவை மாநிலத்தில் உள்ள குறிப்பிடத்தக்க சிறப்பினை உடைய ஊர்களில் பாகூர் என்பதும் ஒன்று. இவ்வூர் புதுவைக்குத் தெற்கே 12.5 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. இது ஒரு ஒன்றியத்தின் தலைமையிடம். தமிழகத்தின் முற்பட்ட வரலாற்றிலும் பிற்பட்ட வரலாற்றிலும் இதற்கொரு தனி இடம் உண்டு.

## பிஜப்பூர் சுல்தான்

கி. பி. 18-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் பாகூர்ப் பகுதிகள் ஐதராபாத்து நிசாமின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தன. இந்தியாவில் பிரஞ்சு ஆதிக்கத்துக்கு வழிகோலியவரும், கி. பி. 1674 முதல் 1707 முடிய இந்தியாவின் பிரஞ்சுப் பகுதிக்குக் கவர்னராக இருந்தவருமான 'பிரான்சுவா மர்த்தேன்' என்பவர், பிஜப்பூர் சுல்தானிடமிருந்து புதுச்சேரி, பாகூர், வளவனூர் ஆகிய பகுதிகள் அடங்கிய 55 ஹெக்டேர் நிலப்பரப்பை, உள்நாட்டு வணிகத் தொடர்புகளுக்காகவும் கோட்டைகள் கட்டிக்கொள்வதற்காகவும் பெற்றிருந்தார்.[1] ஆயினும், இப்பகுதிகள் தற்காலிக ஏற்பாடாகவே இருந்துவந்தன.

## கர்நாடகப் போர்கள்

கி. பி. 1748-ஆம் ஆண்டில் ஐதராபாத்து நிசாம் இறந்தபோது, ஆட்சி உரிமை பற்றி நாசிர் ஜங், முசாபர் ஜங் ஆகிய இருவருக்கும் இடையே கடுமையான போட்டிகள் நிலவின. இக்கால கட்டங்களில் நடைபெற்ற போர்களை வரலாற்று ஆசிரியர்கள் 'கர்நாடகப் போர்கள்' என்று குறிப்பிடுவர்.

## தியூப்ளேயின் செயல்

ஐதராபாத்து நிசாமாக நாசிர்ஜங் என்பவர் பதவி ஏற்றார். சிறிது காலத்துக்குள் அவர் கொலை செய்யப்படவே, தியூப்ளே

---

1. சரித்திர மணிமாலை, பக்கம். 13

என்னும் பிரெஞ்சுக் கவர்னரின் உதவியால் முசாபர்ஜங் என்பவர் நிஜாமானுர். அவருடைய பாதுகாப்புக்கு என்று டியூப்ளே, 'புய்சி' என்பவரின் தலைமையின்கீழ்ப் பிரஞ்சுப் படையொன்றை ஐதராபாத்துக்கு அனுப்பி வைத்தார்.[2]

டியூப்ளேயின் இத்தகைய உதவிகளால் மனநிறைவு பெற்ற முசாபர்ஜங், தன் ஆளுகைக்கு உட்பட்டிருந்த பாகூர், வழுதாவூர், வில்லியனூர் ஆகிய ஊர்களையும், அவற்றைச் சார்ந்த இடங்களையும் டியூப்ளேயிக்கு மானியங்களாகவே கொடுத்துவிட்டார்.[3] பாகூர்ப் பகுதி இந்நிகழ்ச்சிகளுக்குப் பிறகு பிரஞ்சுக்காரர்களுக்கு நிரந்தர மாகியது.

கி. பி. 1752-ஆம் ஆண்டு சூலை மாதம் 24-ஆம் நாள் ஆங்கிலப் படையும் பிரஞ்சுப் படையும் இப்பகுதியில் நேருக்கு நேராக மோதிக்கொண்டன. வரலாற்று ஆசிரியர்கள் இதனைப் 'பாகூர் போர்' என்றே குறிப்பிடுவர்.[4] இப்போருக்குப் பின்னரும் பாகூரும் அதனைச் சார்ந்த இடங்களும் தொடர்ந்து பிரஞ்சியரின் ஆதிக்கத்திலேயே இருந்தனவாக அறிகிறோம். இந்தியாவில் இருந்த பிரஞ்சுப் பகுதிகள், அண்மைக் காலத்தில் சுதந்தர இந்தியாவோடு இணைந்துவிட்ட செய்தி அனைவரும் அறிந்ததேயாம்.

## வரலாற்றுப் பிணைப்பு

மேற்கண்டவாறு கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் பாகூருக்கு உள்ள வரலாற்றுத் தொடர்பினை அறிந்து கொள்வதோடு இதன் பழமை முடிந்திடவில்லை. இக்காலகட்டத்தை விடுத்துச் சற்று முன்னோக்கிச் சென்று, கி. பி. 9-ஆம் நூற்றாண்டு தொடங்கி கி. பி. 13-ஆம் நூற்றாண்டு முடிய உள்ள காலப்பகுதியில் அமைந்துள்ள வரலாற்றுப் பிணைப்பை அறிந்து கொள்ளுதல் சாலச்சிறந்தது,

பாகூரின் முற்பட்ட வரலாற்றை அறிந்து கொள்ளுதற்கு அங்குள்ள சிவன்கோயிற் கல்வெட்டுகளும், மேல்சேவூர், திண்டிவனம், திருவோத்தூர், திருவந்திபுரம், திருப்பாதிரிப்புலியூர் ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுகளும், காஞ்சிப்பல்லவனை நிருபதுங்கவர் மனின் செப்பேடுகளும் நமக்குப் பெருமளவில் துணைசெய்கின்றன.

---

2. இந்திய வரலாறு, பாகம். iii. பக்கம். 46
3. A History of Modern India. 'From 1526 AD to the present day', Page. 198
4. Selections from ORME maniscripts. Pages. 205 & 249

இராஷ்டிரக்கூட மன்னனான மூன்றும் கிருஷ்ணன் (கன்னர தேவன்), ஆதித்த கரிகாலன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், இரண்டாம் இராசேந்திர சோழன், முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் ஆகிய பேரரசர்களின் காலங்களில் வரையப்பட்ட 21 கல்வெட்டுகள் பாகூர்ச் சிவன்கோயிலில் காணப்படுகின்றன.[5] அவற்றுடன் வேறு சில கல்வெட்டுகளின் சிதைவுகளும் ஆங்காங்கே உள்ளன.

கல்வெட்டுத் துறையினரின் ஆண்டறிக்கையில் இடம் பெறாத சில கல்வெட்டுகளும், இக்கோயிலின் அர்த்தமண்டபத்து நுழைவாயிலின் இருமருங்கிலும் உள்ளன. அவை கன்னர தேவனின் 19, 24-ஆம் ஆண்டுகளிலும், ஆதித்த கரிகாலனின் 3-ஆம் ஆண்டிலும் வரையப்பட்டவையாகும். இவற்றை எனது 'பல்லவனும் பராந்தகனும்' என்னும் நூலில் காணலாம்.[6]

பாகூரிலிருந்த வடமொழிக் கல்லூரிக்கு விடப்பட்ட நிவந்தத்தைக் குறிக்கும் செப்பேடுகள், தெள்ளாறெறிந்த நந்திவர்மனின் மகனான நிருபதுங்கவர்மனின் 8-ஆவது ஆட்சி ஆண்டைச் (கி. பி. 858) சார்ந்தனவாகும்.[7] இனி, இவற்றின் துணைகொண்டு பாகூரின் தொன்மையான வரலாற்றை அறிவோம்.

## ஊரும் பேரும்

"கொவிசய நிருபதொங்கவருமற்கு யாண்டு எட்டாவது வெசாலிப் பெரரயன் விண்ணப்பத்தால் விடொலைவிடுத காடுபட்டித் தமிழ்ப்பெரரயன் ஆணத்தியாக அருவாநாட்டுக் கிழ்வரி வாகூர் நாட்டு நாட்டார் காண்க."

என்றுவரும் நிருபதுங்கப் பல்லவனின் பட்டயம் (கி. பி. 858) பாகூரின் மிகப்பழமையான பெயர் வாகூர் என்று குறிப்பிடுகிறது.

5. (i) Annual Report on South Indian Epigraphy for the year 1902, Nos. 171 to 187.
   (ii) South Indian Inscriptions, Vol. VII, No. 798 to 814.
   (iii) A Topographical list of the inscriptions of the Madras Presidency, Vol. iii, Pages. 1693 to 1694.
6. பல்லவனும் பராந்தகனும், பக்கம். 130 & 131
7. Epigraphia Indica, Vol. XVIII, No. 2

"ஸ்ரீகன்னர தேவர்கியாண்டு 22-ஆவது வாகூர் ஸ்ரீ மூலஸ்தானம் அம்லமுடைய திருக்கோவிலுடையார்"

என்று வரும் கன்னர தேவனின் 22-ஆவது ஆண்டுக் (கி. பி. 962) கல்வெட்டும். [8]

"ஸ்வஸ்திஸ்ரீ விரபாண்டியன் தலைக்கொண்ட கோப்பரகேஸரி பன்மர்க்கு யாண்டு 3-ஆவது வாகூர் ஸ்ரீமூலஸ்தானத்து மஹா தேவர்க்கு"

என்றுவரும் இரண்டாம் ஆதித்த சோழனின் 3-ஆது ஆண்டுக் (கி. பி. 969) கல்வெட்டும், [9]

"ஸ்ரீகோ இராஜராஜ கேசரி பந்மரான ஸ்ரீ இராஜராஜ தேவற்கு யாண்டு 25-ஆவது சயங்கொண்ட சோழ மண்டலத்து வாகூரான ஸ்ரீ அழகிய சோழசதுபெதி மங்கலத்து ஸ்ரீ மூலஸ்தானமுடைய மஹாதேவற்கு"

என்று வரும் முதலாம் இராசராச சோழனின் 25-ஆவது ஆண்டுக் (கி. பி. 1010) கல்வெட்டும், [10]

"கோப்பரகேஸரிவந்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு 17-ஆவது ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து பவித்திரமாணிக்க வளநாட்டு வாகூரான அழகிய சோழ சதுவெதி மங்கலத்து உடையார் ஸ்ரீ மூலஸ்தானமுடைய மஹாதேவற்கு"

என்று வரும் முதலாம் இராசேந்திர சோழனின் 17-ஆவது ஆண்டுக் (கி. பி. 1029) கல்வெட்டும், [11]

"கோப்பர கேஸரிபந்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்திர தேவற்கு யாண்டு 10-ஆவது ராஜேந்திர சோழ வளநாட்டு பவித்திர மாணிக்க வளநாட்டு வாகூரான அழகியச் சோழச் சருப்பெதி மங்கலத்து மூலஸ்தாநமுடையார்"

என்று வரும் இரண்டாம் இராசேந்திர சோழனின் 10-ஆவது ஆண்டுக் (கி. பி. 1061) கல்வெட்டும், [12]

---

8. S. I. I., Vol. VII, No. 803 (176 of 1902)
9. பல்லவனும் பாரந்தகனும், பக்கம், 130
10. S. I. I., Vol. VII, No. 808 (181 of 1902)
11. S. I. I., Vol. VII, No. 801 (174 of 1902)
12. S. I. I., Vol. VII, No. 798 (171 of 1902)

"கொராஜகெசரிவந்மாாந சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலொத்துங்க சொழ தெவர்க்கு யாண்டு 35-ஆவது கங்கைகொண்ட சொழ வளநாட்டு வாகூராந அழகிய சொழச் சதுப்பெதி மங்கலத்து மஹாஸபையொம்"

என்னும் முதலாம் குலோத்துங்க சோழனின் 35-ஆவது ஆண்டுக் (கி. பி. 1105) கல்வெட்டும், [13]

"கொராஜகெஸரிபந்மாாந திரிபுவந சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சொழ தெவர்க்கு யாண்டு அஞ்சாவது கங்கை கொண்ட வளநாட்டு வாகூராந அழகிய சொழச் சதுர்பெதி மங்கலத்து உடையார் ஸ்ரீ முலஸ்தா (ன)ம் உள்ளிட்டொம்"

என்று வரும் விக்கிரம சோழனின் 5-ஆவது ஆண்டுக் (கி. பி. 1123)) கல்வெட்டும் [14] இன்றைய பாகூரை 'வாகூர்' என்றே குறிப்பிடுகின்றன. எனவே, பல்லவன் நிருபதுங்கவர்மன் காலம் முதல் விக்கிரம சோழன் காலம் வரை, இவ்வூருக்கு வாகூர் என்னும் பெயர் வழக்கில் இருந்தமை தெள்ளிதின் புலனாகும்.

தென்னார்க்காடு மாவட்டம், செஞ்சி வட்டம், மேல் சேவூர் என்னும் ஊரிலுள்ள விருஷபுரீசுவரர் கோயிலின் கருவறை வடக்குச் சுவரில் வரையப்பட்ட முதலாம் இராசராச சோழனின் வடக்குச் சுவரில் வரையப்பட்ட, முதலாம் இராசராச சோழன் 24-ஆவது ஆண்டுக் (கி. பி. 1009) கல்வெட்டும், [15]

"வடகரை வெசாலிப்பாடி வாகூர்நாட்டுத் தாமநல்லூர்"

என்று இவ்வூரின் பெயரை வாகூர் என்றே கூறுகிறது.

தென்னார்க்காடு மாவட்டம், கடலூர் வட்டம் திருவந்திபுரம் தேவநாதப் பெருமாள் கோயிலின் கருவறை முன் மண்டபத்து வடக்குச் சுவரில் காணப்படும் முதலாம் குலோத்துங்க சோழனின் 22-ஆவது ஆண்டுக் (கி. பி. 1092) கல்வெட்டும்,

"நடுவில் நாடான ராஜெந்திர வளநாட்டுப் பவித்திரமாணிக்க வளநாட்டு வாகூர் நாட்டு வாகூரான அழகிய சொழ சருப்பெதி மங்கலத்து நின்றும் விருதராஜ பயங்கர வளநாட்டு மெற்கா நாட்டொ பிறிந்து"

---

13. S. I. I., Vol. VII, No. 813 (186 of 1902)
14. S. I. I., Vol. VII, No. 806 (179 of 1902)
15. S. I. I., Vol. XVII, No. 235

என்று பாகூரின் பெயரை வாகூர் என்றே கூறுகிறது.[16]

"வாகூர் நாட்டுக் கலெளயூர் குடிப்பள்ளினம்பான் ருகமாணிக்க இளவரையன் வைச்ச விளக்கு இரண்டும்"

இது திருப்பாதிரிப்புலியூர் பாடலீசுவரர் கோயிலில் காணப் படுகிறது. இராசமகேந்திரனின் 3-ஆவது ஆண்டில் வரையப் பட்டது.[17] இக்கல்வெட்டும் பாகூரை வாகூர் என்றே குறிப்பிடு கிறது.

வட ஆர்க்காடு மாவட்டம், செய்யாறு வட்டம், திருவோத்தூர் என்னும் ஊரிலுள்ள வேதபுரீசுவரர் கோயிற் சாசனம் ஒன்றில் கீழ்க்கண்ட வாசகம் காணப்படுகிறது.[18]

"நடுவில் நாட்டு வெசாலி நாட்டுவாகூர்"

இங்கு நடு நாடும் அதன் உட்பிரிவாகிய வேசாலி நாடும், அதன்கண் அமைந்துள்ள வாகூரும் ஒருங்கே குறிக்கப்பட்டிருப் பது உளங்கொளத் தக்கது. இவ்வாறு வேற்றூர்களில் காணப்படும் சாசனங்களாலும் இன்றைய பாகூர், முற்காலத்தில் வாகூர் என்று குறிக்கப்பட்டு வந்ததைத் தெளிவாக அறிகிறோம்.

வாகு என்னும் சொல், அழகு என்று பொருள் படும்.[19] எனவே, அழகிய ஊர் என்ற பொருளிலேயே இது வாகூர் என்று முற்காலத்தில் பெயர் பெற்றிருந்தது. பல்லவ மன்னனின் பழமை யான செப்பேடுகளின் இரண்டு இடங்களில் 'பாகூர்' என்னும் பெயரும் பயின்று வந்துள்ளது. இவற்றால், பாகூர் என்னும் மருவிய வழக்கும் அக்காலத்தில் உண்டு என்பது தோற்றம்.

16. S. I. I., Vol. VII. No. 760 (136 of 1902)
17. S. I. I., Vol. VII. No. 743 (119 of 1902)
    இக்கல்வெட்டில் வரும் கனூர் என்னும் ஊர், பாகூருக்கு மேற்கே 4 கி. மீ. தொலைவில் உள்ளது.
18. S. I. I., Vol. VII. No. 94 (85 of 1900)
19. (i) உரிச்சொல் நிகண்டு, செயல்பற்றிய பெயர்த்தொகுதி, செய். 10
    (ii) சூடாமணி நிகண்டு, ககரவெதுகை, செய். 13

பாகூர் மல்லமராஜு

கிருஷ்ணதேவராயரின் (கி. பி. 1509–1529) பெருந்தரத்து அதிகாரிகளுள் பாகூர் மல்லமராஜு என்பவரும் ஒருவராக இருந்துள்ளார்.[20] அவர் நமது பாகூரைச் சேர்ந்தவராகக் கருத இடமுளது. எனவே, கி. பி. 16-ஆம் நூற்றுண்டிலும் பழமையான வாகூர், பாகூர் என்று குறிக்கப்பட்டதை அறிகிறோம். வாகூர், பாகூர் ஆகிய இரு பெயர்களில் வாகூர் என்பதே பெரு வழக்காய் இருந்துள்ளது.

இனி, தென்பண்ணை ஆற்றின் வடகரையில் வேசாலிப்பாடியை அடுத்து வாகூர் அமைந்திருந்ததாகச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. தென்னுர்க்காடு மாவட்டம் உளுந்தூர்ப்பேட்டைக்கு அண்மையிலுள்ள சேந்தமங்கலம் என்னும் ஊரை அடுத்து, வாகூர் என்னும் பெயரில் மற்ருெரு ஊர் இருந்ததாகத் தெரிகிறது. ஆயினும், அது 'சிறுவாகூர்' என்னும் பெயரால் குறிக்கப்பட்டமையைக் கோப்பெருஞ்சிங்கனின் சாசனம் ஒன்று புலப்படுத்துகிறது,[21]

## அழகிய சோழச் சதுர்வேதி மங்கலம்

சோழர் காலத்தில் நமது பாகூர் 'அழகிய சோழச் சதுர்வேதி மங்கலம்' என்ற புதியதொரு பெயரைப் பெற்றது.[22] முதலாம் இராசராச சோழனுக்கு முற்பட்ட கல்வெட்டுகளில், இப்புதிய பெயர் காணப்படவில்லை. இம்மன்னன் காலத்தில் வரையப்பட்ட மூன்று சாசனங்கள் பாகூரில் காணப்படுகின்றன. அவற்றுள்ளும் 25-ஆவது ஆண்டில் (கி. பி. 1010) வரையப்பட்ட கல்வெட்டில்தான் அழகிய சோழச் சதுர்வேதி மங்கலம் என்னும் புதிய பெயர் குறிக்கப்படுகிறது.[23] 11, 12-ஆம் ஆண்டுகளில் வரையப்பட்ட ஏனைய கல்வெட்டுகளில் இப்பெயர் காணப்பெறவில்லை.

---

20. Inscriptions of Krishnadevaraja's time, Vol. III, No. 12
21. S. I. I., Vol. VIII, No. 334
22. S. I. I., Vol. VII, Nos. 798, 806 to 808 & 814.
23. S. I. I., Vol. VII, No. 808 (181 of 1902)

இவற்றை உளங்கொண்டு ஆராயின், முதலாம் இராசராச சோழனின் 12-ஆவது ஆட்சி ஆண்டுக்கும், 25-ஆவது ஆட்சி ஆண்டுக்கும் இடைக்காலத்திலேதான் (கி. பி. 997–1010) இப்புதிய பெயர் இடப்பட்டிருத்தல் வேண்டும் என்பது புலனாகும்.

## அழகிய சோழன்

வாகு – அழகு. எனவே, அழகிய ஊர் என்று இதற்குப் பொருளுண்டு என்று முன்னர்க் கண்டோம். இதே பொருளில் இப்புதிய பெயர் அமைக்கப்பட்டிருப்பின், 'அழகிய சதுர்வேதி மங்கலம்' என்று சாசனங்கள் குறித்திருக்கும். அவ்வாறன்றி, சோழன் என்னும் பெயரையும் உடன் இணைத்துக்கொண்டு, அழகிய சோழச் சதுர்வேதி மங்கலம் என்று சாசனங்கள் குறிப்பிடு கின்றன. ஆதலின், இது சோழ மன்னன் ஒருவனின் பெயரால் விளங்கிய சதுர்வேதிமங்கலம் என்பது தேற்றம். அவ்வாறாயின் அச்சோழ மன்னன் யாவன்?

## சுந்தர பராந்தகன்

முதலாம் இராசராச சோழனின் தந்தையான இரண்டாம் பராந்தகனுக்குச் 'சுந்தர சோழன்' என்றொரு பெயருண்டு.[24] சோழன் என்னும் பெயரையும் உடன் இணைத்துக்கொண்டு, அழகிய சுந்தரம் – அழகு. எனவே, சுந்தர சோழனே இங்கு அழகிய சோழன் எனப்பட்டான்.

ஆகவே, முதலாம் இராசராச சோழன் தனது 12-ஆவது ஆட்சி ஆண்டுக்குப் பின்னரும், 25-ஆவது ஆட்சி ஆண்டுக்கு முன்னரும் உள்ள காலப் பகுதியில், தன் தந்தையின் நினைவாக வாகூருக்கு அழகிய சோழச் சதுர்வேத மங்கலம் என்று புதிய பெயரிட்டு, அதனை அந்தணர்களுக்குப் பிரமதேய உரிமையாக வழங்கினான் என்பது இனிது புலனாகும். இம்மன்னனுக்குப் பின் வந்த சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் யாவும், இப்புதிய பெயரைத் தவறாது குறிக்கின்றன. இச்சதுர்வேதி மங்கலம் பல சிற்றூர்களைத் தன்னகத்துக் கொண்ட சிறு அமைப்பாக விளங் கியது.

---

24. ( i ) Epigraphia Indica, Vol. XII, No. 15
( ii ) Inscriptions of the Puduko'tai State, No. 82
(iii) A. R. E. 1908, No. 302

முற்காலத்தில் ஊருக்கு நடுநாயகமாக விளங்கிய சிவன் கோயில், இப்போது ஊரின் வடமேற்கு முகப்பில் நிலைத்துள்ளது. கோயிலின் வடக்குப் பகுதியிலும் மேற்குப் பகுதியிலும் இருந்த பழமையான ஊர்ப்பகுதிகள் விளைநிலங்களாக மாறிவிட்டன. கோயிலைச் சார்ந்து ஊரின் அகத்தே இருந்த ஆழ்ந்தகன்ற நீர்நிலைகள், தற்போது ஊரின் மேற்குத் திக்கில் தனித்துக் காணப்படுகின்றன. இந்நீர்நிலைகள் முற்காலத்து வாகூர்ப் பெண்களால் நிர்வகிக்கப்பட்டன என்று தெரிகிறது.

## வாகூர் நாடு

வாகூரைத் தலைநகராகக் கொண்ட நாட்டுப் பகுதி வாகூர் நாடு என்று பெயர்பெற்றது. பல்லவர் காலம் முதல் சோழர் காலம் முடிய இதற்குத் தெளிவான சான்றுகள் உள்ளன. இன்றும் இது ஒரு ஒன்றியத்தின் தலைமையிடமாக விளங்குகிறது. இப்போது தனியாக இயங்கும் நெட்டைப்பாக்கம் ஒன்றியம், முன்பொரு காலத்தில் பாகூர் ஒன்றியத்துடன் இணைந்த பகுதியேயாகும்,

இனி, முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் வட ஆர்க்காடு மாவட்டம் செய்யாறு வட்டத்தில் 'பாகூர் நாடு' என்ற பெயரில் வேறொரு நாடும் இருந்துள்ளது. [25]

"ஜெயங்கொண்ட சோழமண்டலத்து காலியூர்க் கொட்டத்துப் பாகூர் நாட்டு உக்கலான விக்கிரமாபரணச் சதுப்பெதி மங்கலம்"

என்று வரும் விசயகண்ட கோபால தேவரின் 28-ஆவது ஆண்டுக் கல்வெட்டும் இதனை உறுதி செய்கிறது, [26] இச்சாசனம் வடார்க்காடு மாவட்டம் செய்யாறு வட்டம் உக்கல் என்னும் ஊரிலுள்ள பெருமாள் கோயிலில் காணப்படுகிறது, இச்சாசனங்கள் குறிப்பிடும் பாகூர் நாடு, நமது வாகூர் நாட்டினின்றும் வேறானது. எனவே, வாகூர் நாடு என்பதும் பாகூர் நாடு என்பதும் வெவ்வேறு இடங்களில் இருந்த வெவ்வேறு நாடுகளாகும்.

## வளநாடு

வாகூர் நாட்டை உள்ளடக்கிய வளநாடு, 'இராஜேந்திர சோழ வளநாடு' என்று பெயர் பெற்றது. தென்னார்க்காடு

---

25. காலச்சுவடுகள், பக்கம். 32
26. S. I. I., Vol. VII. No. 1045 (412 of 1902)

மாவட்டத்தின் ஒரு பகுதியும், வடார்க்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியும் இணைந்த நிலப்பரப்பு, சோழர் காலத்தில் இராசேந்திர சோழ வளநாடு என்று பெயர் பெற்றிருந்தது. இது பவித்திர மாணிக்க வளநாடு, கங்கை கொண்ட சோழ வளநாடு, இராசராச வளநாடு, இராசாதிராசன் வளநாடு எனப் பல்வேறு காலங்களில் பல்வேறு பெயர்களைப் பெற்றுத் திகழ்ந்தது.

## வளநாடும் நாடும்

இராசேந்திர சோழ வளநாட்டில் வாகூர் நாடு, மேற்கா நாடு, மேலூர் நாடு, மங்கல நாடு, திருமுனைப்பாடி நாடு, கிழாமூர் நாடு, பனையூர் நாடு, இடையாற்று நாடு, திருவெண்ணெய் நல்லூர் நாடு, திருவாலி நாடு, அண்ணா நாடு, (திருவண்ணாமலை) முதலான நாடுகள் அடக்கி இருந்தனவாக ஆங்காங்குள்ள கல்வெட்டுகளால் அறிகிறோம்.

அக்காலத்தில் தஞ்சை மாவட்டத்தில் 'இராஜேந்திர சோழ வளநாடு' என்ற பெயரில் வேறு ஒரு வளநாடும் இருந்துள்ளது. அது முதற் குலோத்துங்கன் பெயரால் சோழமண்டலத்தில் இருந்த வளநாடாகும்.[27] இங்குக் குறிக்கப்பெறும் வளநாடு நடுநாட்டில் இருந்த வளநாடாகும்.

## தொண்டை மண்டலம்

தொண்டை மண்டலம் பல்லவர் காலங்களில் தண்டகராஷ்டிரம் என்றும், அருவா நாடு என்றும் பெயர்பெற்றிருந்தது.

"அருவாநாட்டுக் கிழ்வரி வாகூர் நாட்டு வாகூர்" என்று வரும் நிருபதுங்கவர்மனின் வாகூர்ப் பட்டயத்தாலும் இதனை உணரலாம். நன்னூலின் பழைய உரையாசிரியர்கள் தொண்டை மண்டலத்தை அருவா நாடு, அருவாவடதலை நாடு என இரண்டாகப் பிரித்துக் கூறுவர்.[28] முதலாம் பராந்தகச் சோழனின் திருவாமாத்தூர்க் கல்லெழுத்து,

"அருவா நாட்டு மிவழி வாவலூர் நாட்டுத் தெவதானம்"

---

27. திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள், பக்கம். 2

28. (i) நன்னூல், மயிலைநாதர் உரை, சூ. 272.
(ii) நன்னூல், சங்கர நமச்சிவாயர் உரை, சூ. 273.

என்று குறிப்பிடுவதால் [29] அருவாநாடு என்னும் பெயர் வழக்கம் சோழர் காலத்திலும் உண்டு என்பதை அறியலாம். தென்னார்க்காடு மாவட்டத்தின் பெரும்பகுதியும் வடார்க்காடு மாவட்டம், ஆந்திர மாநிலத்தின் சித்தூர் மாவட்டம் ஆகிய பகுதிகள் அடங்கிய பெருநிலப்பரப்பு, அக்காலத்தில் தொண்டை மண்டலமாக விளங்கியது.

முதலாம் இராசராச சோழன் இப்பகுதிகளை வென்று கைப் பற்றிய பின்னர், அத்தொண்டை மண்டலம் அம்மன்னனின் பெய ரால் 'செயங்கொண்ட சோழ மண்டலம்' என்று புதிய பெயர் பெற்றது. வாகூர் நாட்டை உள்ளடக்கிய இராசேந்திர சோழ வளநாடு, மேற்கூறிய செயங்கொண்ட சோழமண்டலத்தின் ஒரு பகுதியாக விளங்கியதைக் கல்வெட்டால் அறியலாம். [30]

## ஊராட்சி மன்றமும் பணிகளும்

பாகூரில் இராட்டிரகூடர் காலத்திலும், சோழர் காலத்திலும் இருவகையான சபைகள் செயலாற்றி வந்தன. அவற்றுள் ஒன்று ஊர்ச்சபை. மற்றொன்று புண்ணிய கணப் பெருமக்கள் சபை, [31] அக்காலத்தில் ஊர்ச்சபையின் உறுப்பினர்கள், ஊராளும் கணப் பெரு மக்கள் என்று அழைக்கப்பட்டனர். [32] ஊர்ச்சபை குறி அல்லது பெருங்குறி என்ற பெயராலும் சாசனங்களில் குறிக்கப் பட்டது. ஊராளும் கணப்பெரு மக்கள் தமது ஆட்சிப் பொறுப் பினை செவ்வனே நிறைவேற்றும் பொருட்டு பல வாரியங்களை அமைத்துக்கொண்டனர்.

### வாரியங்கள்

பாகூரில் சம்வத்சர வாரியம் இருந்தமையை முதலாம் இராச ராச சோழனின் சாசனம் குறிப்பிடுகிறது, [33] நீதி நெறிகளை ஆராய்ந்து முடிவு கூறுவதும், பலவகையான அறங்களை ஏற்று

---

29. S. I. I., Vol. XIII, No. 63
30. S. I. I., Vol. VII, No. 814 (187 of 1902)
31. S. I. I., Vol. VII, No. 805, 810, 811 & 814.
32. S. I. I., Vol. VII, No. 805
33. S. I. I., Vol. VII, No. 805

நடத்துவதும், அறநிலையங்களைக் கண்காணிப்பதும், அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டிய வரிகளை வசூலிப்பதும் இவ்வாரியப் பெருமக்களின் கடமைகளாகும்.

பாகூரில் இருந்த கலிங்கு வாரியத்தைப்பற்றிக் கன்னர தேவனின் சாசனம் ஒன்றால் அறிகிறோம். [34] கலிங்குகளில் நீரைத் தேக்கி அவரவர்க்குரிய முறை நாட்களில் விடுவது இவர்தம் கடமையாகும்,

இராசராச சோழனின் கல்வெட்டொன்று பாகூரிலிருந்த ஏரி வாரியத்தைக் குறிப்பிடுகிறது, [35] ஏரியைக் காப்பதும், ஆண்டு தோறும் ஆழப்படுத்துவதும், கரைகளை உயர்த்திச்செப்பனிடுதலும் இவர்களின் இன்றியமையாத கடமைகளாகும்.

பாகூரிலிருந்த ஊராளும் கணப்பெருமக்கள் நிர்வாகத்தைக் கவனித்து வந்தனர். புண்ணியகணப் பெருமக்கள் கோயில் நிர்வாகங்களைக் கவனித்து வந்தனர். வேதங்களையும் சாத்திரங்களையும் நன்கு பயின்று, சீரிய ஒழுக்கமும் அறிவாற்றலும் உடைய அந்தணர்களே மேற்கூறிய பொறுப்புக்களை மேற்கொண்டிருந்ததாகக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன.

பாரத்துவாஜி சங்கவி குமாரடி பட்டன், சுப்பிரமணிய பட்டன், காஸ்யபன் எடுத்த பாதம் சுப்பிரமணியன், திருநீலகண்டனை தட்சணாமூர்த்தி பட்டன், சதாசிவ பட்டன், ரிஷபவாகன பட்டன், திருச்சிற்றம்பலப்பட்டன் ஆகிய புண்ணியகணப் பெருமக்களின் பெயர்களைச் சாசனங்கள் குறிப்பிடுகின்றன. வாகூர்ச் சிவன் கோயிலுக்கு வழங்கப்பட்ட அறங்களை இவர்களே ஏற்று நடத்தி வந்தனர். இவர்கட்கு ஊராளும் கணப்பெரு மக்களால் மானியங்களும் விடப்பட்டிருந்தன. [36]

## திருவடி பேரம்பலம்

ஊராளும் கணப்பெருமக்கள் ஊதியம் ஏதுமின்றி உழைப் போராதலின், தமக்கு ஓய்ந்த நேரங்களிலேயே ஊர்ச்சபையைக் கூட்டுவது வழக்கம். மண்டபம், மரத்தின் நிழல் முதலான பொது இடங்களில் அவ்வாறு சபை கூட்டப்பட்டது.

---

34. S. I. I., Vol. VII. No. 804
35. S. I. I., Vol. VII. No. 809
36. S. I. I., Vol. VII, No. 811

பாகூரில் திருவடிபேரம்பலம் என்னும் பெயருடைய மண்டபம் ஒன்று இருந்துள்ளது.[37] கன்னர தேவன் காலத்தே அங்கு ஊர்ச்சபை கூடியதாக அறிகிறோம். இக்காலத்தில் இம்மண்டபம் சுவடற்றுப் போனது வருந்தத்தக்கது. கன்னர தேவனுக்குக் காலத்தால் பிற்பட்டவனான முதலாம் இராசராச சோழன் காலத்துக் கல்வெட்டொன்று, பாகூர்ச் சபையினர் மாத்தினடியில் கூட்டம் குறைவறக் கூடியிருந்ததாகக் குறிப்பிடுகிறது.[38]

## தண்டம் விதிக்கும் முறை

ஊராளும் கணப் பெருமக்கள் எடுத்த முடிவிற்கு உடன் படாமல் மாறுபடுவாரிடத்தும், அம்முடிபினை மறுத்துரைப்பா ரிடத்தும் 25 பொன் தண்டமாக (அபராதம்)வசூலிக்கப்பட்டது.[39] இராட்டிரகூடனான கன்னரதேவன் காலத்துச் சாசனமும், முதலாம் இராசராச சோழன் காலத்துச் சாசனமும் தண்டம் விதிக்கும் பொன்னின் அளவு 25 கழஞ்சு என்றே சுட்டுகின்றன. இவற்றால், ஊர்ச்சபையினர் தண்டம் விதிக்கும் முறையையும் அளவையும் அடிக்கடி மாற்றிக் கொள்ளாமல், முன்னோர் விதித்தவாறே விதித்து வந்தனர் என்பது போதரும்.

# கடம்பேரி

பாகூருக்கு மிக அண்மையில் வடக்கே அமைந்துள்ள ஏரி, புதுவை மாநிலத்தில் உள்ள மிகப் பெரிய ஏரிகளில் முதன்மை யானது. இது சோழர் காலத்தில் வெட்டப்பட்டதாகக் குறிப் பிடுவாரும் உளர்.[40] பாகூரில் உள்ள கல்வெட்டுகளில் மூன்று கல்வெட்டுகள் இதன் பழமையான பெயரைக் குறிப்பிடுகின்றன.[41]

இம்மூன்றனுள் காலத்தால் முற்பட்ட கன்னர தேவனின் சாசனம், இவ்வேரியின் பெயரைக் ‘கடம்பேரி’ என்றும், முதலாம்

---

37. S. I. I., Vol. VII, No. 811
38. S. I. I., Vol. VII, No. 805
39. ஒரு கழஞ்சு என்பது 40 குன்றிமணி அல்லது 1¼ வராகன் எடையுள்ளது.
40. தமிழ்நாட்டு வரலாறு, பக்கம். 65
41. S. I. I., Vol. VII, Nos. 805, 809 & 810.

359

இராசராச சோழனின் கல்வெட்டு கடம்பேரி என்னும் பெயருடன் பேரேரி என்றும் குறிப்பிடுகிறது. இவற்றால், கன்னர தேவன் காலத்துக்கு முன்பே இவ்வேரி இருந்துள்ளமை புலனாகும்.

சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில், பாகூருக்கு அண்மையில் அமைக்கப்பட்ட ஏரிகள் பலவும், அச்சோழ மன்னர்களின் பெயர்களையே பெற்றிருந்தன. காட்டாகச் சில ஏரிகளின் பெயர்களைக் காண்போம்.

பாகூருக்கு வடமேற்கே 16 கி. மீ. தொலைவில் உள்ள திருவுவனை என்னும் ஊரில் அமைந்துள்ள ஏரி, முதற் பராந்தகச் சோழன் காலத்தில் வெட்டப்பட்டது. ஆதலின், அது அம்மன்னனுடைய பட்டத்தரசியின் பெயரால் 'கோக்கிழானடிப் பேரேரி' என்று அழைக்கப்பட்டு வந்தது.[42]

பாகூருக்கு தென்மேற்கே 8 கி. மீ. தொலைவில் அமைந்துள்ள திருவந்திபுரம் தேவநாயகப் பெருமாள் கோயிலின் மண்டபத்தில் வரையப்பட்டுள்ள முதலாம்குலோத்துங்க சோழனின் 22-ஆவது ஆட்சி ஆண்டுடைய (கி. பி. 1092) கல்வெட்டில்,

"ஸர்வாயம் அகப்படத் தன்தருளின நிலத்துக்கு எல்லை இவ்வூர் சொழ கெரளப்பெரேரி உடையெரிப்பட்டு நெல்விளைந்து வருகிற நிலம் சொழ கெரளப்பெரேரித் தொட்டுவாய்க்கு வடக்கும் ராஜெந்திர சொழப் பெரேரிக் கரைக்கு மெற்கும்."

என்ற பகுதி காணப்படுகிறது.[43] இங்கு ஏரிகளின் பெயர்கள் 'சோழகேரளப் பேரேரி' என்றும், 'இராசேந்திர சோழப் பேரேரி' என்றும் சோழ மன்னர்களின் பெயர்களைக் கொண்டிருத்தல் அறியத் தக்கது.

## பல்லவர் காலம்

மேலே குறிப்பிட்டவாறு பாகூர் ஏரி சோழர் காலத்தில் வெட்டப்பட்டிருக்குமாயின், கன்னர தேவன் கல்வெட்டும், இராசராசன் கல்வெட்டும் அச்சோழ மன்னனின் பெயரைத் தவறாது குறித்திருக்கும். அச்சாசனங்கள் அவ்வாறு குறிக்காமல், கடம்பேரி என்று மட்டும் குறிப்பிடுவதால், அது சோழர் காலத்துக்கும் முற்

---

42. A.R.E. 1919. Nos. 189 & 196
43. S.I.I., Vol. VII, Nos. 760 (136 of 1902)

பட்ட ஏரியாகும். எனவே, பாகூர் ஏரி, காடுகெடுத்து நாடாக்கிய காடவர்களான பல்லவர் காலத்தில் அமைக்கப்பட்டதாகக் கொள் வதே பொருத்தமாகும்.

கடம்ப மரங்கள் இவ்வேரிக்குள் மிகுந்திருந்த காரணம்பற்றி, இது பிற்காலத்தில் கடம்பேரி எனப் பெயர்பெற்றது. இவ்வேரிக் குள் இம்மரங்கள் நிறைந்திருப்பதை இப்போதும் காணலாம்.

## ஏரி ஆயம்

வாகூர்ப் பேரேரியைப் பராமரிப்பதற்கு, இதன் நீரைப் பயன் படுத்தும் எல்லா விளைநிலங்களுக்கும், மா ஒன்றுக்குப் பதக்கு நெல் விதம் ஏரி ஆயமாக வசூலிக்கப்பட்டது.[44] இவ்வாறு ஏரி ஆயம் வசூலிக்கும் வழக்கம், பல்லவர் காலம் முதல் தொன்று தொட்டு வருகின்ற வழக்கமாகும்.

ஏரி ஆயமாக வரும் வருவாயைக் கொண்டு, ஆண்டுதோறும் ஏரியின் கரைகள் உயர்த்தப்பட்டன. மதகுகள் செப்பனிடப் பட்டன. ஏரியும் அவ்வப்போது ஆழமாக்கப்பட்டது. இப்பணி களை ஏற்றுச் செய்தவர்கள் அக்காலத்தில் வாகூரில் இருந்த ஏரி வாரியப் பெருமக்களாவர்.

தென்பெண்ணையாற்றிலிருந்து இவ்வேரிக்கு வரும் கால்வாயை அமைத்தவள் வங்காரி என்றும், அதற்குக் கரை அமைத்தவள் சிங்காரி என்றும், ஏரியைக் காத்தவன் எரமடி என்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. தக்க சான்றுகள் இன்மையால் அவை பற்றி இங்கு ஆராயப் புகவில்லை.

## வடமொழிக் கல்லூரி

வாகூரில் வடமொழிக் கல்லூரி ஒன்று செல்வனே நடைபெற்று வந்தமையைப் பல்லவ மன்னனான நிருபதுங்கவர்மனின் செப்பேடு கள் செப்புகின்றன.[45] பல்லவர்கள் பொதுவாக வடமொழி வளர்ச்சியில் நாட்டங் கொண்டவர்களாக இருந்தனர். இதன் விளைவாக நாடெங்கும் வடமொழிக் கல்லூரிகள் தோற்றுவிக்கப் பட்டன. காட்டாகக் கடிகாசலம், காஞ்சி, காவேரிப்பாக்கம் முதலான ஊர்களில் இருந்த கல்லூரிகளைக் குறிப்பிடலாம்.

---

44. S. I. I., Vol. VII, Nos. 805
45. Epigraphia Indica, Vol. XVIII, No. 2

புதுவை மாநிலத்தில் உள்ள திருபுவனையிலும், தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த எண்ணாயிரம் என்னும் ஊரிலும் சோழர் காலத்தில் கல்லூரிகள் இருந்தனவாக அறிகிறோம். 46

## நிருபதுங்கன்

தெள்ளாறெறிந்த நந்திவர்மனுக்கு, அவன் தேவியான சங்கா என்பவளிடத்தில் பிறந்தவனே நிருபதுங்கன். இவனும் இவன் உடன்பிறந்தானாகிய கம்பவர்மனும் பல்லவப் பெரு நாட்டை இருகூறுக்கி ஆண்டனர். நிருபதுங்கன் கி. பி. 850 முதல் 882 முடிய காஞ்சியிலிருந்து ஆட்சி செலுத்தினன். இவனுடைய 8-ஆவது ஆட்சி ஆண்டில் (கி. பி. 858) வாகூர்க் கல்லூரிக்கு மூன்று சிற்றூர்கள் வித்தியானுபோகமாகக் கொடுக்கப்பட்டன.

## மார்த்தாண்டன்

அக்காலத்தில் நிருபதுங்கவர்மனின் ஆதரவை உடையவனும், குருகுலத்தினனும், வேசாலி மாபில் சூரியனை நிகர்த்தவனுமாகிய மார்த்தாண்டன் என்பான் இப்பகுதியில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தான். இவன் அக்காலத்தில் இருந்த குறுநில மன்னனாதல் வேண்டும்.

இவன் தன் ஆளுகைக்கு உட்பட்ட பாகூரில் இருந்த வடமொழிக் கல்லூரியின் சீரான நிர்வாகத்தையும், வளர்ச்சியை யும் விரும்பி, சேட்டுப்பாக்கம், விளாங்காட்டங்கடுவனூர், இறை புனைச்சேரி ஆகிய மூன்று சிற்றூர்களையும் அக்கல்லூரிக்கு நிவந்த மாக வழங்கக் காஞ்சியிலிருந்த நிருபதுங்கவர்மனை வேண்டிக் கொண்டான். அரசனும் உடன்பாடு நல்கினன்.

எனவே, அரசனின் உத்தரவு செப்பேடுகளில் வரையப்பட்டு, வாகூர் நாட்டார்க்கு அனுப்பப்பட்டது. மேற்கூறிய மூன்று ஊர் களின் எல்லைக்கு உட்பட்ட வருவாய் முழுவதும், இக்கல்லூரிக்கே செலவிடப்பட்டது. இவ்வறச் செயல் நிகழ்தற்குத் துணைநின்றவன் உத்தம சிலன் என்ற அமைச்சனாவான்.

காஞ்சி அரண்மனையில் அரசியர்க்கு அணிகலன்கள் இயற்றித் தரும் பெரும் பொறுப்பில், கைவினைக் கலைஞனை ‘ நிருபதுங்கன்’ என்னும் தட்டான் ஒருவன் இருந்தான். அவன் உதிதோதயப்

---

46. ( i ) A. R. E. 1919, No. 176 & Part II. Para. 18
 (ii) A. R. E. 1917, No. 333

பெருந்தட்டான் என்பவனின் மகன். கச்சிப்பேட்டைச் சார்ந்திருந்த கீழ்ப்பைசாரம் என்னும் ஊரினன். வாகூருக்குச் செல்ல வேண்டிய அரசனின் உத்தரவைச் செப்பேடுகளில் வரைந்தவன் இவனேயாவான்.

## நாகயஸ்

வாகூர் வடமொழிக் கல்லூரியில் பணியாற்றிய மறையவர்களில், நாகயஸ் என்பவரும் ஒருவர். இவர் நிருபதுங்கவர்மப் பல்லவனின் புகழையும், அவனுடைய முன்னோர்களின் பெயர்களையும், அன்னோர் தம் சிறப்புக்களையும் இனிய சமஸ்கிருதப் பாடல்களில் அமைத்துத் தந்தார். அப்பாடல்கள் செப்பேடுகளின் முற்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

## வித்தியானுபோகம்

வாகூர் வித்தியாஸ்தானத்தார்க்கு வித்தியானுபோகமாக விடப்பட்ட மூன்று சிற்றூர்களில், விளாங்காட்டங்கடுவனூர் என்பது இன்று 'கடுவனூர்' என்னும் பெயருடன், பாகூருக்கு மேற்கே 5 கி. மீ. தொலைவில் உள்ளது.

இறைபுனச்சேரி என்பது பாகூருக்கு வடகிழக்கே 1.5 கி. மீ. தொலைவில் 'பின்னாச்சிக்குப்பம்' என்னும் பெயரில் அமைந்துள்ள சிற்றூர் என்று கருதப்படுகிறது.[47] சேட்டுப் பாக்கம் என்னும் ஊரைப் பற்றி ஒருதலையாகத் துணிந்துகூற இயலவில்லை.

இக்கல்லூரி இருந்த இடம் சுவடற்றுப் போனது வருந்தத் தக்கது. செப்பேடுகள் அனைத்தும் சிவன்கோயில் எல்லைக்குள்ளேயே கிடைத்திருப்பதைக் கருத்திற்கொண்டால், அக்கல்லூரியும் சிவன் கோயில் பகுதியிலேயே இருந்திருத்தல் வேண்டுமென்று கருதலாம். முற்காலத்துக் கல்லூரிகள் பலவும் கோயிலைச் சார்ந்தே இயங்கி வந்தன என்பது இங்குக் கருதத்தக்கது.

நிருபதுங்கன் காலத்தில் இக்கல்லூரிக்கு நிவந்தம் விடப்பட்டிருந்தமையின், அம்மன்னன் காலத்துக்கு முன்பே இக்கல்லூரி இருந்தமை தேற்றம்.[48] இதனை நிர்வாகம் செய்துவந்த அனைவரும் மறையவர்களாகவே இருந்தனர். கற்பித்த ஆசிரியர்களும் கற்ற

---

47. பல்லவர் வரலாறு, பக்கம். 257

48. Administration & Social life under the Pallavas, Page. 205

மாணவர்களும் மறையவர்களே ஆவர். மாணவர்களுக்கு இங்கு உணவும் உறையுளும் வழங்கப்பட்டன.

இக்கல்லூரியில் பதினென்கு கலைகள், நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், மீமாம்சை, நியாயம், தருமசாத்திரம், புராணம், மருத்துவம், வில்வித்தை, இசை, பொருள்நூல் ஆகியவை கற்பிக்கப் பட்டன என்று கூறுவர்.[49] ஆயினும், இவைபற்றிய குறிப்பெதுவும் பட்டயங்களில் காணப்பெறவில்லை.

சமஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு மொழிகளால் இயன்ற இப் பட்டயங்களின் முழுமையான வாசகங்களையும், அவைபற்றிய விளக் கங்களையும் எனது நூலில் விரிவாக ஆராய்ந்துள்ளேன்.[50] பட்டயங்களைப் பற்றிய சில சுருக்கமான தகவல்கள் அவ்வப்போது வேறுசில ஆசிரியர்களால் குறிக்கப்பட்டுள்ளன.[51]

## சில ஊர்கள்

இறைபுனைச்சேரி, விளாங்காட்டங்கடுவனூர், சேட்டுப்பாக்கம், மாம்பாக்கம், ஊத்தூர், நெல்மலைப்பாக்கம், நென்மலிப்பாக்கம், நெல்வாய்ப்பாக்கம், திரிமான்பாத்தி, சொம்பிலிப்பாக்கம், குருவி மேடு முதலான ஊர்கள், பாகூருக்கு அண்மையில் இருந்த ஊர்க ளாகச் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன.

இவைகளுள் குருவிமேடு என்பது பாகூருக்குத் தென்மேற்கே 1.5 கி. மீ. தொலைவில் குருவிநத்தம் என்ற பெயரில் இன்றும் உள்ளது. திரிமான்பாத்தி என்னும் ஊர், பாகூருக்குக் கிழக்கே 4 கி. மீ. தொலைவில் இன்று கிருமாம்பாக்கம் என்ற பெயரில் உள்ளது. பட்டயங்கள் குறிப்பிடும் பெரும்பாலான ஊர்களை இக்காலத்து அறிந்துகொள்ள இயலவில்லை.

---

49. S. I. I., Vol. II, Part. V, Page. 13

50, பல்லவனும் பராந்தகனும், பக்கம். 93

51. ( i ) La Collège de Bahur au IXème Siècle (Mémoires Orientaux, Paris. 1905, pp. 211–263) M. Vinson
( ii ) S. I. I., Vol. II, Pages. 513–517.
(iii) S. I. I., Vol. IV, Page. 180 F.

வேசாலிப்பாடி, கச்சிப்பேடு, கீழ்ப்பைசாரம், குடந்தை (கும்பகோணம்) புறம்பியம், திருமுனைப்பாடி, அவியனூர், கணிச்ச பாக்கம், ஆயிராஜமங்கல்யபுரம் (திருவதிகை), தஞ்சாவூர் முதலான வேறுபல ஊர்களின் பெயர்களையும் கல்வெட்டுகள் குறிக்கின்றன.

இவற்றுள் கணிச்சபாக்கம் என்பது தென்னார்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டியிலிருந்து வடமேற்கே 3 கி. மீ. தொலைவில் உள்ளது. அவியனூர் என்பதும் பண்ணுருட்டியிலிருந்து வடக்கே 9 கி.மீ. தொலைவில் உள்ளது. பண்ணுருட்டிக்கு அண்மையில் உள்ள திருவதிகை, கல்வெட்டுகளில் ஆயிராஜமங்கல்யபுரம் என்று குறிக்கப்பெறுகிறது.

## அதிகாரிகள்

அம்படுக்கை கோவிந்தபட்ட சோமாசியார் மகன் மதுசூதன விக்கிரமவித்தன் என்பவன், கன்னர தேவன் காலத்தில் பாகூரில் இருந்த அரசியல் அதிகாரி ஆவான்.[52] இவன் மறையவன். செம்பியன் முனைப்பாடி மூவேந்த வேளான், வெள்ளான் ஏறுநி அரையன் காளியுத்தமன், சோழப்பேரையனுன குருவிமேட்டுப் பிச்சன் ஆகியோர் சோழர் காலத்தில் இருந்த அதிகாரிகளாவர். இவர்களெல்லாம் பாடிகாவல் பணியை மேற்கொண்டவர்களாக இருத்தல் வேண்டும்.[53]

## மூலட்டானத்துப் பெருமான்

தில்லை, திருவக்கரை, திருப்பழுவூர், திருப்பாற்றுறை முதலான இடங்களில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான், மூலட்டானத்துப் பெருமான் என்று அழைக்கப்பெறுதல்போல, பாகூரில் கோயில் கொண்டுள்ள இறைவனும் மூலட்டானத்துப் பெருமான் என்று குறிக்கப்பெறுகிறார்.

ஸ்ரீ மூலஸ்தானம் அம்ஸமுடைய திருக்கோவிலுடையார்
ஸ்ரீ மூலட்டானத்துப் பெருமான்

---

52. S. I. I., Vol. VII, No.810.
53. S. I. I., Vol. VII, Nos. 811, 812 & 814.

ஸ்ரீ மூலஸ்தானமுடைய பரமஸ்வாமி
எனக் கன்னர தேவனின் சாசனங்கள் குறிக்கின்றன.[54]

ஸ்ரீ மூலஸ்தானமுடையார்

ஸ்ரீ மூலஸ்தானமுடைய மஹாதேவர்

ஸ்ரீ மூலஸ்தானமுடைய பரமஸ்வாமி

எனச் சோழர்களின் சாசனங்கள் குறிக்கின்றன.[55] இம்மன்னர்களுக்கெல்லாம் காலத்தால் முற்பட்டவரான பல்லவனின் செப்பேடுகளில், கோயிலைப் பற்றிய குறிப்பு எதுவும் காணப்படவில்லை. அதுபோலவே, கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் கல்லூரியைப் பற்றிய குறிப்பெதுவும் காணப்படவில்லை.

சோழர் காலத்தில் இக்கோயில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்ட பின்னரே, புகழ் பெற்று விளங்கியது. மறைந்துபோன எண்ணற்ற தேவாரத் திருப்பதிகங்களில், இத்தலத்தில் பாடியருளிய பதிகங்களும் இருந்திருக்கலாம்.

## பொற்சாலை நங்கை

பொற்சாலை நங்கை என்ற பெயரில் அம்மன் கோயில் ஒன்று தனிக்கோயிலாகச் சிறந்து விளங்கியதைக் கல்வெட்டால் அறிகிறோம். இவ்வம்மனுக்குக் காலை மாலை இருவேளைகளில் திருவமுது படைக்கவும், சந்தி விளக்கு எரிக்கவும் தேவதானங்களாக நிலக்கொடை வழங்கப்பட்டதை, முதலாம் இராசராச சோழனின் சாசனம் ஒன்று புலப்படுத்துகிறது.[56]

இப்போதுள்ள சிவன் கோயில் முகமண்டபத்தில், தெற்கு நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ள அம்மன் கோயில், கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் அமைக்கப்பட்டதாகும். ஏனெனில், சிவனுக்கென்று கட்டப்பட்ட ஆலயத்துக்குள், அம்மன் கோயிலை அமைக்கும் வழக்கம், கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இருந்ததில்லை.[57] எனவே, இக்காலத்திற்குப் பிறகுதான், தனிக்

54. S. I. I., Vol. VII, Nos. 803, 804 & 811.
55. S. I. I., Vol. VII, Nos. 800, 808 & 814.
56. S. I. I., Vol. VII, No. 809.
57. (i) தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பக்கம். 39
(ii) சோழர் கோயிற் பணிகள், பக்கம். 15

கோயிலில் இருந்த பொற்சாலை நங்கையின் திருமேனி, சிவன் கோயிலில் நிறுவப்பட்டதாகக் கொள்ள வேண்டும். அதற்குக் காரணம், தனிக் கோயிலாக விளங்கிய அம்மன் ஆலயம், பழுது பட்டமையாக இருக்கலாம்.

## உமாபிடாரியார்

கன்னரதேவனின் 27-ஆம் ஆண்டுக் (கி. பி. 967) கல்வெட்டு ஒன்றில், உமாபிடாரியாரின் கோயிலைப்பற்றிய குறிப்பொன்று காணப்படுகிறது. பிடாரியாரின் கோயில் முற்பட்ட பழமையான கோயிலாதல் வேண்டும். கோயில் இருந்த இடத்தைக் கல்வெட்டு தெளிவாகக் கூறுகிறது. 'கழுவேறி மேட்டு உமாபிடாரி' என்னும் பெயரால் இதனை உணர்கிறோம். பிடாரியாருக்கு மானியமாக வழங்கப்பட்ட நிலம் 'கழுவேறி மேட்டு உமாபிடாரி என்னும் செறுவு' என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது.[58]

இப்போதுள்ள பிடாரியின் கோயில் ஊருக்கு வடகிழக்கே உள்ளது. அக்கோயில் கி. பி. 1885-ஆம் ஆண்டு தை மாதம் கட்டப்பட்டதாக அங்குள்ள கல்லெழுத்து வரி ஒன்றால் தெரிகிறது. ஆயினும், அது முழுதும் செங்கல்லால் கட்டப்பட்டதாகும்.

'கழுவேறிமேடு' என்னும் சாசனச் செய்திக்கு ஏற்ப, அக் கோயில் மேடான பகுதியில் அமைந்துள்ளது. அதற்குரிய தேவ தான நிலம், அதே இடத்தில் அமைந்திருந்ததைக் கல்வெட்டும் உறுதிசெய்கிறது. இவற்றைக் கருத்திற் கொண்டால், பழமையான உமாபிடாரியின் கோயில் இருந்த இடமும் இதுவே என்பது தெள்ளிதின் புலப்படும்.

பாண்டிய மன்னன் எண்பெருங்குன்றத்து எண்ணாயிரம் சமணர் களைக் கழுவேற்றினான் என்று பெரிய புராணம் கூறுகிறது.[59] கடுமையான குற்றம் இழைத்தோரைக் கழுவேற்றும் வழக்கம் அக்காலத்தில் உண்டு என்பதில் ஐயமில்லை. அது போலவே, "பாகூர்ப் புறநகர்ப் பகுதியில் அமைந்திருந்த மேட்டு நிலத்தில், அக்காலத்து அரசியல் குற்றவாளிகளைக் கழுவேற்றினார்கள்.

---

58. S. I. I., Vol. VII, No. 810.
59. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்தர், செய். 885 & 886.

ஆதலின், அவ்விடம் 'கழுவேறிமேடு' என்று பெயர் பெற்றது. அங்கு நிறுவப்பட்ட பிடாரியார், 'கழுவேறி மேட்டு உமாபிடாரியார்' என்று அழைக்கப்பட்டார்.

இவ்வாறு வாலாற்று அடிப்படையில், அக்கல்வெட்டுத் தொடருக்குப் பொருள் காண்பது, வலிந்து காணும் பொருளாகாது என்றே கருதுகிறோம்.

## கட்டடக் கலை



பாகூர்ச் சிவன் கோயில் – தெற்குச் சுவர்
[முதலாம் பராந்தகச் சோழன் காலம்]
நன்றி : French Institute of Indology – Pondicherry

இராட்டிரகூடர், சோழர் ஆகியோர் காலம் முதல் இன்றளவும் பெருஞ்சிறப்புடன் விளங்கும் மூலட்டானத்துப் பெருமானின் கோயில், பழமையான அமைப்புடைய கற்றளியாகும். கிழக்கு நோக்கி அமைந்துள்ள இக்கற்றளியின் கருவறை சதுர

வடிவானது. அர்த்த மண்டபம் நீள்சதுர வடிவானது. இவை இரண்டும் 12 மீ. நீளமும் 7 மீ. அகலமும் கொண்டவை.

கருவறையும் அர்த்தமண்டபமும் உயரமான பீடத்தின் மீது அமைந்துள்ளன. பீடம் பலவகையான சிற்பங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளன. பீடத்தின்மேல் முப்பட்டை வடிவான குமுதப்படை உள்ளது.

## தேவ கோட்டம்

கருவறைச் சுவர்களில் உள்ள மூன்று தேவகோட்டங்களில், தெற்கே தட்சணாமூர்த்தி தேவர், மேற்கே திருமால், வடக்கே பிரமன் ஆகியோரின் சிலைகள் உள்ளன. அர்த்தமண்டபத்துச் சுவர்களில் உள்ள இரண்டு கோட்டங்களில் தெற்கே நர்த்தன கணபதியும், வடக்கே துர்க்கையும் காணப்படுகின்றனர். இவை அனைத்தும் மூலக்கோயிலைச் சார்ந்த பழமையான சிற்பங்களாகும்.

## கொடுங்கை

ஒரே வளைவுடைய கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசை காணப்படுகிறது. பூதங்கள் பலவகையான இசைக் கருவிகளை இசைக்கின்றன. கொடுங்கையின் மேல் யாளி வரிமானம் உள்ளது. கொடுங்கையை அணி செய்யும் கூடுகளில், மனிதத் தலைகள் செதுக்கப்பட்டுள்ளன. கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் பழமையான நந்தியின் சிலைகள் உள்ளன. விமானம் பன்முறை செப்பனிடப்பட்டமையின் அதன் பழைய அமைப்பு மாறிவிட்டது.

## மகாமண்டபம்

மகாமண்டபத்தின் பீடம் சிறிதளவு தாழ்வாக உள்ளது. அதில் நுண்ணிய வேலைப்பாடுகள் ஏதுமில்லை. சில கற்களில் பழமையான எழுத்துக்கள் காணப்படுகின்றன. அவை சோழர் காலத்தவை என்பதில் ஐயமில்லை. எழுத்து வரிகள் உள்ள கற்பலகைகள், முற்பட்ட பொற்சாலை நங்கையின் தனிக்கோயிலைச் சார்ந்தனவாக இருக்கலாம். எழுத்துக்கள் சிதைந்துவிட்டமையால், அவற்றின் முழுமையான வாசகங்களை அறிந்துகொள்ள இயலவில்லை. இவற்றால், பெருமதிப்புடைய சாசனங்கள் பலவற்றை இழந்துவிட்டோம்.

## தூண்கள்

நான்கு முழுமையான தூண்களும், பக்கச் சுவர்களில் இணைந்துள்ள நான்கு அரைத் தூண்களும் அர்த்தமண்டபத்தைத் தாங்கு

கின்றன. அவை நுட்பமான வேலைப்பாடு கொண்டவை. தூண்களின் அடிப்பகுதி தாமரை இதழ்களை விரித்து வைத்தாற்போலும் இருக்கையை உடையன. பதினாறு பட்டைகளைக் கொண்ட இத்தூண்கள் கலசம், கும்பம், பலகை, போதிகை முதலான உறுப்புக்களைப் பெற்றுள்ளன. போதிகையின் சரிவான இருபக்கங்களும், சுருள் சுருளாக அமைந்துள்ளன.

### காலம்

கோயிலின் கட்டட அமைப்பும் வேலைப்பாடும் முற்பட்ட சோழ மன்னர்களின் கலைப்பாணியைச் சேர்ந்தவை. இங்குக் கன்னர தேவனின் சாசனங்களும் காணப்படுவதால், இக்கோயில் அம்மன்னன் காலத்துக்கு முன்பே கற்றளி ஆக்கப்பட்டமை தேற்றம். அவ்வாறாயின், இது முதற் பராந்தகச் சோழன் காலத்தில் (கி. பி. 907–953) எடுப்பிக்கப்பட்டதாகக் கொள்ளலாம். இக்கோயிலில் இடம்பெற்றுள்ள வேலைப்பாடுகள் இக்கால கட்டத்தையே உறுதி செய்கின்றன.

கருவறையும் அர்த்தமண்டபமும் இணைந்த பகுதியே முதற் பராந்தகன் காலத்து மூலக்கோயிலாக விளங்கியது. ஏனைய பகுதிகளும், பரிவார ஆலயங்களும் பிற்காலத்தில் தோன்றியவை ஆகும்.

> "ஸ்ரீ கன்னரதெவர்க்கு யாண்டு 26-ஆவது
> நமிந(க்)கன் சங்கர(ன்)இப்படைக்கு
> வைச்ச கல்லு நாலு"

என்னும் கன்னரதேவனின் 26-ஆவது ஆண்டுடைய (கி. பி. 966) கல்வெட்டால், இக்கற்றளியின் எஞ்சிய பகுதிகள், இம்மன்னன் காலத்தில் நிறைவு பெற்றதாக அறிகிறோம்.

இக்கல்வெட்டை மட்டும் துணையாகக் கொண்டு, கற்றளி முழுமையுமே கன்னரதேவன் காலத்தில் கட்டப்பட்டதாகக் [61] கொள்வது பொருந்தாது. இத்தகைய ஆராய்ச்சிகளில் அறிஞர்கள் கட்டட அமைப்பையும் துணையாகக் கொள்வர் என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

---

60. S. I. I., Vol. VII, No. 799.

61. புதுவைச் செய்திகள், ஜூலை. 1961, பக்கங்கள். 3 & 4

அறிஞர் துப்ராய் அவர்கள் இக்கோயில் பல்லவரின் கலைப் பாணிக்கும் சோழரின் கலைப்பாணிக்கும் இடைப்பட்ட காலத்தது என்பர். இக்கற்றளியின் பீடத்தில் காணப்படும் பேன் பார்க்கும் குரங்கின் சிற்பமும், தோரணங்களில் இடம் பெற்றுள்ள குரங்கு களின் சிற்றுருவச் சிலைகளும் பல்லவர்களால் தோற்றுவிக்கப்பட்ட மாமல்லபுரத்துச் சிற்பங்களை நினைவூட்டுகின்றன.

"சோழர் காலத்தில் விஜயாலயன் காலம் தொடங்கி, இராஜ ராஜன் காலம்வரை, கோயிற் கலையில் ஒரு குறிப்பிட்ட கட்டம் எனலாம். இக்காலத்தில் பெரும்பாலான கோயில்கள் பல்லவர் கால இறுதியில் எந்த அமைப்பில் இருந்தனவோ அவை போலவே அமைக்கப்பட்டன."

என்று அறிஞர் திரு இரா. நாகசாமி அவர்கள் கருதுவது இங்கு உளங்கொளத் தக்கது.[62] இக்கற்றளியின் அமைப்பு, பல்லவர் காலத்தின் இறுதி கட்டத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகும். அர்த்த மண்டபத்துத் தூண்கள், பல்லவர் காலத்தினின்றும் சோழர் காலத்துக்கு மாறிய கட்டட அமைப் புக்குச் சான்றாகத் திகழ்கின்றன.

"அடிப்பகுதி வட்டமாகவும் மேற்புகுதி எண்பட்டை வடி விலும் தூணின் மேல் தாமரை மலர் விரிந்த நிலையில் உள்ள பலகை அமைந்திருப்பதும் இன்னும் பல்லவர் காலக் கட்டடக் கலையி லிருந்து அக்கால மக்களால் விடுபட இயலவில்லை என்பதைத் தெள்ளெனத் தெரிவிக்கிறது."

என்ற கல்வெட்டு ஆய்வாளர் திரு நடன. காசிநாதன் அவர் களின் கருத்தும் இங்குக் குறிப்பிடத் தக்கது.[63] இங்குள்ள சிவன் கோயிற் கருவறைத் தூண்களும் இக்கருத்துக்கு ஏற்ப அமைந் துள்ளன. எனவேதான், பல்லவரின் கலைப்பாணியைப் பின்பற்றி முற்பட்ட சோழர் காலத்தில் பாகூர்ச் சிவன் கோயில் எடுப்பிக்கப் பட்டதாகக் கருதுகிறோம்.

---

62. தமிழகக் கோயிற் கலைகள், பக்கம். 59

63. காலச் சுவடுகள், பக்கம். 29

இது வட ஆர்க்காடு மாவட்டம், வந்தவாசி வட்டம், கூழம்பந்தல் என்னும் ஊரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழன் காலத்துக் கற்றளியைப் பற்றிய கருத்து. ஒப்புமை கருதி இங்குக் காட்டப்பட்டது.

முற்பட்ட சோழ மன்னர்களில் முதலாம் பராந்தகச் சோழன் காலத்திலேதான், தொண்டை மண்டலத்தில் திருக்காளத்தி வரைச் சோழர்தம் ஆட்சி விரிவாக்கப்பட்டது. மேற்கூறிய காரணங்களைக் கருத்திற்கொண்டு, பாகூர்ச் சிவன் கோயில் அம்மன்னவன் காலத்தில் கற்றளியாக எடுக்கப்பட்டதென்று கருதப்படுகிறது.[64]

## சிற்பங்கள்

கருவறையும் அர்த்தமண்டபமும் அமைந்துள்ள பீடத்தில் அரிய வேலைப்பாடுகள் கொண்ட பல சிற்பங்கள் காணப்படுகின்றன. அங்குள்ள நாட்டிய நங்கையரின் உருவங்கள் வெவ்வேறான அபிநயங்கள் கொண்டுள்ளன. கூந்தல் அலங்காரங்கள் ஒன்றுக் கொன்று வேறுபட்டவை. அணிகலன்கள் அனைத்தும் நுட்பமான வேலைப்பாடு கொண்டவை. கணபதியின் உருவம், காலுயர்த்தி ஆடு கின்ற பூதகணம், குரங்கின் உருவங்கள் ஆகியவை மிக நேர்த்தியாக அமைந்துள்ளன. இவை அனைத்தும் புடைப்புச் சிற்பங்கள் ஆகும்.

மேற்கு பீடத்தின் வடக்கு மூலையில், அரசன் அரசி எனக் கருதத் தக்க நிலையில் இரண்டு சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஆடவனின் சிற்பம் முடியணிந்த தலையுடன் எடுப்பாகக் காட்சியளிக்கிறது. இடப்பக்கத்தே உள்ள பெண்ணின் சிற்பம், அதிக உயரமின்றி ஒயிலாக அமைந்துள்ளது. இவ்விரண்டு சிற்பங் களும் இக்கற்றளியை எடுப்பித்த முதலாம் பராந்தகனும், அவன் பட்டத்தரசியான கோக்கிழானடி என்பவளுமாகவே இருத்தல் வேண்டும்.

## பிடாரர்கள்

கோயில்களில் தேவாரம் முதலான திருப்பதிகங்களை ஓதி வந்தவர்கள், அக்காலத்தில் பிடாரர்கள் என்று பெயர் பெற்றிருந் தனர். திருவாராதனை நேரங்களிலும், இன்றியமையாத கோயில் நிகழ்ச்சிகளிலும், விழாக்காலங்களிலும் பதிகங்களைப் பாடுதலே பிடாரர்களின் இன்றியமையாத கடமைகளாக இருந்துவந்தன.

பாகூர்ச் சிவன் கோயிலில் இவ்வாறு திருப்பதியம் விண்ணப்பம் செய்து வந்த பிடாரர்கள் நால்வர்க்கு நிலக்கொடை வழங்கப்பட் டது. இதனை, முதலாம் இராசேந்திர சோழனின் 17-ஆவது ஆண்டில் (கி. பி. 1029) வரையப்பட்ட சாசனம் ஒன்றால் அறிகிறோம்.[65] கி. பி. 1010-ஆம் ஆண்டில், இக்கோயிலில் பணியாற்றிய பிடாரன்

---

64. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், பக்கம். 399 & 403.
65. S. I. I., Vol. VII, No. 801.

ஒருவனின் பெயர், மயக்கன் என்று இம்மன்னனின் மற்றொரு கல்வெட்டு குறிப்பிடுகிறது."[66]

## தேவரடியார்

"இஞ்ஞாட்டிற் கட்டிலெறு மன்றுடி வசமொரு ஆடு குடுப்ப தாகவும் குடாது திறம்பினரைக் கணப்பெருமக்களும் தெவ ரடியாரு மிரண்டாடுபிடித்துக் கொள்ளப் பெறுவதாகவும்"

என்னும் கன்னரதேவனின் 22-ஆவது ஆண்டுக் (கி. பி. 962) கல்வெட்டுப் பகுதியால், 67 இக்கோயிலில் தேவரடியார்களும் தொண்டாற்றி வந்தனர் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

"நம்முர் ஸ்ரீமுலஸ்தானமுடைய பரமஸ்வாமிக்கு வெதம் வல்ல பிராம்ஹணரைக் கொண்டு திருவாராதனை செய்வதுக்கும் நெல்லி எத்தத்துத் தண்ணிர் திருமஞ்சன நிர் அட்வானுக்குமாக"

என்னும் கன்னரதேவனின் 27-ஆவது ஆண்டுக் (கி. பி. 967) கல்வெட்டுப் பகுதியால், 68 இறைவனின் திருமுழுக்காட்டுக்கு வேண்டும் திருமஞ்சனநீர் இறைத்துத்தருவோர் இருந்தனர் என்பதை அறிகிறோம். இராசராச சோழன் காலத்துக்கு முன்பே இக்கோயில் சிறப்புடன் விளங்கியதை இச்சாசனங்கள் புலப் படுத்துகின்றன.

## நந்தவனங்கள்

கோயிலுக்குச் சொந்தமாக இரண்டு பெரிய நந்தவனங்கள் இருந்தன. 69 அவற்றுள் ஒன்று 'கங்கை கொண்ட சோழன் திருநந்தவனம்' என்றும், மற்றொன்று 'மதுராந்தகன் திருநந்த வனம்' என்றும் பெயர் பெறும். இவை இரண்டும் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தவையாகும். இம்மன்னனின் சிறப்புப் பெயரால் இவை அழைக்கப்பட்டன.

இவற்றில் மா, பலா, பூஞ்செடிகள், தென்னை முதலானவை நிறைந்திருந்தன. இவற்றால் கிடைக்கும் கனிகளும் காய்களும் இறைவனின் திருவமுது படையலுக்குப் பயன்படுத்தப்பட்டன. பூக்கள் திருப்பள்ளித்தாமமாக விளங்கின.

---

66. S. I. I., Vol. VII, No. 808.
67. S. I. I., Vol. VII, No. 804.
68. S. I. I., Vol. VII, No. 811.
69. S. I. I., Vol. VII, No. 801.

## அளவை

"ஆடவல்லான் பக்கல் நாங்கள் கொண்ட (கு) திருமூலன் மாக்காலால் ஐ 20 ள இ (குபதின்) கலமும் கொண்டோம்.... நித்தம் சிறுகாலை ஸந்தி திருமூலன் நாழியாலிரு நாழி அரிசியும்"

என்னும் இரண்டாம் இராசேந்திர சோழன் காலத்துச் சாசனத்தால்,[70] இக்கோயிலில் பயன்படுத்தப்பட்டு வந்த மாக்கால், நாழி ஆகிய முகத்தல் அளவைக் கருவிகள், முறையே திருமூலன் மாக்கால் என்றும், திருமூலன்நாழி என்றும் இறைவனின் பெயராலேயே குறிக்கப்பட்டன.

## அறச்செயல்

வேதம் ஓதுகின்ற சிவப்பிராமணர்களுக்கும், திருமஞ்சனநீர் அட்டுவானுக்கும், திருப்பதிகங்கள் ஓதுகின்ற பிடாரர்களுக்கும் மானியங்களாக நிலங்கள் கொடுக்கப்பட்டன. பொற்சாலை நங்கை என்னும் பெயருடைய அம்மனுக்கும், தட்சணாமூர்த்தி தேவருக்கும் அமுதுபடையல், சந்தி விளக்கு எரித்தல் ஆகியவற்றுக்கும்; திருமெய்ப்பூச்சு, திருப்பள்ளித்தாமம், திருப்பரிச்சட்டம், சிதாரி முதலான தேவைகளுக்கும் நிலதானங்கள் செய்யப்பட்டன.

## குலோத்துங்கன் சந்தி

முதற் குலோத்துங்கசோழன் காலத்தில், அம்மன்னன் பெயராலேயே இக்கோயிலில் குலோத்துங்கன்சந்தி என்னும் சிறப்பு வழிபாடு ஒன்று நிகழ்த்தப் பெற்று வந்தது.[71] நந்தா விளக்கு எரிப்பதற்கு என்று ஆடுகள் கொடுக்கப்பட்டன.

நமிநக்கன் சங்கரன், மதுசூத விக்கிரம வித்தன், தாமோதரன், பொற்காமன் புலியன், மாதங்கை, திருமூலட்டானப்பிச்சி, குருவி மேட்டுப் பிச்சன், பூவனழகு, பள்ளிகேசன் சேந்தன், ஆடவல்லான் முதலான அறவோர்களைப் பற்றிய அறச்செயல்கள் சாசனங்களால் புலப்படுகின்றன.

---

70. S. I. I., Vol. VII, No. 798.
71. S. I. I., Vol. VII, No. 813.

# திண்டிவனமும் திருவோத்தூரும்

முற்காலத்தில் திருமாங்கோயில் வாணகோவரையன் என்னும் சிவப்பிராமணன் ஒருவன் பாகூரில் இருந்தனன். இவன் 'புத்தன் இராசிங்கன்' என்ற வாணர் குலத்துத் தலைவனின் ஆணையை ஏற்று, திண்டிவனத்தில் உள்ள திருத்திண்டீசுரமுடைய மகாதேவரின் கோயிலில் கல்மண்டபம் ஒன்று எடுப்பித்தான்.

இதனை திண்டிவனத்துச் சிவன் கோயிலில் உள்ள கல்வெட்டுப் பாடல் ஒன்று குறிப்பிடுகிறது. நேரிசை வெண்பாவாக அமைந்த அப்பாடலின் மேலும் கீழும் செய்திகள் வரையப்பட்டுள்ளன.[72]

"ஸ்வஸ்திஸ்ரீ

சீராருந் தென்கிடங்கிற் றிண்டீச் சரத்தானுக்
கோராருங் கன்மண் டபமெடுத்தான் – பாராரும்
பொன்னனை பூமகள்சேர் புத்தன் இராசிங்க
னென்னுணை ஆறைய ரேறு
புத்தன் இராசிங்கன் எவத் திருத்திண்டிஸ்வர
முடையார் மண்டபஞ் செய்வித்தான் வாகூர்
சிவப்பிராமணன் திருமாங்கொயில் வாணகொவரையன்"

"பழம் பெருமை வாய்ந்த பாகூர், தேவாரப் பதிகங்களில் வைப்புத்தலமாகக்கூட இடம்பெறவில்லையே' என்று வருந்துகின்றவர்கள், மேற்காட்டிய கல்வெட்டுப் பாடலை நினைத்து அமைதி அடைவாராக.

---

72. S. I. I., Vol. VII, No. 837 (A. R. E. 1902, No. 210)
செய்யுளின் இரண்டாம் அடிக்கு 'ஓர் அருங்கல் மண்டபம் எடுத்தான்' என்று பொருள் கொள்க. ஆறையர் என்றது வாணகோவரையரை. ஆறகலூர், ஆறைநகர் என்ற பெயர்களை உடைய நகரம், வாணகோவரையரின் வாணகப்பாடி நாட்டுக்குத் தலை நகராக இருந்தது. அது சேலம் மாவட்டத்தைச் சார்ந்த ஆத்தூர் என்று கருதுவர். (See also S. I. I. Vol. XII, No. 235). ஆயினும், சேலம் மாவட்டம் தலைவாசல் என்னும் ஊருக்கு அணித்தாக உள்ள ஆறகலூர் என்னும் ஊரே வாணகோவரையரின் ஆறைநகர் ஆகும்.

வடார்க்காடு மாவட்டம், செய்யாறு வட்டம், திருவோத்தூர் என்னும் ஊரிலுள்ள சிவன் கோயிற் கல்வெட்டு ஒன்று கீழ்க்கண்டவாறு காணப்படுகிறது. [73]

"ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துக் காழியூர் நாட்டுத் திருவொத்தூருடையார்க்கு நடுவில் நாட்டு வெசாலி நாட்டு வாகூரில் இருக்கும் மன்றுடி பாதாளி எச்சில் நம்பியான அமுதவல்லவக் கொன் வைத்த திருநந்தா விளக்கு ஒன்றுக்கு விட்ட ஆடு தொண்ணூறு ஆடு தொண்ணூறும் கைக்கொண்டு இத்திருநந்தா விளக்கு ஒன்றும் சந்திராதித்தவரை செலுத்தக் கடவெனாக கைக்கொண்டென் இத்தெவர் திருநந்தா விளக்குப்படி திருவெண்காட்டுக் கொனென் இவை என்னெழுத்து இது பன்மாஹேஸ்வர ரக்ஷை"

இது மூன்றும் இராசேந்திர சோழனின் 2-ஆவது ஆண்டில் (கி. பி. 1248) வரையப்பட்டது. அக்காலத்தில் நமது வாகூரில் இருந்த அமுதவல்லவக்கோன் என்பவன், திருவோத்தூர் இறைவனுக்கு நந்தாவிளக்கு ஒன்று எரிப்பதற்குத் தொண்ணூறு ஆடுகளைக் கொடையாக வழங்கினன். திருவோத்தூரில் இருந்த திருவெண்காட்டுக்கோன் என்பவன், அவ்வறச் செயலைத் தான் ஏற்று நடத்துவதாக ஒப்புக்கொண்டு, அவ்வாடுகளைப் பெற்றுக் கொண்ட செய்தியை இக்கல்வெட்டுப் புலப்படுத்துகிறது.

முற்காலத்தில் வாகூரில் இருந்த அறவோர்களில் சிலர், வேற்றூர்களிலும் சிவப்பணி செய்துள்ளனர் என்பதைத் திண்டிவனம், திருவோத்தூர் முதலான இடங்களில் உள்ள மேற்காட்டிய சாசனங்களால் உணரலாம்.

## செப்புப் படிமங்கள்

இற்றைக்கு ஏறத்தாழ 30 ஆண்டுகளுக்கு முன்னர், பாகூரில் உள்ள திரௌபதி அம்மன் கோயிலின் பின்புறத்து நிலத்தை அகழ்ந்தபோது, அங்கிருந்து தட்டங்கள், நிலைவிளக்குகள், சங்கு, சக்கரம் முதலான செப்புப் பொருட்களும், திருமால், அவர்தம் தேவியர் இருவர், சிறிய திருவடி முதலானோரின் செப்புத் திருமேனிகளும் கிடைத்தன.

---

73. S. I. I., Vol. VII, No. 94 (85 of 1900)

பாகூரில் இப்போதுள்ள மாதாக்கோயில் இருக்கும் இடத்தில், முன்பு திருமால் கோயில் இருந்ததாகக் கூறுவர். பிரெஞ்சியரின் ஆட்சிக் காலத்தில் திருமால் கோயில், இப்போதுள்ள மாதாக் கோயிலாக மாற்றப்பட்டபோது, அங்கிருந்த செப்புத் திருமேனி களும் பிறவும், அருகில் இருந்த பள்ளம் ஒன்றில் இட்டு மறைக்கப் பட்டதாகக் கேள்விப்படுகிறோம்.

இத்திருமேனிகள் மீண்டும் கிடைத்தபொழுது, இவற்றைப் பிரான்ஸ் நாட்டுக்கு எடுத்துச்செல்ல அன்றைய ஆட்சியாளர்கள் முயன்றனர். ஊர் மக்களின் நன்முயற்சியால், அவ்வாறு நிகழாமல் தடுக்கப்பட்டதாக அறிகிறோம். பல்லவர் காலத்து பாகூர்ச் செப் பேடுகள், இவ்வாறு பாரிஸ் நகருக்குக் கொண்டு செல்லப்பட்டது இங்கு நினைவு கூரத்தக்கது.

செப்புத் திருமேனிகளையும் அவற்றுடன் கிடைத்த பிற பொருட்களையும் இன்றும் பாகூரில் காணலாம். இவ்வூரில் இருந்த தாகக் கருதப்படும் திருமாற் கோயிலைப்பற்றிய குறிப்பெதுவும் சிவன் கோயிற் கல்வெட்டுகளில் காணபடவில்லை. ஆயினும், பழைய திருமால் கோயிலின் கருங்கற் பகுதிகள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. பழமையான திருமாலின் சிற்பம் ஒன்றை, படப்பன் குளத்துக்கு அருகில் உள்ள விநாயகர் கோயிலில் காண் கிறோம். இரண்டாண்டுகளுக்கு முன்னர், இங்குள்ள தாமரைக் குளத்தை அகழ்ந்தபோது, அங்குச் சோழர் காலத்துச் செங்கற் களும், விநாயகர் முதலான புடைப்புச் சிற்பங்களும் கிடைத்தன. இவை எல்லாம் முற்காலத்துக் கற்றளியின் சிதைவுகளாகும்.

பாகூரின் சிறப்புக்களைக் கூறவல்ல பாடல்களைக் கொண்ட பழமையான ஓலைச்சுவடிகள், இப்பகுதியில் இருப்பதாகக் கேள்விப் படுகிறோம். அவை பாகூரின் தலபுராணமாகவே இருத்தல் வேண் டும். அச்சுவடிகளைப் பெறுவதற்கு யான் எடுத்துக்கொண்ட முயற்சி கள் பயனற்றுப்போயின. காலப் போக்கில் அவை வெளிப்படக்கூடும்.

பாகூரைப்பற்றி இதுகாறும் கூறிய அனைத்துச் செய்திகளாலும் அதன் பழமையான பெயர் பற்றியும், பல்லவர் இரட்டர் சோழர் வாணகோவரையர் கிருட்டினதேவராயர் ஆகியோர் காலத்தில் அது பெற்றிருந்த உயர்வு பற்றியும் தெளிவாக அறிகிறோம்.

அவற்றுடன் பழமையான கல்விச்சாலைக்கும், சிவத்தளிக்கும் இருபிடமாகவும், சான்றோர்களின் வாழ்விடமாகவும், அறிஞர்க்கான நல்லிடமாகவும், அரசியல் தலைவர்களின் தலைமை இடமாகவும் புகழ் பெற்றுச் சிறந்து விளங்கியதைத் தெள்ளிதின் உணர்கிறோம்.

## பாகூர்ச் சிவன் கோயிலில் உள்ள
## புதிய கல்வெட்டுகள்



*கன்னரதேவன் கல்வெட்டுகள்*
*[கி. பி. 959 & 964]*

*நன்றி :* French Institute of Indology - Pondicherry

இப்பகுதியில் உள்ள 6 சாசனங்களும் பாகூர்ச் சிவன் கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள் ஆகும். இதுகாறும் இவை இந்திய

தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் படி எடுக்கப்பட்டு வெளியிடப்படவில்லை. ‘பல்லவனும் பராந்தகனும்’ என்னும் எனது நூலில், இவற்றைச் சேர்க்க முயற்சித்தேன். ஆயினும், சுண்ணாம்புப் பூச்சு, இருட்டு, போதிய உதவி இன்மை முதலான இடையூறுகளால், அவற்றைப் பிழையின்றி முழுமையாகப் படித்தறிய முடியவில்லை.

இப்போது சில அன்பர்கள் எனக்குப் போதிய அளவு உதவி செய்து கொடுத்தமையால், அவற்றின் வாசகங்களைப் படித்தறிய முடிந்தது. அக்கல்வெட்டுகளில் புதிய செய்திகள் பல இடம் பெற்றுள்ள. அவை பெருமதிப்புடைய சாசனங்களாக இருத்தலின், அவற்றின் வாசகங்களை இங்கு முழுமையாகத் தந்துள்ளேன். வேண்டிய அளவு விளக்கங்களும் வரைந்துள்ளேன்.

## எண் : I

இடம் : அர்த்த மண்டப வாயிலின் இடதுபக்கச் சுவர்

அரசன் : கன்னர தேவன் (இராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன்)

ஆட்சி ஆண்டு : 19 (கி. பி. 959)

மொழி : தமிழ்

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகன்னர தெவர்க்கு யா
2. ண்டு பத்தொன்பதாவது வாகூர் ஸ்ரீமுலஸ்தா
3. னத்து மஹாதெவர்க்கு இறைப்புணைச்செரியு
4. டையான் வாட்டுழி நாநூற்றுவநாகிய மும்மு
5. டிச் சொழப் பல்லவரையன் சன்திராதித்த
6. வல் வய்த்த நன்தா விளக்கொன்றினுக்கு வைத்
7. த சாவாமுவா பெராடு தொண்ணூறு இவை
8. பந்மாஹெஸ்வர ரக்ஷை.

### அறச்செயல் :

‘இறைபுணைச்சேரியுடையான் வாட்டுழி நானூற்றுவனாகிய மும்முடிச் சோழப் பல்லவரையன்’ என்னும் கொடையாளன், இறைவனுக்கு ஒரு நந்தாவிளக்கு எரிக்க, 90 ஆடுகளைக் கொடையாக வழங்கியதை இச்சாசனம் கூறுகிறது.

**விளக்கம் :**

இக்கல்வெட்டில் வருகின்ற 'இறைபுனைச்சேரி என்னும் சிற்றூர், பல்லவனான நிருபதுங்கவர்மனின் பாகூர்ச் செப்பேடுகளிலும் வருகிறது. அம்மன்னன் காலத்தில், பாகூரில் இருந்த வடமொழிக் கல்லூரிக்கு வித்தியானுபோகமாக விடப்பட்ட மூன்று சிற்றூர்களில் இதுவும் ஒன்று. 74

'வாட்டுழி நானூற்றுவன்' என்பது கொடையாளனின் இயற்பெயர். இவன் 'மும்முடிச் சோழப் பல்லவரையன்' என்னும் பட்டமுடைய அதிகாரி, இறைபுனைச்சேரியை இருப்பிடமாகக் கொண்டவன்.

## எண் : II

இடம் : அர்த்தமண்டப வாயிலின் இடதுபக்கச் சுவர்

அரசன் : கன்னரதேவன் (இராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன்)

ஆ. ஆண்டு : 24 (கி. பி. 964)

மொழி : தமிழ்

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகன்னர தெவக்கு யா
2. ண்டு 24 வது வாகூர் ஸ்ரீ முலஸ்தான
3. த்து மஹாதெவர்க்கு திருவாப்பாடி இரு
4. க்கு (ம்) மன்றுடி கொனூர் நக்கன் வைத்த ந
5. ந்தா விளக்கு அரைவிக்கு வைத்த ஆடு
6. நாப்பத்தாறு இவை சந்திராதித்தவல்.

**அறச்செயல் :**

'கோனூர் நக்கன்' என்னும் கொடையாளன் ஒருவன், விளக்குத் தானமாக 46 ஆடுகள் வழங்கியதை இச்சாசனம் குறிக்கிறது.

---

74. Epigraphia Indica, Vol. XVIII, No. 2 &
S. I. I., Vol. II, Page. 514

விளக்கம் :

இக்கொடையாளன் திருவாப்பாடி என்னும் ஊரினன். திருவாப்பாடி என்பது, பாகூருக்கு மேற்கே 2 கி. மீ. தொலைவில் உள்ள திருப்பணும்பாக்கம் என்னும் சிற்றூராக இருக்கலாம். 'மன்றுடி' என்பது இடையர்களைக் குறித்து வழங்கும் சொல்லாகும். ஆதலின், இக்கொடையாளன் இடையர் குலத்தைச் சேர்ந்தவன் என்பது இங்குக் கருதத் தக்கது. 'நந்தாவிளக்கு அரை' என்பது '30 நாழிகை நேரம் இடைவிடாமல் எரிகின்ற விளக்கு' என்று பொருள்படும். 60 நாழிகை (ஒரு நாள்) நேரமும் இடைவிடாமல் எரிகின்ற விளக்கு ஒன்றுக்கு, 90 ஆடுகளைக் கொடையாக வழங்குவது அக்கால வழக்கமாகும்.

## எண் : III

இடம் : அர்த்தமண்டப வாயிலின் வலது பக்கச் சுவர்

அரசன் : கன்னரதேவன் (இராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன்)

ஆ. ஆண்டு : 24 (கி. பி. 964)

மொழி : தமிழ்

1. ஸ்ரீகன்னர தெவர்க்கு யாண்டு 24 வது வா
2. கூர் ஸ்ரீமூலஸ்தானத்து மஹாதெவர்க்
3. கு கரை உடையான் கலியன் மன்றுடிய்
4. ஐயன்ஞகிய இராஜாதி(த்) தப் பெரரைய
5. ன் திருஉண்ணாழிகையில் முன்பில் ம
6. ண்டபத்தில் மெலக்கடைக ஒழுகில்
7. தூண் இரண்டும் அரைக்கால் இரண்டு (ம்)
8. உத்திரமும் இவ்வொழுகுக்கு வெண்டுவ
9. ன எல்லாஞ் செ(ய்)து வைத்தான்
10. இது சந்திராதி(த்) தவல் உ.

அறச்செயல் :

'கரையுடையான் கலியன் மன்றுடி ஐயன்' என்னும் கொடையாளன், கருவறைக்கு முன்னல் மண்டபம் ஒன்று நிறுவதற்கு இரண்டு முழுத்தூண்கள், இரண்டு அரைத்தூண்கள், உத்திரம் முதலானவற்றை வழங்கிய செய்தியை இச்சாசனம் புலப்படுத்துகிறது.

விளக்கம் :

மேலக்கடை ஒழுகு – மேற்குப் பக்கமாக அமைந்த நான் வரிசை. திருஉண்ணாழிகை – கருவறை (மூலஸ்தானம்). இக்கல் வெட்டில் வருகின்ற 'திருஉண்ணாழிகை முன்பில் மண்டபம்' என்ற தொடருக்கு, 'கருவறைக்கு முன்புள்ள அர்த்தமண்டபம்' என்று பொருள் கொள்ளாமல், 'மகா மண்டபம்' என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இச்சாசனத்திற்குக் காலத்தால் முற்பட்ட இம்மன்னனின் சாசனம் ஒன்றும், (எண் : I) அர்த்த மண்டபச் சுவரில் இடம்பெற்றிருப்பதைக் கருத்திற் கொண்டு, இவ்வாறு பொருள் செய்கிறோம்.

அன்றியும் கருவறையை ஒருகாலத்திலும், அதனைச் சார்ந்த அர்த்த மண்டபத்தை வேறொரு காலத்திலும் அமைக்கின்ற வழக்கம் நம்மனோர்க்கு இல்லை. எனவே, கரையுடையான் கலியனின் நான் கனையும், உத்திரத்தையும் கொண்டு எடுப்பிக்கப்பட்டது மகா மண்டபமே ஆகும், கி. பி. 964-ஆம் ஆண்டில் கட்டப்பட்ட இம் மண்டபம் அழிந்துவிடவே, அங்கு இன்றுள்ள புதிய மண்டபம் நிறுவப்பட்டது.

கி. பி. 966-ஆம் ஆண்டில் வரையப்பட்ட கன்னரதேவனின் மற்றுமொரு சாசனத்தில், 'நமிநக்கன் சங்கரன்' என்னும் கொடையாளன், இக்கோயிலுக்காக நான்கு கற்பலகைகள் வழங்கிய செய்தி காணப்படுகிறது.[75] கன்னரதேவனின் இவ்விரு கல்வெட்டுச் செய்திகளையும் ஒப்புநோக்கிக் காணுமிடத்து, இம்மன்னன் ஆட்சிக் காலங்களில், இக்கோயில் பலவாறு வளர்ச்சியடைந்தமை தெள்ளி தின் புலனாகும்.

## எண் : IV

இடம் : அர்த்தமண்டப வாயிலின் இடதுபக்கச் சுவர்.

அரசன் : ஆதித்த கரிகாலன். இவன் வீரபாண்டியன் என்னும் பாண்டிய மன்னன் ஒருவனைக் கொன்ற காரணத்தால், 'வீரபாண்டியன் தலைக்கொண்ட கோப்பரகேசரிவர்மன்' என்று கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறான். இரண்டாம் பராந்தகனான சுந்தர சோழனின் மூத்த புதல்வன். முதலாம் இராசராச சோழனின் தமையன். வரலாற்று ஆசிரியர்கள் இவனை இரண்டாம் ஆதித்தன் என்றும் குறிப்பிடுவர்.

---

75. S. I. I. Vol. VII. No. 799 (172 of 1902) &
பல்லவும் பராந்தகனும், பக்கம். 107.

ஆ. ஆண்டு : 3 (கி. பி. 969)
மொழி : தமிழ்

1. ஸ்வஸ்திஸ்ரீ விரபாண்டியன் தலைகொண்ட கொ
2. பரகெஸரிபந்மக்கு யாண்டு 3 வது வாகூர் ஸ்ரீமு
3. லஸ்தானத்து மஹாதெவக்குச் செம்பூர்க் கொட்டத்து
4. நெதிமுர் நாட்டுக் கரை உடையான் கலியன் மன்ருடி ஐய்ய
5. ன்ருகிய ஆசாரகாந்தப்(?)பல்ல(வ)
6. ரையன் சந்திராதி(த்)தவல் வைத்த ந
7. ந்தா விளக்கொன்றினுக்கு வைத்த சாவா
8. மூவாப் பெராடு தொண்ணூற்கு (நின்)று
9. எரிய வைத்த நிலை விளக்கொ
10. ன்று இவை பன்மாஹெஸ்வ
11. ர இரக்ஷை உ.

## அறச்செயல் :

'கரைஉடையான் கலியன் ஐயன்' என்னும் கொடையாளன், விளக்குத் தானமாக 90 ஆடுகள் வழங்கியதை இச்சாசனம் கூறுகிறது.

## விளக்கம் :

இக்கொடையாளன் செம்பூர்க் கோட்டத்து நேதிமூர் நாட்டைச் சேர்ந்தவன். தொண்டை மண்டலத்தில் உள்ள 24 கோட்டங்களில் இதுவும் ஒன்று. நேதிமூர் நாடு என்பது, அக்கோட்டத்தின் ஒரு உட்பிரிவாகும்.

இக்கல்வெட்டில் குறிக்கப்பெறும் 'கரையுடையான் கலியன் ஐயன்' என்னும் கொடையாளனும், கல்வெட்டு எண் : III இல் குறிக்கப்பெறும் 'கரையுடையான் கலியன் மன்ருடி ஐயன்' என்னும் கொடையாளனும், ஒரே காலகட்டத்தில் இருந்த வெவ்வேறு அதிகாரிகள் ஆவர். பேரரையன், பல்லவரையன் என்னும் இவர்தம் வெவ்வேருன பட்டப் பெயர்களைக் கொண்டு இம்முடிபுக்கு வருகிறோம்.

எண் : V

இடம் : அர்த்தமண்டப வாயிலின் இடதுபக்கம் – குமுதப் படை.

அரசன் : ஆதித்தகரிகாலன்

ஆ. ஆண்டு : 5 (கி. பி. 971)

மொழி : தமிழ்

1. ஸ்வஸ்திஸ்ரீ பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேஸரிபந்மற்கி யாண்டு 5
2. ஆவதுக்கு எதிராமாண்டு வாகூர் ஸ்ரீ மூலஸ்தான முடையாற்கு இவ்வூர் யாளும்
3. பெருமக்களுள் பாவைகாலத்தி பெருமானார் மகன் (பெருங்) கொன்றை நம்பி கு
4. ம் அம்படுகை சோமாசிபட்டர் மகன் நம்பி.....யவனும் இவ்விருவரு ..
5. ம் திருமஞ்சன நிர்கு தண்ணிர் அமுதுக்குமாக வைச்ச பொன் முப்பதின் கழஞ்சு இப்
6. பொன் முப்பதின் கழஞ்சும் கலபொலி(சை) யெறி வந்த நெல் முப்பதின் கல நெல்லு
7. க்குமாக நிசதம் ஆறு.....முன்று ஸந்தியும் அபிஷெகம் நெல்லியெத்(த)மதி
8. ல்நிர் தண்ணிர் அமுதுங் கொண்டு அபிஷெகமும் செய்வொமானோம் புண்ணி
9. யகனத்து பெருமக்களோம் இய(ன்ம)ம் முட்டில் இது வைத்த வைத்தான் வேண்டுத
10. ......நிசதம் அரைகால் பொன் மன்றுவதாகவும் சமதி [76]

அறச்செயல் :

நாள்தோறும் மூன்று வேளைகளிலும் இறைவனுக்குத் திருமுழுக்காட்டு (அபிஷேகம்) நிகழ்த்தும் பொருட்டு, நெல்லி ஏற்றத்தின் மூலமாக நீர் இறைத்துத் (திருமஞ்சனநீர்) தருவதற்கும்,

---

76. இதன் இறுதிப் பகுதி கீழே மறைந்துள்ளது.

திருவமுது படைப்பதற்கும் அறவோர் இருவரால் 30 கழஞ்சு பொன் மூலதனமாக வைக்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது.

**விளக்கம் :**

அக்காலத்தில் பாகூரில் செயல்பட்டு வந்த ஊர்ச்சபையில், பாவை காளத்திப் பெருமான் மகனும், சோமாசி பட்டர் மகனும் உறுப்பினர்களாக இருந்தனர். இவ்விருவரும் மேற்கூறிய அறச் செயலுக்காக 30 கழஞ்சு பொற்காசுகளை மூலதனமாக வழங்கினர். இக்காசுகளைப் பெற்றுக்கொண்ட கோயில் நிர்வாகத்தினர், அக் காசுகளால் வருகின்ற 30 கலம் வட்டி நெல்லைக் கொண்டு, அவ்வறங்களை நிறைவேற்றுவதாக ஒப்புக்கொண்டுள்ளனர். ஒரு கழஞ்சு என்பது 40 குன்றிமணி எடையுள்ள பொன்னாகும்.

## எண் : VI

இடம் : அர்த்தமண்டப வாயிலின் இடதுபக்கச் சுவர்
அரசன் -: முதலாம் இராசேந்திர சோழன்
ஆ. ஆண்டு : 6 (கி. பி. 1018)
மொழி : தமிழ்

1. ஸ்வஸ்திஸ்ரீ திரு
2. மந்னி வளர இரு நி
3. ல மடந்தையும்
4. பொற்சயப்பாவை
5. யும் சிர்த்தனிச்செ
6. ல்வியுந் தன்பெருந்
7. தெவியாகி இந்
8. புறுநெடுதிய
9. லூழியுள் இடது
10. றை நாடுந்துடர்
11. வனவெலிப்படர்
12. வனவாசியும் சு
13. ள்ளி சூழ்மதிள்
14. கொள்ளிப் பாக்கை

15. யும் நன்னற்
16. கருமுரண்மன்
17. னைக் கடக்கமும்
18. பொருகடல்லிழ
19. த் தரையர்தம்
20. முடியும் ஆங்கவர்
21. தெவியர்ரொங்
22. கெழில் முடியும்
23. முந்னவர் பக்க
24. ல் தெந்னவந்
25. வைத்த சுந்தா
26. முடியும் சந்திர
27. ன்றாமும் தெ
28. ண்டிரை இழ ம
29. ண்டலமுழு
30. வதும் எரிப
31. டைக் கொளந்
32. முறைமயிற்கு
33. டுங் குலதனமா
34. கியபலர் பு(க)ழ் மு
35. டியும் செங்கதிர்
36. மாலையும் சங்கதிர் வேலைத் தொல்பெருங் காவல் பல்பழந் திவும் மாப்பெரு தண்டா
37. ல் கொண்ட கொப்பரகெஸரிபந்மரான ஸ்ரீராஜெந்திர சொழ தெவற்கு யாண்டு
38. 6 ஆவது சயங்கொண்ட சொழ மண்ட லத்து வெசாலிப்பாடி வடகரை
39. வாகூரான ஸ்ரீ அழகிய சொழச் சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீ முலஸ்தானமுடையாற்கு இ(வ்)வூர் யாளும்
40. பெருமக்களுள் பாவைக் காளத்திப் பெருமாள் கிரமவித்தந் மகந் பெருங்கொன்றை நம்பியெனும்
41. இவன் தம்பி சொமாசி பெருமாள்......இவன் தம்பி மதிருத னென்நும் இ(க்)குடி மதிருத(வக்)கிரம
42. வித்தந் மகந் பெருங்கொன்றை நம்பியெநும் இவந் தம்பி நந்திபெருமாளென்நும் இவ்வனைவொம்

43. ...... பெருங்கொன்றை நம்பி திருமஞ்செனநிர்கு தண்ணிர் அமுதுகும் பாண்டியனே தலேகொ
44. ண்ட கொப்பரகெஸரிபந்மக்கு யாண்டு 3 ஆவதுக்கு எதிரா மாண்டு கடவ பொன் 15 கழஞ்சும் 77

## அறச்செயல் :

பாவைக் காளத்திப் பெருமாள் கிரமவித்தனின் மக்களாகிய பெருங்கொன்றை நம்பி, சோமாசி பெருமாள், மதிருதனன் ஆகிய மூவரும், மதிருதனக்கிரமவித்தனின் மக்களாகிய பெருங்கொன்றை நம்பி, நந்தி பெருமாள் ஆகிய இருவரும் ஆக ஐவருமாகச் சேர்ந்து, திருமஞ்சன நீர் இறைத்துத் தருவதற்கும், திருவமுது படைத்த தற்கும் 15 கழஞ்சு பொற்காசுகளை மூலதனமாக வழங்கியதை இச்சாசனம் குறிப்பிடுகிறது.

## விளக்கம் :

ஆதித்த கரிகாலனின் 3-ஆவது ஆண்டில் (கி. பி. 969) செய்யப் பட்ட மேற்கூறிய அறச்செயல், அம்மன்னனின் பெயரனை முதலாம் இராசேந்திர சோழனின் 6-ஆவது ஆண்டில் (கி. பி. 1018) மீளவும் உறுதி செய்யப்படுகிறது.



77. இக்கல்வெட்டு முற்றுப்பெருமல் உள்ளது.

# திருபுவனை

புதுவையிலிருந்து விழுப்புரம் செல்லும் பெருவழியில், புதுவைக்கு மேற்கே 23 கி. மீ. தொலைவில் திருபுவனை என்னும் சிற்றூர் அமைந்துள்ளது. இன்றைய நிலையில் இது சிற்றூராக இருப்பினும், முற்பட்ட சோழர் காலத்தில் ஈடும் எடுப்புமின்றிச் சிறந்திருந்த பேரூராகும்.

### சான்றுகள்

முதலாம் பராந்தகச் சோழன், உத்தம சோழன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், இராச மகேந்திரன், முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன், கோப்பெருஞ் சிங்கன், சடையவர்மன் வீரபாண்டியன், விசயநகர வேந்தரான விருப்பன்ன உடையார் முதலான பேரரசர்களின் காலங்களில் வரையப்பட்ட சாசனங்கள், திருபுவனையின் பழமைக்கு இன்றளவும் சான்றுகளாகத் திகழ்கின்றன.

திருபுவனை வரதராசப் பெருமாள் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டுகளையும், திருபுவனைக்கு அண்மையில்உள்ள திருவண்டார்க் கோயில், மதகடிப்பட்டு ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுகளையும், திருபுவனைக்குச் சேய்மையிலுள்ள திருவதிகை, திருப்பாதிரிப் புலியூர், திருப்பாலப்பந்தல், திருவக்கரை, ஒழிந்தியாப்பட்டு (திருஅரசிலி) ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுகளையும், புதை பொருட்கள், கோயிற்கட்டட அமைப்பு முதலான இன்ன பிற வற்றையும் துணையாகக் கொண்டு திருபுவனையின் தொன்மையை யும் பெருமையையும் உள்ளவாறு அறிய முற்படுவோம்.

## ஊரும் பேரும்

திருபுவனையின் வரலாற்றை அறிய வேண்டுமாயின், திருவக் கரைக் கல்வெட்டுகளை முதன்மையாகக் கொள்ளவேண்டியவரா கிறோம். திருவக்கரை, முற்பட்ட சோழர் காலத்தில், திருபுவனை யோடு தொடர்புடைய ஊராக இருந்துள்ளது. அங்குதான் திருபுவனையைப் பற்றிய பழமையான சாசனங்கள் காணப்படு கின்றன. ஆகவே, திருவக்கரைக் கல்வெட்டுச் செய்திகளை இனிக் காண்போம்.

"புகழ்த்துணை அடியார் கையால் யாங்கள் கொண்டு கடவ பொன் பதினெங்கழஞ்சரை இப்பதினெங்கழஞ்சரையாலும் திருவக்கரைக் கற்றளிப் பெருமானடிகளுக்கு நிசதி உழக்கு நெய் திருவிளக்குக்கு சந்திராதித்தாருள்ளளவும் அட்டுவொமானெம் எயிற்றூர்ச் சபையோம்"

"கொஇராசகெசரி பன்மற்கு யாண்டு இருபத்தாருவது தெவதாந திருவக்கரை குலங்கிழார்களொம் கைய்யெழுத்து"

இவ்விரண்டு கல்வெட்டுகளும் திருவக்கரை சந்திரமௌலீசுவரர் கோயிலில் காணப்படுகின்றன.[1] இவை இரண்டும் முறையே முதலாம் ஆதித்த சோழனின் 19-ஆவது ஆண்டிலும் (கி. பி. 890) 26-ஆவது ஆண்டிலும் (கி. பி. 897) வரையப்பட்டவை ஆகும்.

"ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெசரிபன்மக்கு யா(ண்டு) பதிநாராவது வடகரை பிரம்மதெயம் ஸ்ரீதிரிபுவநமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீநாராயணச்செரி"

இது திருவாண்டார்க் கோயிலில் காணப்படுகிறது. ஆதித்த சோழனின் மகனான பராந்தகனின் 16-ஆவது ஆண்டில் (கி. பி. 923) வரையப்பட்டது. இம்மன்னனின் 15-ஆவது ஆண்டிலும், 40-ஆவது ஆண்டிலும் வரையப்பட்ட மேலும் இரண்டு சாசனங்கள் இங்கு உள்ளன. இம்மூன்று கல்வெட்டுகளும் 'திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்னும் பெயரைக் குறிக்கின்றன. ஆனால், இவன் தந்தையான ஆதித்தனின் திருவக்கரைக் கல்வெட்டில் இப்பெயர் குறிக்கப்பெறவில்லை.

திருவக்கரை திருவாண்டார்க்கோயில் ஆகிய இரண்டு ஊர்களும் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து எல்லைக்குள் இருந்தனவாக ஆங்காங்குள்ள கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன.

இனி, திருபுவனையில் உள்ள கல்வெட்டுகள் அனைத்தும், அவ்வூரினைத் 'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று மட்டுமே குறிக்கின்றன. ஆனால், திருவக்கரை, மதகடிப்பட்டு முதலான ஊர்களில் உள்ள சாசனங்கள் முறையே, 'திரிபுவன

1. S. I. I., Vol. XIII, Nos. 885 & 317.

2. படித்தறியப்பட்டது. சிவன் கோயில் தெற்குச்சுவரில் உள்ளது.

3. A. R. E. 1917, Nos. 366 & 367.

மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துத் திருவக்கரை' என்றும்,[4] 'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துத் திருக்குண்டாங்குழி' என்றும்[5] கூட்டுகின்றன. இவற்றால், இவ்விரண்டு ஊர்களும் இச்சதுர்வேதி மங்கலத்து எல்லைக்குள் இருந்த ஊர்கள் என்பது இனிது புலனாகும்.

திருபுவனைக்கு இவ்வாறு வேறு பெயர் குறிக்கப்படாமையால், 'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்பதே அதன் பழமையான பெயர் என்பது போதரும்.

முதலாம் ஆதித்த சோழனின் கல்வெட்டில், திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெயர் காணப்படாமையாலும், அவன் மகன் முதலாம் பராந்தகச் சோழன் கல்வெட்டுகளில் அப்பெயர் காணப்படுவதாலும், அப்பராந்தகன் காலத்தேதான் நமது திருபுவனைக்குத் 'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் இடப்பட்டமையைத் தெளிவாகக் கண்டுகொள்கிறோம்.

திருவக்கரைச் சிவன் கோயிலின் முதற் பிரகாரத்தில் உள்ள 10-ஆவது ஆண்டுடைய (கி. பி. 980) உத்தம சோழனின் சாசனம் கீழ்க்கண்டவாறு உள்ளது.[6]

"ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெசரிபன்மர்க்கு யாண்டு பத்தாவது ஸ்ரீ திரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திருவக்கரை கற்றளி பரமஸ்வாமிகளும் விஷ்ணு பட்டாலகரும் ஆழியூர்க்காக நிலவழி பரிவர்த்தனையால் பெற்றுடைய இரண்டு அஷ்டகத்தும் யிரண்டு ஸ்ரீ கொயிலும்"

இவ்வாறு தொடங்கி நீண்டு செல்லும் அச்சாசனத்தில், ஸ்ரீதிரிபுவன மஹாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரால், பராந்தகனின் பின்னோனான உத்தம சோழன் காலத்திலும் திருபுவனைக்கு இப்பெயர் இருந்தமை விளங்கும்.

## சதுர்வேத மங்கலம்

சதுர்வேதம் – நான்கு வேதங்கள். ஆகவே, நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணர்களுக்குப் பிரம்மதேய உரிமையாக

---

4. S. I. I., Vol. XVII, No. 195.
5. மதகடிப்பட்டுக் கோயிலின் கல்வெட்டுச் சாசனங்களில் சில, பக்கம். 9
6. S. I. I., Vol. XIX, No. 240 (170 of 1904).

வழங்கப்படும் ஊர், சதுர்வேத மங்கலம் என்று பெயர் பெறும். அது தனியொரு ஊராகவோ, பல சிற்றூர்களைத் தன்னகத்துக் கொண்ட பெரிய அமைப்பாகவோ இருக்கலாம். எவ்வாறுயினும், அதன் வருவாய் முழுவதும் அந்தணர்களையே சாரும்.

## திரிபுவனமாதேவி

முதலாம் பராந்தகச் சோழனுக்குத் தேவியர் பலர் இருந்தனர். அவர்களில் கோக்கிழானடி, அருமொழி நங்கை, வில்லவன்மாதேவி, திரிபுவனமாதேவி, வளவன்மாதேவி, சோழசிகாமணி, சோழமா தேவி, தென்னவன்மாதேவி முதலானோரின் பெயர்களைச் சாசனங் களும், உதயேந்திரச் செப்பேடுகளும் குறிப்பிடுகின்றன.[7] இவர் களுள் கோக்கிழானடி என்பாள், பராந்தகனின் பட்டத்தரசி யாவாள். மேற்கூறிய அரசியருள் திரிபுவனமாதேவி என்பவளும் ஒருத்தி.

எனவே, பராந்தகச் சோழன் தன் அரசியருள் ஒருத்தியான திரிபுவனமாதேவியின் பெயரால், நமது திருபுவனைக்குத் திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கலம் என்று புதியதொரு பெயரிட்டு, அதனை வேதம்வல்ல அந்தணர்களுக்குப் பிரமதேய உரிமையாக வழங்கினான்.

"பிரம்மன் சுவர்க்கத்தை உண்டாக்கி தேவர்களுக்குக் கொடுத் ததைப்போல, பாராந்தகன் வீரநாராயணம் முதலான சிரூர்களை உண்டாக்கி, அந்தணர் பலருக்கும் அருங்கொடையாக வழங்கினான்."

என்று வரும் இம்மன்னனுடைய கன்னியாக்குமரிக் கல்வெட்டும் இங்கே குறிப்பிடத்தக்கது. இம்மன்னனுக்குப் பின் எழுந்த சோழ பாண்டிய பல்லவக் கல்வெட்டுகள், திரிபுவனமாதேவிச் சதுர்வேத மங்கலம் என்னும் இப்புதிய பெயரைத் தவறாது குறிக்கின்றன. இதனைப் பின்வரும் அன்னோரின் சாசனங்கள் புலப்படுத்துகின்றன.

" ஸ்ரீகொவிராஜகெஸரிபந்மரான ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு 27-ஆவது வடகரை ஜயங்கொண்ட சொழமண்டலத்து தநியூர் ஸ்ரீதிரிபுவனமஹாதெவிச் சதுர்வ்வெதி மங்கலத்து"

---

7. ( i ) S. I. I., Vol. II, No. 76.
( ii ) S. I. I., Vol. III, No. 110.
( iii ) S. I. I., Vol. V, Nos. 524, 525, 541 & 601.
( iv ) S. I. I., Vol. VII, No. 520.
( v ) A. R.E. 1931, No. 130.

என்று வரும் முதலாம் இராசராச சோழனின் மதகடிப்பட்டுக் கல்வெட்டும், [8]

"ஸ்ரீகோவிராஜராஜ கேஸரி பன்மரான ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு 29-ஆவது ஜயங்கொண்ட சொழமண்டலத்து பிரம்ம தெயம் ஸ்ரீதுரிபுவனமாதெவிச்சதுர்வெதிமங்கலத்து திருவக்கரை ஸ்ரீமுலஸ்தாநமுடைய மகாதெவற்கு"

என்று வரும் அம்மன்னனின் திருவக்கரைக் கல்வெட்டும் [9] நமது திருபுவனையைத் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்று குறிப்பது இங்கு உளங்கொளத் தக்கதாகும்.

"ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெஸரிபந்மரான ஸ்ரீராஜெந்திர சோழ தெவற்கு யாண்டு 3-ஆவது ஜயங்கொண்ட சொழ மண்டலத்து பிரஹ்மதெயம் ஸ்ரீ திரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து"

எனவும்,

"ஸ்வஸ்திஸ்ரீ ராஜெந்திரசொழதெவற்கு யாண்டு 4-ஆவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ப்ரஹ்ம தெயம் ஸ்ரீதிரிபுவந மஹாதெவி சதுர்வெதி மங்கலத்து"

எனவும் வரும் மதகடிப்பட்டுக் கல்வெட்டுகளாலும், [10]

"ஜயங்கொண்ட சொழ மண்டலத்து பிரம்மதெயம் ஸ்ரீதிரிபவன மகாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திருவக்கரை ஸ்ரீ முலஸ்தான முடைய மகாதெவற்கு"

என்ற திருவக்கரைக் கல்வெட்டாலும், [11]

"வடகரை ஜெயங்கொண்ட சொழ மண்டலத்து பிரம்ம தெயம் ஸ்ரீதிரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திருவக் கரை"

---

8. மதகடிப்பட்டுக் கோயிலின் கல்வெட்டுச் சாசனங்களில் சில, பக்கம், 5
9. S. I. I., Vol. XVII, No. 29.
10. Temple de Madagadipattou, Pages. 79 & 86.
11. S. I. I., Vol. XVII, No. 197.

என்னும் திருப்பாலப்பந்தல் கல்வெட்டாலும், [12] இன்னபிற சாசனங்களாலும் [13] முதலாம் இராசேந்திர சோழன் காலத்திலும் திருபுவனைக்குத் ‘திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்’ என்று பெயர் இருந்ததையும், திருவக்கரை அதன் எல்லைக்குள் இருந்ததையும் அறிகிறோம்.

“கொவிராஜகெஸரிபந்மருன உடையார் ஸ்ரீராஜாதிராஜ தெவர்க்கு யாண்டு உயஅ (28) ட்டாவது... நாட்டுப்ப்ரமதெயம் ஸ்ரீதிரிபுவநமஹாதெவிச் சதுர்வெதிமங்கலத்து ஸ்ரீகுண்டாங்குழி பரமஸ்வாமி”

என்று வரும் கல்வெட்டால், [14] முதலாம் இராசாதிராச சோழன் காலத்திலும் (கி. பி. 1046) திருபுவனைக்கு அப்பெயர் இருந்துள்ளதை அறிகிறோம்.

இரண்டாம் இராசேந்திர சோழனின் தம்பியும், முதலாம் இராசேந்திர சோழனின் மகனுமான இராசமகேந்திரனின் திருப்பாதிரிப்புலியூர்க் கல்வெட்டும், [15]

“தனியூர் திரிபுவனமாதெவிச் சதுர்வெதி மங்கலத்து வாகூர் நாட்டுக் களெயூர்”

என்று இச்சதுர்வேதி மங்கலத்தைக் குறிக்கிறது. இங்குக் குறிக்கப்பெறும் களையூர் என்னும் சிற்றூர், பாகூருக்கு மேற்கே 3 கி. மீ. தொலைவில் உள்ளது.

“கொராஜகெஸரிவர்மரான உடையார் ஸ்ரீவிராஜெந்திர தெவற்கு யாண்டு 6-ஆவது ஸ்ரீ ராஜெந்திர சொழ வளநாட்டு ப்ர(ம்ம)தெயம் ஸ்ரீதிரிபுவநமாதெவிச் (சதுர்வெதி மங்கலத்து)”

என்று வரும் மதகடிப்பட்டுக் கல்வெட்டால், [16] வீரராசேந்திர சோழன் காலத்திலும் (கி. பி. 1069) திருபுவனைக்குத் ‘திரிபுவனமா

12. S. I. I., Vol. XVII, No. 186 .
13. (i) A. R.E. 1917, No. 363.
    (ii) A. R.E. 1919, Nos. 174 & 183.
14. மதகடிப்பட்டுக் கோயிலின் கல்வெட்டுச் சாசனங்களில் சில, பக்கம். 9
15. S. I. I., Vol. VII, No. 743. .
16. Temple de Madagadipattou, Page. 123.

தேவிச்சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் இருந்தமை தெளிவா கின்றது.

முதலாம் குலோத்துங்க சோழனின் 9, 27, 43, 49 ஆகிய ஆட்சி ஆண்டுகளில் வரையப்பட்ட திருபுவனைக் கல்வெட்டுகளாலும், 17

"கங்கைகொண்ட சோழ வளநாட்டு விராவதார வளநாட்டு பிரம்மதேயம் திரிபுவனமஹாதேவி சதுர்வெதிமங்கலத்து ஸ்ரீமூலஸ்தானந் திருவக்கரை ஆளுடையார்க் கொயிலும் ஆழ்வார்க் கொயிலும்"

என்றுவரும் திருவக்கரைக் கல்வெட்டாலும், 18

"ஸ்ரீகுலொத்துங்கசொழ தெவற்கு யாண்டு யக (11) ராஜெந்திரசொழ வளநாட்டு பிரம்மதெயம் ஸ்ரீதிரிபுவனமகா தெவிச் சதுப்பெதி மங்கலத்துத் தென்பிடாகை திருமுடவன் பள்ளி உடைய மஹாதெவற்கு"

என்று வரும் பண்டசோழனூர்க் கல்வெட்டாலும் 19 குலோத் துங்க சோழன் காலத்திலும் இப்பெயர் இருந்தமை தெள்ளிதின் புலப்படும். இம்மன்னன் காலம் முதல் இச்சதுர்வெதி மங்கலத்தின் பேரெல்லை சுருங்கத் தொடங்கியதைக் குறிப்பால் அறிகிறோம்.

"சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரமசொழ தெவற்கு யாண்டு ரு (5) ஆவது கங்கைகொண்டசொழ வளநாட்டு விராவதார வளநாட்டு ப்ரஹ்மதெயம் ஸ்ரீதிருவனமாதெவிச் சருப்பெதி மங்கலத்து திருக்குண்டாங்குழி ஆளுடையார்க்கு"

"கொப்பரகெஸரிவன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரமசொழ தெவற்கு யாண்டு அ (8) ஆவது ராஜராஜ வளநாட்டு விராவதார வளநாட்டு ப்ரஹ்மதெயம் ஸ்ரீதிரிபுவன மகாதெவிச் சருப்பெதி மங்கலத்து"

---

17. A. R.E. 1919, Nos. 178, 190, 198 & 204.
18. S. I. I., Vol. XVII, No. 203.
19. 'பண்டசோழனூர்' என்னும் தலைப்புடைய கட்டுரையில், அங் குள்ள சாசனங்களைப் பற்றிய செய்திகளைக் காண்க.

என வரும் மதகடிப்பட்டுக் கல்வெட்டுகளாலும், [20]

"ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சொழ தெவற்கு யாண்டு கயஉ (12) பந்திரண்டாவது ராஜராஜ வளநாட்டு விராவதார வளநாட்டு ஸ்ரீதிரிபுவன மாதெவிச் சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீமுலஸ்தானத் திருவக்கரை ஆளுடையார் கொயிலிலெ"

என்ற திருவக்கரைக் கல்வெட்டாலும், [21] வேறுசில திருபுவனைக் கல்வெட்டுகளாலும் [22] குலோத்துங்க சோழனின் மகனை விக்கிரமன் காலத்திலும் திருபுவனைக்கு இப்பெயர் இருந்ததை அறிகிறோம்.

ஒழிந்தியாப்பட்டு (திருஅரசிலி) என்னும் ஊரில் காணப்படும் இரண்டாம் குலோத்துங்க சோழனின் 5-ஆவது ஆண்டுடைய (கி. பி. 1138) கல்வெட்டும் இச்சதுர்வேதி மங்கலத்தைக் குறிக்கிறது. [23] அது பின்வருமாறு :

"ராஜராஜ வளநாட்டுத் திரிபுவனமாதெவிச் சதுர்வெதி மங்கலத்துக் கிழ்பிடாகை மண்ணுண்ணிப் பாக்கத்துக் குடிபள்ளி செயங்கொண்டாற் குன்றந்"

இனி, கோப்பெருஞ்சிங்களின் திருபுவனைக் கல்வெட்டு, [24] சதுர்வேதிமங்கலம் என்னும் சொல்லை விடுத்து, திரிபுவனமாதேவி என்று மட்டுமே குறிப்பிடுகிறது. எனவே, இம்மன்னன் காலம் முதல் இதன் நீண்ட பெயர் சிறிது சிறிதாகச் சுருங்கத் தொடங்கி விட்டது. அத்துடன் சோழர் காலத்தில் திருபுவனைக்கு இருந்த சீரும் சிறப்பும் குன்றத் தொடங்கியது.

திருவதிகையில் வரையப்பட்டுள்ள மாறவர்மன் விரபாண்டியனின் 14-ஆவது ஆட்சி ஆண்டுக் (கி. பி. 1362) கல்வெட்டு ஒன்றில், [25]

---

20. Temple de Madagadipattou, PP. 100 & 113.
21. S. I. I., Vol. XVII, No. 188.
22. A. R.E. 1919, No. 175.
23. (i) S. I. I., Vol. VII, No. 823.
    (ii) A. R.E. 1902, No. 196.
24. S. I. I., Vol. XII, No. 126 (182 of 1919)
25. (i) S. I. I., Vol. VIII, No. 332.
    (ii) A. R.E. 1903, No. 57.

"விராவதார வளநாட்டு திரிபுவனமாதெவிச் சதுர்வெதி மங்கலத்து மத்யஸ்தன் எயிற்றூருடையானான திரிபுவன மாதெவி யுடையான் திருநட்டப்பெருமாள் உய்யநெறி காட்டினான்"

என்னும் தொடர் காணப்படுகிறது. பாண்டியர் காலத்திலும் இதற்குத் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்று பெயர் இருப்பதை இதனால் உணர்கிறோம். பாண்டியர் காலத்தில் இதன் எல்லை பெரிதும் சுருங்கிவிட்டது.

மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் திருவக்கரைக் கல் வெட்டில்,[26] 'தனியூர் திருவக்கரை' என்று குறிக்கப்படுகிறது. இக்கால கட்டம் முதல் திருவக்கரை, இச்சதுர்வேதி மங்கலத்து எல்லையினின்றும் வேறு பிரிந்து தனித்து இயங்கத் தொடங்கியது எனலாம்.

திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்தின் எல்லை, திருவக் கரையில் தொடங்கி தெற்கே தென்பெண்ணையாற்றின் வடகரை வரைப் பரந்திருந்தது. இவ்வெல்லைக்கு உட்பட்ட ஊர்களில் உள்ள கல்வெட்டுகள், அவ்வவ் ஊர்களும் இச்சதுர்வேதி மங்கலத் தைச் சார்ந்திருந்த ஊர்களாகக் குறிக்கின்றன. அக் காலத் தில் வட தென்னார்க்காடு மாவட்டங்களிலேயே பேரளவு நிலப் பரப்பை உடைய சதுர்வேதி மங்கலம், இது ஒன்றேயாம்.

இதனை அடுத்துள்ள வில்லியனூர், பாகூர் முதலான ஊர்களும் அக்காலத்தில் சதுர்வேதி மங்கலமாக விளங்கிய ஊர்களாகும். ஆயினும், அவற்றிற்கு இத்துணைப் பேரெல்லை இல்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

முதலாம் பராந்தகச் சோழனின் அரசியருள் ஒருத்தியான திரிபுவனமாதேவியின் பெயரால், அம்மன்னன் காலத்தில் உரு வாக்கப்பட்ட திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலம், இக்காலத்தில் திருபுவனை என்று மருவி வழங்குவதை, இதுகாறும் எடுத்துக் காட்டப்பட்ட பல்வேறு காலத்துக் கல்வெட்டுச் சான்றுகளால் தெளிவாக அறிகிறோம்.

இனி, முதற்பராந்தகச் சோழனுக்குக் காலத்தால் மிகப் பிற்பட்டவனான முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திலேதான், நமது திருபுவனைக்குத் 'திருபுவனம்' என்னும் பெயர் ஏற்பட்டு,

---

26. S. I. I., Vol. XVII, No. 202

அதுவே நாளடைவில் மருவி, இன்றைய திருபுவனை ஆயிற்று என்று கருதுவாரும் உளர். [27]

பராந்தகன் கல்வெட்டிலேயே இப்பெயர் காணப்படுவதாலும், திருபுவனையில் காணப்படும் குலோத்துங்கனுக்குக் காலத்தால் முற்பட்ட 14 கல்வெட்டுகளில் இப்பெயர் காணப்படுவதாலும், திருவக்கரை, திருவாண்டார்க்கோயில், மதகடிப்பட்டு, ஒழிந்தியாப் பட்டு, திருப்பாதிரிப்புலியூர் முதலான இடங்களில் உள்ள பழமை யான கல்வெட்டுகள் இப்பெயரைக் குறிப்பதாலும் அக்கருத்து பொருந்துவதாக இல்லை.

திருபுவனை வாழ் மக்களும், அதன் சுற்று வட்டாரத்தினரும் திருபுவனையைத் 'திரனமாதி' என்று இன்றளவும் கூறுகின்றனர். இது திரிபுவனமாதேவி என்பதன் மருவிய வழக்கு என்பது இனிது புலனாகும். திருவாண்டார்க்கோயிலில் உள்ள சக ஆண் டுடைய பிற்காலத்துச் சாசனம் ஒன்று, திருபுவனையைத் திரிபுவனமாதேவி என்று குறிப்பிடுகிறது. [28]

"சார்வரி ஷ சித்திரை மீ 4 உ திருபுவனமாதேவி இருச அப்பாபிள்ளை மகன் இருசவப்பன்"

மிகப்பிற்காலத்தில் வரையப்பட்ட இச்சாசனத் தொடர், திருபுவனைக்கு வடகிழக்கே ஒரு கி. மீ. தொலைவில் உள்ள சப்த மாதர்க்கோயிலின் தெற்குக் குமுதப்படையில் காணப்படுகிறது,

எனவே, திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்னும் முதலாம் பராந்தகச் சோழன் காலத்து நீண்ட பெயர், திரிபுவன மாதேவி என்று குறைந்து, அதுவும் நாளடைவில் மருவி, இன்றைய திருபுவனை ஆயிற்று என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

## இணைந்த பகுதி

முதற் பராந்தகச் சோழன் காலத்தில் இன்றுள்ள திருபுவனை என்னும் சிற்றூரும், திருவாண்டார்க் கோயில் என்னும் சிற்றூரும் ஒருங்கிணைந்து பேரூராய் ஒரூராய் விளங்கின. திருவாண்டார்க் கோயிலில் உள்ள சாசனங்களில் அவ்வூருக்குத் தனிப்பெயர் ஏதும் குறிக்கப்படாமையால் இக்கருத்தை உணரலாம்.

---

27. புதுவைச் செய்திகள், ஜூலை. 1970, பக்கம். 17.
28. A. R.E. 1917, No. 376.

முற்காலத்தில் பேரூராக இருந்த திருபுவனியின் கிழக்குப் பகுதியில் சிவன் கோயில் நிறுவப்பட்டது. அப்பெருமான் திருவறையாண்டார் என்று கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகிறார். ஊரின் நடுவிடத்திலோ கிழக்குத் திசையிலோ சிவன் கோயில் அமைப்பதே முற்காலத்து வழக்கமாகும். திருமால் கோயில் ஊரின் மேற்குத் திசையில் அமைக்கப்படும்.

இன்று திருபுவனியின் கிழக்குத் திசையில் காணப்படும் வரதராசப் பெருமாள் கோயில், முற்காலத்தில் பேரூராகத் திகழ்ந்திருந்த திருபுவனியின் மேற்குத் திசையில் நிறுவப்பட்டதாகும்.

திருபுவனியின் கிழக்குப் பகுதி பிற்காலத்தில் தனி ஊராகப் பிரியத் தலைப்பட்டபொழுது, திருவறையாண்டார் என்னும் சிவபெருமான் பெயரே, அப்புதிய ஊருக்குப் பெயராயிற்று. முற்காலத்துத் திருபுவனியின் கிழக்குத் திசையில் நிலைபெற்றிருந்த அச்சிவன் கோயில், புதிய ஊரின் மேற்குத் திசையில் நிலைத்து விட்டது. எனவேதான், இன்றுள்ள திருவாண்டார்க் கோயிலின் மேற்குத் திக்கில், தனித்துள்ள நிலையில், சிவன் கோயிலைக் காண்கிறோம்.

திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம் தோன்றுவதற்கு முன்னர், அவ்வூருக்கு என்ன பெயர் இருந்தது என்று கல்வெட்டுகள் திட்டவட்டமாகக் குறிப்பிடவில்லை. எனினும், ஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் குறிப்பிடும் வடுகூராக இருக்கலாம்.

## வடுகூர்

ஞானசம்பந்தரின் காலம் எனக் கருதப்படும் கி. பி. 7-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரும், கி. பி. 9-ஆம் நூற்றாண்டினரான சோழர் காலத்துக்கு முன்னரும் உள்ள இடைக்காலத்தில், பேரூராக விளங்கிய வடுகூர், சிறுசிறு பகுதிகளாகப் பிற்காலத்தில் பிரிந்தன. அப்பகுதிகள் சேரி என்னும் பெயரைப் பெற்றன. அச்சேரிகள் அக்காலத்தில் பெருஞ் சிறப்புடன் விளங்கிய திருமாலின் பல்வேறு பெயர்களைப் பெற்றிருந்தன.

ஒரு தொழில் செய்வோர் அல்லது ஓர் இனத்தவர் சேர்ந்து வாழ்ந்த இடம் சேரி எனப்பட்டது. வடுகூரினின்றும் வெவ்வேறாகப் பிரிந்த இச்சேரிகள் பலவும் திருபுவனியைச் சார்ந்திருந்தன. இதனை,

"ஸ்ரீதிரிபுவனமகாதேவி சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீகுண்டாங்குழி பரமஸ்வாமிகளுக்கு இவ்வூர் ஸ்ரீமதிஸூதனச் செரி"

என்னும் மதகடிப்பட்டுக் கல்லெழுத்தாலும்,[29]

"ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெசரி பன்மக்கு யாண்டு பதிநாராவது வடகரை பிரம்மதெயம் ஸ்ரீதிரிபுவன மஹாதெவி சதுப்பெதி மங்கலத்து ஸ்ரீநாராயணச்செரி"

என்னும் முதலாம் பராந்தகச் சோழனின் திருவாண்டார்க் கோயிற் கல்லெழுத்தாலும் அறியலாம்.[30] ஒரு பேரூரின் சிறு சிறு பகுதிகள், அக்காலத்தில் சேரி என்ற பெயரால் குறிக்கப் பட்டமையை, இம்மன்னனின் உத்தரமேரூர் சாசனங்களாலும் அறியலாம்.[31]

இவ்வாறு ஞானசம்பந்தர் காலத்துப் பேரூரான வடுகூர், சிறு சிறு பகுதிகளாகப் பிரிந்து, சேரிகளாக மாற்றமடைந்து, அவையும் தனித்தனிப் பெயர்களைப் பெற்றுவிட்டமையால், வடுகூர் என்னும் பழம் பெயர் அப்பகுதியில் ஒரு சிறு பகுதிக்குமட்டும் பெயராக நிலைத்திருந்தது. 'திருவடுவூர் மகாதேவனும்' என்று வரும் மதகடிப்பட்டுக் கல்வெட்டு, இச்செய்தியைக் குறிப்பால் உணர்த்துகிறது.

ஆகவே, பராந்தகச் சோழன் அப்பகுதியின் பழமையான அமைப்பைக் கருத்திற் கொண்டு, இன்றைய திருபுவனையையும் திருவாண்டார்க் கோயிலையும், இவ்விரண்டு ஊர்களுக்கு இடையே தனித்தனிப் பெயர்களுடன் திகழ்ந்த சேரிகள் பலவற்றையும், வடுவூர் என்னும் சிறு பகுதியையும் ஒருங்கிணைத்துத் தன் மனைவியின் பெயரால், 'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று புதியதொரு பெயரிட்டு அந்தணர்களுக்குச் பிரம்மதேய உரிமையாக வழங்கினான்.

## சேரிகள்

ஸ்ரீகோவிந்தச்சேரி, ஸ்ரீவிஷ்ணுசேரி, ஸ்ரீதாச்சேரி, ஸ்ரீ வாமணச்சேரி, மாதவச்சேரி, கேசவச்சேரி, திருநாராயணச் சேரி, மதுசூதனச்சேரி, சூரசூளாமணிச்சேரி, ஸ்ரீ பரகேசரிச்சேரி

---

29. Temple de Madagadipattou, Pages. 79 & 80.

30. இது கருவறைத் தெற்குச் சுவரில் உள்ளது.

31. Archaeological Survey of India, 1904–05, P. 131.

மானகுலாதனச்சேரி, இராசகேசரிச்சேரி, கோதண்டராமச்சேரி, ரிஷிகேசவச்சேரி, அமுதசேரி முதலான சேரிகள் இச்சதுர்வேதி மங்கலத்தில் இருந்தனவாகக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. இவற்றில் பல சேரிகள் திருமாலின் பல்வேறு பெயர்களைக் கொண்டிருந்தன. வேறு சில முற்பட்ட சோழ மன்னர்களின் பெயர்களைப் பெற்றிருந்தன. சில சேரிகளில் தனிச் சபைகள் இருந்தனவாகத் தெரிகிறது.

## சிற்றூர்கள்

நல்லூர், நல்லூர் புதுக்குடி, நேரிய நல்லூர், வானவன்மாதேவி நல்லூர், பூபாலசுந்தர நல்லூர், சந்திரசேகர நல்லூர், பரகேசரி நல்லூர், திருமங்கலம், சாத்தமங்கலம், புள்ள மங்கலம், பந்த மங்கலம், வைசாக்க மங்கலம், ஆற்றுப்பாக்கம், மாம்பாக்கம், மானம்பாக்கம், மண்ணுண்ணிப்பாக்கம், வெள்ளைப்பாக்கம், வெள் ளிலைப்பாக்கம், அத்தியூர், ஆலத்தூர், புல்லூர், நாகனூர், கோகாட்டூர், கோவிந்தபுத்தூர், மாவண்டூர், திருவக்கரை, திருமுடவன்பள்ளி, திருக்குண்டாங்குழி, திருவடுலூர் முதலான ஊர்கள் இச்சதுர்வேதி மங்கலத்தில் இருந்தன.

மேற்கண்ட ஊர்களில் சாத்தமங்கலம் என்பது, இச்சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்ததென்பதைத் திருப்பாதிரிப்புலியூர்ச் சாசனம் ஒன்றால் அறிகிறோம்.[32] அப்பகுதி பின்வருமாறு :

"திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சாத்தமங்கலத்துக் குலசேகரபிரம்ம மாராயன் எழுத்து"

திருமங்கலம் என்பது திருபுவனைக்கு வடக்கே 9 கி. மீ. தொலைவிலும், மாம்பாக்கம் என்பது வடக்கே 3 கி. மீ. தொலைவிலும், கோவிந்த புத்தூர் என்பது பூதூர் என்ற பெயருடன் வடமேற்கே 5.5 கி. மீ. தொலைவிலும் உள்ளன. திருபுவனைக்குத் தென்கிழக்கே 6.5 கி. மீ. தொலைவில் உள்ள மருதூர், முற்காலத்தில் பரகேசரிநல்லூர் என்று பெயர் பெற்றிருந்தது. நல்லூர் என்பது அப்பெயருடன் தென்மேற்கே 2 கி. மீ. தொலைவில் உள்ளது. அத்திசையில் 9 கி. மீ. தொலைவில் உள்ள நெட்டைப்பாக்கம், முற்காலத்தில் பூபாலசுந்தர நல்லூர் என்று பெயர் பெற்றிருந்தது. அதே திசையில் 1.5 கி. மீ. தொலைவில் உள்ள மதகடிப்பட்டுக்குக் குண்டாங்குழி என்று வேறு பெயர் இருந்தது.

---

32. S. I. I., Vol. VII, No. 759 (135 of 1902).

திருபுவனைக்குத் தெற்கே 6 கி. மீ. தொலைவில் உள்ள பள்ளி நேலியனூரும், 9 கி. மீ. தொலைவில் உள்ள பண்டசோழனூரும் முறையே நேரியநல்லூர், திருமுடவன்பள்ளி எனப் பெயர்பெற் றிருந்தன.

## கால்வாய்களும் வழிகளும்

நிலங்களுக்குச் செல்லும் கால்வாய்களுக்குச் சோழமன்னர் களின் பெயர்கள் இடப்பட்டிருந்தன. பராந்தகன் வாய்க்கால், வீரநாராயணன் வாய்க்கால், அரிஞ்சிகை வாய்க்கால், வீரசோழன் வாய்க்கால் முதலான பெயர்களை உடைய வாய்க்கால்கள் இருந்த செய்திகளைக் கல்வெட்டுகளால் அறிகிறோம். ஸ்ரீ மதுராந்தகவதி, விஷ்ணுவதி, ஆதித்தவதி முதலான போக்குவரவுக்குப் பயன்படும் பெருவழிகளும் இங்கே இருந்தன.

இங்கிருந்த வாய்க்கால்களும் வழிகளும் முதலாம் ஆதித்த சோழன், முதலாம் பராந்தகச் சோழன் (வீரநாராயணன், வீர சோழன்), அரிஞ்சிகைப்பிராட்டி, முதலாம் இராசேந்திர சோழன் (மதுராந்தகன்) ஆகியோரின் பெயர்களைக் கொண்டிருந்தல் திருபுவனையின் தொன்மையை விளக்கப் போதிய சான்றுகளாகும்.

## புதை பொருட்கள்

திருபுவனைக்கு அண்மையில் இருக்கும் இலிங்கத்து மேடு, ஊரல்மேடு முதலான இடங்களை அகழ்ந்து பார்த்தபோது, அங்குச் சோழர் காலத்துச் செங்கற்களால் ஆகிய சுவர்கள், நாணயங்கள் படிமங்கள், சிற்ப வேலைப்பாடுள்ள கருங்கற் பலகைகள் ஆகியவை கிடைத்துள்ளன. திருபுவனைக்கு மிக அணித்தாக உள்ள கலி தீர்த்தாள்குப்பம் என்ற ஊரில், முதலாம் இராசராச சோழன் காலத்திய 460 செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன.[33]

திருபுவனை மாரியம்மன் கோயிலில் உள்ள சில கற்பலகைகளில் கிரந்தம் மற்றும் சோழர் காலத்துத் தமிழ் எழுத்துக்களால் இயன்ற எழுத்து வரிகள் காணப்படுகின்றன.[34] இவற்றை எல்லாம் ஒப்புநோக்கிக் காணுமிடத்து, சோழர் காலத்தில் திருபுவனை பெற்றிருந்த உயரியநிலை தெற்றென விளங்கும்.

---

33. Revue Historique de L'Inde Française, Vol. VII, PP. 171 & 172.
34. பழைய கோயிலின் கற்களைக் கொண்டு நிறுவப்பட்ட புதிய கோயில்.

# கோக்கிழானடிப் பேரேரி

முதலாம் இராசராச சோழன், இராசேந்திர சோழன் ஆகியோர் காலத்துக் கல்வெட்டுகள், திருபுவனியிலுள்ள ஏரியின் பெயர், 'கோக்கிழானடிப் பேரேரி' என்று குறிப்பிடுகின்றன.[35] ஏரியைப் பற்றிய வேறு செய்திகளை அவை குறிப்பிடவில்லை.

கோக்கிழானடி என்பாள் முதலாம் பராந்தகச் சோழனின் பட்டத்தரசி என்பது, உதயேந்திரச் செப்பேடுகளால் அறியக் கிடக்கும் செய்தியாகும்.[36] எனவே, இம்மன்னன் காலத்தில் இவனுடைய பட்டத்தரசியின் பெயரால் ஏரியும், அரசனின் பல்வேறு பெயர்களில் வாய்க்கால்களும் அமைக்கப்பட்டன.

பராந்தகன் வாய்க்கால், வீரநாராயணன் வாய்க்கால், வீர சோழன் வாய்க்கால் என்னும் பெயர்கள் இக்கருத்தைத் தெளிவு படுத்துகின்றன. இவனுடைய மனைவியருள் ஒருத்தியான திரிபுவனமாதேவியின் பெயரால், இச்சதுர்வேதி மங்கலம் உரு வாக்கப்பட்ட செய்தி தக்க சான்றுகளுடன் முன்னரே விளக்கப் பட்டது. ஆகவே, முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் திரிபுவனி, பல்லாற்றானும் உயர்நிலை எய்திற்று எனின் அது மிகையாகாது.

## ஏரம்பகணபதி

சோழர் காலத்தின் பிற்பகுதியில் கோக்கிழானடிப் பேரேரியின் கரைகளும், மதகுகளும், வாய்க்கால்களும் சீர்கேடு அடைந்தன. பல்லவர்களின் வழித்தோன்றலான கோப்பெருஞ்சிங்கன் காலத்தில், இவை மீண்டும் செப்பனிடப்பட்டன. அத்துடன் ஏரிக்கரையில் ஏரம்பகணபதியின் கோயில் ஒன்றும் எடுப்பிக்கப்பட்டது.[37]

ஏரிக்கரை ஏரம்பகணபதியின் கோயில் இக்காலத்துச் சுவடற்றுப் போனது வருந்தத் தக்கது. ஐந்து யானைத் தலை களையும், ஆயுதம் ஏந்திய ஐயிரு கரங்களையும் கொண்டு, சிங்கத்தின்மீது அமர்ந்த நிலையில் அமைக்கப்படுவதே ஏரம்ப

---

35. A. R.E. 1919, Nos. 196 & 189.
36. S. I. I., Vol. II, No. 76.
37. A. R.E. 1919, No 182.

கணபதியின் திருமேனி ஆகும்.[38] இத்தகைய உருவ அமைப்புடைய ஏரம்ப கணபதியின் சிற்பமொன்றைத் திருப்பரங்குன்றத்திலும் காணலாம்.[39] திருபுவனி ஏரம்ப கணபதியின் உருவம் இத்தகைய அமைப்புடையதாகவே இருத்தல் வேண்டும்.

## கலிங்கும் மதகும்

"ஸ்வஸ்திஸ்ரீ சகலபுவன சக்கரவர்த்தி காடவன் அவனி ஆளப்பிறந்தான் கொப்பெருஞ்சிங்கன் திரிபுவனமாதெவி எரிகரை பல இடங்களிலும் உடைந்து எரியும் தூர்ந்து மதகுகளும் முறிந்து கலிங்குகளும் அழிந்து கிடக்கயில் உடைந்த மடைகளும் அடைத்து எரியும் கல்லி கரையும் கற்கட்டி மதகுகளு மட்டு (வி)த்து கலிங்குகளும் செய்தபடி"

இது திருபுவனி வரதராசப் பெருமாள் கோயிலின் தெற்குச் சுவரில் காணப்படும் கல்வெட்டாகும்.[40] கோப்பெருஞ்சிங்கன் காலத்தது (கி. பி. 1232–1243). இக்கல்வெட்டு ஏரியின் பெயரைத் திரிபுவனமாதேவி ஏரி என்று குறிப்பிடுகிறது. எனவே, இம் மன்னன் காலத்தில், பழைய பெயரான கோக்கிழானடிப்பேரேரி என்பது வழக்கொழிந்ததாகக் கருதலாம்.

இவன் காலத்தில் ஏரியின் கரைகள் பல இடங்களில் உடை பட்டிருந்தன. ஏரியும் தூர்ந்துவிட்டது. மதகுகளும் கலிங்குகளும் அழிந்துவிட்டன. இந்நிலையில் இவன் ஏரியைத் தோண்டி ஆழப் படுத்தினான். கரைகளில் கல்பதித்துச் செப்பனிட்டான். மதகுகளையும் கலிங்குகளையும் சீர்படுத்தினான். மேற்கண்ட கல்வெட்டால் இவற்றைத் தெளிவாக அறிகிறோம்.

## மடங்கள்

சோழ மன்னர்தம் ஆட்சிக் காலங்களில் நாடெங்கும் சமயத் தலைவர்களின் பெயர்களாலும், அரசர்களின் பெயர்களாலும் மடங்கள் பல நிறுவப்பட்டன. இவைகட்கு எடுத்துக்காட்டாக திருஞானசம்பந்தர் மடம், திருநாவுக்கரசர் மடம், ஆலாலசுந்தரர் மடம், திருமூலர் மடம், சிறுத்தொண்டர் மடம், அருண்மொழித்

---

38. Elements of Hindu Icnography, Vol. I, Part. I. Pages. 57, 65 & 66.
39. S. I. I., Vol. XII, No. 126 (Page. 63).
40. S. I. I., Vol. XII, No. 126 (182 of 1919).

தேவன் மடம், இராசேந்திர சோழன் மடம், குலோத்துங்க சோழன் மடம் ஆகியவற்றைக் கூறலாம்.[41]

திருபுவனியிலும் முற்காலத்தில் மடங்கள் பல நிறுவப்பட்டிருந்தன. முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இராசேந்திர சோழன் மடமும், முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் வேதாந்த வேதிய மடம், திருநாவுக்கரசர் மடம் ஆகியவையும் இருந்தனவாகச் சாசனங்கள் புலப்படுத்துகின்றன.[42]

இராசேந்திர சோழன் மடத்தில் பதினெண்நாட்டு வைஷ்ணவர்கள் தங்கி இருந்தனர். இவர்களின் உணவு முதலான தேவைக்கு என்று மடப்புறமாக நிலதானம் செய்யப்பட்டிருந்தது.

வேதாந்த வேதிய மடம் இறை வழிபாட்டுக்கு உரியதாகத் திகழ்ந்தது. திருமேற்கோயில் ஆழ்வார் என்னும் பெயரிய இறைவனை இம்மடத்தில் எழுந்தருளச் செய்தனர்.

திருநாவுக்கரசர் மடத்தில் சிவயோகிகள், மகேசுவரர் (அறங்காவலர்) முதலான சைவ சமயத்தவர் தங்கி இருந்தனர். இவர்கள் ஓரிடத்திலும் நிலையாகத் தங்கி இருக்கும் இயல்பினர் அல்லர். இவர்களின் உணவுத் தேவைக்கு என்று சாலாபோகமாக இறையிலி நிலம் வழங்கப்பட்டது. முற்காலத்தில் சைவ வைணவ மடங்களாகத் திகழ்ந்த இம்மடங்கள், இக்காலத்தில் இருந்த இடம் தெரியாமல் அழிந்துபோயின.

---

41. ( i ) S. I. I., Vol. V, No. 422.
( ii ) A. R.E. 1908, No. 392.
( iii ) A. R.E. 1909, No. 402.
( vi ) A. R.E. 1911, No. 116.
( v ) A. R.E. 1912, Nos. 132 & 200.
( vi ) A. R.E. 1922, No. 76.
( v ) A. R.E. 1925, No. 186.

42. A. R E. 1919, Nos. 187, 202 & 203

# மண்டபங்கள்

திருபுவனியில் மூவேந்தவேளார் மண்டபம், விழுப்பரையன் மண்டபம் என இரண்டு மண்டபங்கள் இருந்தனவாகக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன.[43]

கி. பி. 996-ஆம் ஆண்டுக்கு முன்னர், உம்பல நாட்டு மூவேந்த வேளார் என்ற அரசியல் அதிகாரி ஒருவரால், இங்கு மண்டபம் ஒன்று கட்டப்பட்டது. மூவேந்த வேளார் என்பது, அரசியல் அதிகாரிகளுக்குச் சோழ மன்னர்களால் கொடுக்கப்படும் பட்டப் பெயர் ஆகும். இவர் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தவராக இருத்தல் வேண்டும்.

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில், உத்தம சோழ விழுப்பரையன் மண்டபம் என்ற பெயரில், இங்கு மற்றுமொரு மண்டபம் இருந்த செய்தி சாசனத்தால் தெரிகிறது. இங்குக் குறிக்கப்பெறும் விழுப்பரையன், உத்தம சோழன் காலத்தில் (கி. பி. 970–985) இருந்த பாடிகாவல் அதிகாரியாக இருக்கலாம். இவ்விரண்டு அரசியல் அதிகாரிகளைப்பற்றிய வேறு சான்றுகள் இல்லாமையால், இவர்களைப்பற்றிய செய்திகளைத் தெளிவாக அறிய இயலவில்லை.

திருபுவனி ஊராளும் கணப்பெருமக்கள், மேற்கூறிய மண்டபங்களில் அவ்வப்போது கூடியிருந்து முடிவெடுத்தனர். விழுப்பரையன் திருமண்டபம் திருபுவனி வரதராசப் பெருமாள் கோயிலில் முன்னால் அமைக்கப்பட்டிருந்தது. இவ்விரண்டு மண்டபங்களும் இக்காலரதுச் சுவடற்றுப் போயின. மதகடிப்பட்டிலுள்ள சிவன் கோயில் மண்டபத்திலும், திருபுவனிச் சபையினர் அவ்வப்போது கூடினர் என்பதை அங்குள்ள கல்வெட்டால் அறியலாம்.[44]

---

43. ( i ) A. R E. 1917, No. 362
( ii ) A. R E. 1919, Nos. 176 & 184
( iii ) சோழர் கோயிற் பணிகள், பக்கம். 102

44. Temple de Madagadipattou, Page. 77

## கோயில்கள்

சைவ வைணவச் சமயங்களைச் சார்ந்த எண்ணற்ற கோயில்கள் திருபுவனையில் இருந்துள்ளன. எனினும், வைணவக் கோயில்களே பெருஞ்சிறப்பினை உடையனவாய்த் திகழ்ந்தன.

வீரநாராயண விண்ணகராழ்வார், வீரசோழ விண்ணகராழ் வார், திருமேற்கோயிலாழ்வார், கோலவராக ஆழ்வார், தென் திருவேங்கடத்து ஆழ்வார், நாசிங்க ஆழ்வார், வீற்றிருந்த பெரு மாள் முதலான வைணவக் கடவுளரின் பெயர்களைச் சாசனங்களால் அறிகிறோம்.

அருளாகர ஈஸ்வரமுடையார், திருநாகேஸ்வரம் உடையார், துர்க்கை, ஏரம்ப கணபதி முதலான சைவ சமயக் கடவுளரையும் சாசனங்கள் குறிப்பிடுகின்றன. இனி, இக்கோயில்களைப் பற்றிய செய்திகளை முறையாகக் காண்போம்.

### வீரநாராயண விண்ணகர்

இக்காலத்தில் வரதராசப் பெருமாள் கோயில் என்று கூறப் படும் திருபுவனைத் திருமாற்கோயில், சோழர் காலத்தில் வீர நாராயண விண்ணகர் என்று பெயர்பெற்றிருந்தது. இறைவன் வீரநாராயண விண்ணகராழ்வார் எனப்பட்டார்.[45] வீரநாராய ணன் என்னும் பெயர், முதலாம் பராந்தகச் சோழனின் விருதுப் பெயர் என்பது முன்னரே கூறப்பட்டது.

..“தேவேந்திரன் சக்கரவர்த்தி ஸ்ரீவீரநராயணன் ஸ்ரீபராந்தக தேவர் ஆகிய பரகேசரிவர்மர் ஸ்ரீமுகம் அருளிச்செய்துவரக் காட்ட ஸ்ரீஆக்ஞையினல்”

எனவும்,

“இவ்வாண்டுமுதல் எங்களுக்கு பெருமானடிகள் எம்பெருமான் ஸ்ரீவீரநாராயணன் ஸ்ரீபராந்தக தேவன் ஸ்ரீபரகேசரிவன்ம ருடைய ஸ்ரீமுகம் வரக்காட்ட ஸ்ரீமுகப்படி ஆக்ஞையினல்”

எனவும் வரும் உத்தரமேரூர்ச் சாசனத்தாலும்[46] வீரநாரா யணன் என்பது முதலாம் பராந்தகச் சோழனின் விருதுப் பெயர்

---

45. A. R E. 1919, Nos. 174, 176, 183, 184. 185 & 189
46. Archaeological Survey of India, Annual - Report. 1904–05, PP. 136–138.

என்பதை நன்கு உணரலாம். வீரநாராயணன், வீரசோழன் என்னும் விருதுப் பெயர்களைக் கொண்ட இம்மன்னன் காலத்தில் (கி. பி. 907–953) இக்கோயில் கற்றளியாக எடுப்பிக்கப்பட்டு அவன் பெயரால் குறிக்கப்பட்டது. பராந்தகன் சமயப்பொறை யுடைய பெருவேந்தனாதலின், இவன் ஆட்சிக் காலத்தில் சமய வேறுபாடு இன்றி நாடெங்கும் பல சமயங்களையும் சார்ந்த கோயில் கள் எடுப்பிக்கப்பட்டன.

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள காட்டுமன்னார்குடியில் இவன் காலத்தில் அமைக்கப்பட்ட திருமால்கோயில், 'வீர நாராயண விண்ணகர்' என்று பெயர்பெற்றிருந்தது. அங்கு வெட்டப்பட்ட ஏரி. 'வீரநாராயண ஏரி' என்று அழைக்கப்பட்டது. இவற்றை உள்ளடக்கிய சதுர்வேதி மங்கலம், 'வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம்' என்று சிறப்பிக்கப்பட்டது. [47]

இவற்றை உளங்கொண்டு ஆராயுமிடத்து, திருபுவனைச் சாசனம் குறிப்பிடும் 'வீரநாராயண விண்ணகராழ்வார்' என்ற தொடரில் விண்ணகர் என்பது கோயிலையும், ஆழ்வார் என்பது கோயில் கொண்ட திருமாலையும், வீரநாராயணன் என்பது கோயிலை எடுப்பித்த முதலாம் பராந்தகச் சோழனையும் குறிப் பிடுவது இனிது புலனாகும்.

இவன் காலத்துக்கு முன்னர் இங்கிருந்த சேரிகள் பலவும், இத்திருமாலின் பல்வேறு பெயர்களைக் கொண்டிருந்தன என்று முன்னர்க் கண்டோம். எனவே, அக்காலத்தில் மண்தளியாக இருந்த இக்கோயிலை, இம்மன்னன் கற்றளியாக எடுப்பித்தான் எனக்கோடலே நேரியதாகும். [48] முற்பட்ட சோழர் காலத்தில் பராந்தகன் பெயரால் கோயிலும், அவன் பட்டத்தரசியின் பெயரால் ஏரியும், மற்றொரு மனைவியின் பெயரால் சதுர்வேதி மங்கலமும் இப்பகுதியில் உருப்பெற்றன.

பராந்தகச் சோழன் காலத்திய இக்கற்றளியை, முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தது என்று கருதுவாரும் உளர். [49] இக்கற்றளியில், இக்குலோத்துங்கனுக்கு முற்பட்ட சோழ மன்னர்

---

47. Travancore Archaeological Series, Vol. III. No. 34

48. ஊரும் பேரும், பக்கம். 325

49. புதுவைச் செய்திகள். ஜூலை. 1970, பக்கம். 16

களின் கல்வெட்டுகளும் வரையப்பட்டிருத்தலின் அக்கருத்து ஏற்புடையதன்று. இக்கோயில் முற்காலத்தில் பரந்த அளவில் பல சுற்றுக்களை உடையதாய் விளங்கியது. இப்போதுள்ள திருச் சுற்று, முற்காலத்துக் கற்பலகைகளைக் கொண்டு பிற்காலத்தில் அமைக்கப்பட்டது. எனவேதான், அங்குள்ள கல்வெட்டுகள் முறைமாறியும், தனித்தும், தொடர்பின்றியும், தலைகீழாகவும் காணப்படுகின்றன.

## விண்ணகராழ்வார்

வரதராசப் பெருமாள் கோயில் எனப்படும் வீரநாராயண விண்ணகராழ்வார்க் கோயிலில், இப்போது மூலவராக உள்ளவர் தோத்தாதரி நாதர். அலைமகளுக்கும் நிலமகளுக்கும் நடுவராய், போகாசன மூர்த்தியாய் கரியநிறவண்ணனாய் வீற்றிருக்கும் அண்ணலின் அழகைக்காண ஆயிரம் நயனம் வேண்டும். இவர் இடைக்காலத்தில் இங்கு நிறுவப்பட்ட மூலவராதல் வேண்டும். பராந்தகன் காலத்தில் நிறுவப்பட்டிருந்த பழமையான மூலவரை, இன்று புதுவை ராஜ்பவனில் காண்கிறோம்.

நுண்ணிய வேலைப்பாடுள்ள முடியணிந்த தலையும், பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் கொண்டு, முன் இரு கைகளில் வலது கை அபயமுத்திரையைத் தாங்கியும், இடது கை தொடை மீது பொருந்தி இருக்கவும், வலது கால் தொங்கிய நிலையிலும், இடது கால் மடங்கி இருக்கையின் மீது இருக்கும் வண்ணம் போகாசன மூர்த்தியாக வடிக்கப்பட்ட இவ்வண்ணலின் அழகு மிக அருமை வாய்ந்தது.

வீரநாராயண விண்ணகராழ்வார்க் கோயிலில் கோலவராக ஆழ்வார், வீற்றிருந்தாழ்வார், நாசிங்க ஆழ்வார் ஆகிய கடவுளரின் திருமேனி உருவங்களும் நிறுவப்பட்டிருந்தன.

## கோலவராக ஆழ்வார்

கோலவராக ஆழ்வாருக்கு நாள் வழிபாடு, திருவமுது படையல் முதலான தேவைக்கென்று திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங் கலத்துச் சபையினர் இறையிலியாக நிலதானம் செய்தனர். இவ் வாழ்வாரின் திருமேனி கோயிற் பண்டாரத்தில் (Treasury) நிறுவப்பட்டதாகத் தெரிகிறது, [50]

50. A. R. E. 1919, No. 177

திருபுவனையில் நிறுவப்பட்டிருந்த இச்சிலையையும் இன்று புதுவை ராஜ்பவனில் காண்கிரேம். ஏறத்தாழ 5 அடி உயரமுள்ள வராகமூர்த்தியான இவருடைய முடியணிந்த திருமுகம், இடப் பக்கம் திரும்பி நிலமகளைப் பார்த்த வண்ணம் அமைக்கப்பட்டுள் ளது. பின் இருகைகளில் வலது கை சங்கைக் கொண்டுள்ளது. இடதுகை உடைந்துவிட்டது,



பூவராக மூர்த்தி – புதுவை ராஜ்நிவாஸ்
[சோழர் காலம்]

நன்றி : French Institute of Indology – Pondicherry

முன்னிரண்டு கைகளில் வலதுகை நிலமகளின் கால்களைத் தொட்டவாறும், இடதுகை நிலமகளை அணைத்தவாறும் அமைந்துள்ளன. வலது கால் பீடத்தில் பதிந்துள்ளது. மேல் நோக்கியவாறு சிறிதே மடக்கிய நிலையில் உள்ள இடது பாதத்தை ஆதிசேடன் தன் தலைமீது தாங்குகின்றார். ஆதிசேடனுக்கு அருகே தொழுத கையினரான கருடாழ்வாரைக் காண்கிறோம். வராக மூர்த்தியின் இடது தொடைமீது நிலமகள் அமர்ந்த நிலையில் சித்திரிக்கப்பட்டுள்ளாள். அழகிய கோலங்கொண்ட இவ்வண்ணலின் அமைப்பு, சோழர் காலச் சிற்ப மேம்பாட்டுக்கு உயரிய சான்றாகும்.

## வீற்றிருந்த பெருமாள்

முதலாம் இராசாதிராச சோழனின் 30-ஆவது ஆட்சி ஆண்டில் (கி. பி. 1048) வீற்றிருந்த பெருமாளாகிய அழகிய மணவாளர், நரசிங்க ஆழ்வார் ஆகியோருக்கு உத்தராயணநாள், தட்சணாயன நாள், மாசிப் புனர்ப்பூசம், ஜெயந்தாடமி, மார்கழி ஏகாதசி, ஐப்பசி சித்திரை விஷு ஆகிய நாட்களில் விழா எடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அவ்விழா நாட்களில் வைஷ்ணவர்களுக்கும், கோயிலில் திருவாய்மொழி ஓதுவார்க்கும் உணவு வழங்கப்பட்டது. இதற்கென ஆண்டுதோறும் 2475 கலம் நெல் செலவிடப்பட்டதைக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[51]

## திருமேற்கோயில் ஆழ்வார்

வேதாந்த வேதிய மடத்தின் ஒரு பகுதியில் திருமேற்கோயில் ஆழ்வாரின் திருக்கோயில் அமைந்திருந்ததை முன்னர்க் கண்டோம். அமாவாசை நாளிலும், விஷுக்காலங்களிலும் இவ் இறைவனுக்கு விழா எடுக்கப்பட்டது, விழாவுக்கும் உணவுக்கும் நாள் வழிபாட்டுத் தேவைக்குமாக முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் நிலதானம் செய்யப்பட்டது.[52]

## வீரசோழ விண்ணகராழ்வார்

வீரசோழ விண்ணகராழ்வார், தென்திருவேங்கடத்து ஆழ்வார் ஆகியோருக்கு என்று தனித்தனிக் கோயில்கள் இருந்தனவாகக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. முதலாம் இராசேந்திர சோழ

---

51. A. R E. 1919, No. 176 & Part. II, Para. 18
52. A. R E. 1919, No. 202

வின் 7-ஆவது ஆட்சி ஆண்டில் (கி. பி. 1019) வீரசோழ விண்ணகராழ்வாரின் நாள் வழிபாட்டுத் தேவைக்கு என்று திருவிடையாட்டமாக தேவதான நிலம் வழங்கப்பட்டது.[53] வீரசோழன் என்பதும் பராந்தகனின் விருதுப் பெயர் ஆதலின், இக்கோயிலும் அம்மன்னன் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதாகக் கருதலாம்.



விஷ்ணு – புதுவை ராஜ்நிவாஸ்
[சோழர் காலம்]
நன்றி : French Institute of Indology – Pondicherry

53. A. R. E. 1919, No. 183

புதுவை ராஜ்பவனில் உள்ள பழமையான சீனுவாசப் பெருமாளின் சிற்பங்களுள், பழமையான அமைப்புடைய சிற்பம் ஒன்றையும் காண்கிறோம். இதன் பின் பக்கம் வேலைப்பாடு ஏதுமின்றிப் புடைப்புச் சிற்பம் போல் காணப்படுகிறது. வேலைப்பாடுள்ள தலைமுடியும், திருவாழ்மார்பும், பின்னிரு கைகளில் பிரயோகச் சக்கரமும் சங்கமும் கொண்டு, முன்னிரண்டு கைகளில், வலது கை அபய முத்திரையைத் தாங்கியும், இடது கை தொங்கிய நிலையிலும் போகஸ்தானக மூர்த்தியாய் (நின்ற திருக்கோலம்) விளங்கும் சிற்பமே, திருபுவனையில் இருந்த வீரசோழ விண்ணகராழ்வாராக இருக்கலாம்.

## தென்திருவேங்கடத்து ஆழ்வார்

திருபுவனையிலிருந்த தென்திருவேங்கடத்து ஆழ்வாருக்கு ஏற்கனவே கொடுக்கப்பட்டிருந்த தேவதான நிலம் போதாமையால், குலோத்துங்க சோழன் காலத்தில் மேலும் கூடுதலாக நிலம் கொடுக்கப்பட்டது.[54] புதுவை ராஜ்பவனில் உள்ள மேலும் மூன்று சீனிவாசப் பெருமாளின் சிற்பங்களுள், இங்குக் குறிக்கப் பெறும் தென்திருவேங்கடத்து ஆழ்வாரின் சிற்பமும் ஒன்றாக இருத்தல் வேண்டும்.

தென் ஆர்க்காடு மாவட்டம், கடலூருக்கு மேற்கே உள்ள திருவந்திபுரத்து தேவநாயகப் பெருமானுக்குத் திருபுவனையில் நிலதானம் செய்யப்பட்டதைக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன.[55] இதுகாறும் கூறியவை அனைத்தும் வைணவ சமயத்தைச் சார்ந்த கோயில்களாகும். இனி, திருபுவனையிலிருந்த சைவ சமயக் கோயில்களைப் பற்றிக் காண்போம்.

## அருளாகரன்

அருளாகரன் என்பான் முதலாம் குலோத்துங்க சோழன், அவன் மகன் விக்கிரம சோழன் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில், அன்னோர்க்குப் படைத் தலைவர்களாக விளங்கியவர்களில் ஒருவன். அக்காலத்தில் நடைபெற்ற பல போர்களிலும் பங்கேற்றவன்.

மணவிற்கூத்தன், அரும்பக்கிழான், நரலோக வீரன், காலிங்கர் கோன், பொன்னம்பலக்கூத்தன், பொற்கோயில்தொண்டைமான், மானவதாரன் முதலான வேறு பல சிறப்புப் பெயர்களும் இவனுக்கு உண்டு.

---

54. A. R. E. 1919, No. 190
55. A. R. E. 1919, Nos. 178, 179 & 188

தில்லை, திருவதிகை, நெய்வனை, கீழூர், திருப்புலிவலம், திருப்பாசூர், எலவானசூர், சித்தலிங்கமடம், தக்கோலம், ஆத்தூர், திருவாரூர், திண்டிவனம் முதலான ஊர்களிலுள்ள சிவத்தலங்களுக்கு, இவன் எண்ணற்ற அறங்கள் செய்துள்ளமையை ஆங்காங்குள்ள சாசனங்களால் அறியலாம்.

## அருளாகர ஈஸ்வரம்

அருளாகர ஈஸ்வரமுடையார் என்ற பெயரில், சிவன் கோயில் ஒன்று திருபுவனையில் இருந்தமையை, விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம். [56] மேற்கூறிய அருளாகரன் தன் அரசனின் நலம் வேண்டி இச்சிவன் கோயிலை எடுப்பித்தான். ஆதலின், அக்கற்றளி அவன் பெயராலேயே 'அருளாகர ஈஸ்வரமுடையார் கோயில்' என்று பெயர் பெற்று விளங்கியது.

விக்கிரம சோழன் காலத்தில் இக்கோயிலின் திருச்சுற்றாலை, மண்டபம் முதலானவை அமைத்தற்கு இடமும், நந்தவனம் அமைத்தற்கு நிலமும் ஊர்ச் சபையினரால் கொடுக்கப்பட்டன. இக்கல்வெட்டில் கோயில் அமைக்க நிலம் கொடுக்கப்பட்டதாகக் குறிக்கப்பெறாமையால், ஏற்கனவே இருந்த பழமையான கோயிலை, இவ்வருளாகரன் கற்றளியாக மாற்றினான் எனக் கொள்ளுதலே உண்மையாகும்.

## திருநாகேஸ்வரமுடையார்

திருநாகேசுவரமுடைய பரமசுவாமிகளுக்கு, ஒரு நாள் விழாவுக்காக தேவதான நிலம் வழங்கப்பட்ட செய்தியைக் குலோத்துங்க சோழனின் 5-ஆவது ஆண்டுக் (கி. பி. 1075) கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. [57] ஆகவே, திருபுவனையில் திருநாகேசுவரமுடையாருக்காக மற்றுமொரு சிவன் கோயில் இருந்ததை அறிகிறோம்.

## இலிங்கத்துமேடு

திருபுவனையில் இலிங்கத்துமேடு என்ற பெயரில் இரண்டு இடங்கள் உள்ளன. அவ்விடங்களில்தான், மேற்கூறிய அருளாகர ஈஸ்வரமுடையார்க் கோயிலும். திருநாகேஸ்வரமுடையார்க் கோயிலும் இருந்தமையாதல் வேண்டும்.

---

56. A. R. E. 1919, No. 175
57. A. R. E. 1919, No. 197

திருபுவனையிலிருந்து சன்னியாசிக்குப்பம் என்னும் சிற்றூருக்குச் செல்லும் வழியில், திருபுவனைக்கு மிக அண்மையில், பாதையின் இடது பக்கத்தே, உடைபட்ட நிலையில் இலிங்கம் ஒன்று கிடப்பதை இன்றும் காணலாம். அது நிலத்தினின்றும் அகழ்ந்தெடுக்கப் பட்டதாகக் கேள்விப்படுகிறோம். அது மேற்கூறிய இரண்டு சிவன் கோயில்களில், ஒன்றனுக்குரிய மூலவராக இருக்கலாம்.

முற்பட்ட சோழர் காலத்து வேலைப்பாடுடைய விநாயகரின் திருவுருவச் சிலை ஒன்று, பிற்பட்ட மாரியம்மன் கோயிலின் நுழைவாயிலை அணிசெய்கிறது. இச்சிலையும் முற்காலத்துச் சிவன் கோயிலைச் சார்ந்த சிலையாகவே இருத்தல் வேண்டும். அண்மையில் திருபுவனையில் கிடைத்த நடராசர், அம்மன் முதலான செப்புத் திருமேனிகளும், எழுத்து வரிகள் கொண்ட சங்கும் இச்சிவன் கோயிலைச் சார்ந்தனவாகவே இருத்தல் வேண்டும். இவ்வாறு புதைபொருளாக வெண்சங்கு கிடைப்பதென்பது மிக அரிதானது. பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்ட வெண்சங்கு ஒன்று சாலிகுண்டத்தில் கிடைத்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. [58]

புதுவையில் உள்ள தலைமை மருத்துவ மனையில், வழியிடைக் காட்சிப் பொருளாக இரண்டு வாயிற்காப்போரின் பழமையான சிலைகள் காணப்படுகின்றன. அவை சிவன் கோயிலுக்கு உரித்தான துவாரபாலகரின் சிலைகளாகும். அவை இரண்டும், வெவ்வேறான தோற்றமும் அமைப்பும் உடையவை. எனவே, அவ்விரண்டிற்கும் இணையான மற்றுமிரண்டு சிலைகளைப்பற்றிய தகவல்கள் நமக்குக் கிடைக்கவில்லை. இவ்விரண்டு சிலைகளில் ஒன்று, மதகடிப்பட்டுச் சிவன் கோயிலுக்கு உரியது. மற்றொன்று திருபுவனையிலிருந்த சிவன் கோயில்களில் ஒன்றைச் சார்ந்தது.

## புதுவைச் சிலைகள்

புதுவை ராஜ்பவனில் உள்ள சிலைகள் அனைத்தும், அறிஞர் திரு. மூவோ துப்ராய் அவர்களால் கொண்டுவரப்பட்டவை ஆகும். புதுவைப் பூங்கா, தலைமை மருத்துவமனை, பிரஞ்சுப் பண்பாட்டுக் கழக அலுவலகம் (French Institute of Indology) ஆகியவற்றில் உள்ள பழமையான சிற்பங்களில் பல மதகடிப்பட்டு, திருபுவனை ஆகிய இடங்களில் இருந்து கொண்டுவரப்பட்டவை. எனவே, இச்சிலைகளைப் பற்றிய செய்திகள் உரிய இடத்தில் ஆங்காங்கே சுட்டிக் காட்டப்பட்டன.

---

58. தென்னிந்திய கோயிற் சாசனங்கள், தொகுதி. III, பகுதி. II, பக்கம். 345

## திருமாணிக்குழி மகாதேவர்

தென்னார்க்காடு மாவட்டம், கடலூருக்கு மேற்கே 10 கி.மீ. தொலைவில் திருமாணிக்குழி என்றதொரு சிற்றூர் உண்டு. அங்குள்ள சிவன் கோயில் பாடல் பெற்ற தலமாகும். இறைவன் திருமாணிக்குழி மகாதேவர் என்று அங்குள்ள கல்வெட்டுகளில் போற்றப்பெறுகிறார்.

இத்திருமாணிக்குழி மகாதேவருக்குத் திருபுவனியில் இறையிலியாக தேவதான நிலம் விடப்பட்டது. அது போதாமையின், முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் கூடுதலாக நிலதானம் செய்யப்பட்டதைச் சாசனம் ஒன்றால் அறிகிறோம்.[59]

## பூபாலசுந்தர விளாகம்

திருபுவனியின் கிழக்குத் திசையில் அமைந்திருக்கும் நிலப்பகுதி, அக்காலத்தில் துர்க்கைக்கு வழங்கப்பட்ட தேவதான நிலமாகும். அந்நிலப்பகுதி முழுவதும் அளக்கப்பட்டு, எல்லை முதலானவை வரையறுக்கப்பட்ட பின்னர், அந்நிலப் பகுதிக்குப் 'பூபால சுந்தரவிளாகம்' என்று புதிய பெயர் இடப்பட்டது.[60]

## பள்ளிகொண்ட அண்ணல்

பள்ளிகொண்ட அண்ணலான அரங்கநாதரின் பேருருவச் சிலையொன்று திருபுவனியில் காணப்படுகிறது. சில ஆண்டுகளுக்கு முன்னர், இச்சிலை நிலத்தினின்றும் அகழ்ந்தெடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இப்பெருமானுக்குத் தனி மண்டபம் அமைத்துச் சீரான நிலையில் வைத்தவர், அப்போது போலீஸ் இன்ஸ்பெக்டராக இருந்த உயர்திரு ஓடாத்தேரி என்னும் பெருமகனார் ஆவர்.

சோழர் காலத்துத் திருபுவனியில் இவ்வாறு எண்ணற்ற கோயில்கள் இருந்தனவாகக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. அவை நிவந்தங்கள் பல பெற்றுச் சிறுஞ்சிறப்புடன் விளங்கின. அக்கோயில்களுள், இன்றைய திருபுவனியில் எஞ்சி நிற்பது, வீரநாராயண விண்ணகராழ்வாரின் கோயிலேயாம்.

இவ்வூரில் உள்ள விளைநிலங்கள், கிணறுகள் முதலான இடங்களில், பழமையான சின்னங்களை உடைய பொருட்களும், செப்பு

59. A. R. E. 1919, No. 209
60. A. R. E. 1919, No. 207

நாணயங்களும் அவ்வப்போது கிடைப்பதாகக் கேள்விப்படுகிறோம். அவற்றின் அருமை உணரப்படாமையின், அவை காக்கப்படவில்லை. அவற்றால் மேலும் பல உண்மைகள் வெளிப்படக்கூடும்.

## கட்டடக் கலை



திருபுவனை வரதராசப் பெருமாள் கோயில்
[தெற்குச் சுவர் பீடம் – பராந்தகன் I காலம்]
நன்றி : French Institute of Indology – Pondicherry

வீரநாராயண விண்ணகராழ்வாரின் கோயில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ள கற்றளி ஆகும். கருவறை சதுரவடிவானது.

கருவறையும் அர்த்த மண்டபமும் அந்தாராளத்தால் இணைக்கப் பட்டுள்ளன. கருவறை முதலானவை பீடத்தின் மீது உயர்வாக அமைந்துள்ளன.

## மகாமண்டபம்

மகாமண்டபம் சிறிது தாழ்வாக உள்ளது. மண்டபம் பிற் காலத்ததாக இருப்பினும், ஏற்கனவே பழமையான மண்டபம் இருந்து அழிந்துபட்டமையை, அதன் உயரமான சிற்ப வேலைப் பாடுள்ள அடித்தளம் தெளிவாக உணர்த்துகிறது. ஒருவேளை அது மூவேந்த வேளார் திருமண்டபமாகவும் இருக்கலாம்.

இம்மண்டபத்தின் அடித்தளம் உருண்டையான குமுதப்படை யையும், யாளி வரிமானத்தையும், நுட்பமான வேலைப்பாடுள்ள சிற்றுருவச் சிலைகள் பலவற்றையும் கொண்டு அழகுற மிளிர்கின்றது. மண்டபத்தை அடைதற்குத் தெற்கு வடக்குப் பக்கங்களில் படிகள் உள்ளன. படிகளும் சிற்றுருவச் சிலைகளால் சிறக்கின்றன. கரு வறையின் அடித்தளம், அதிக வேலைப்பாடு இன்றி சாதாரண மாகவே அமைந்துள்ளது. அதன் மேற்பகுதி பல படைகளைக் கொண்டுள்ளது. அப்படைகளுள் ஒன்றான குமுதப் படையில், சிற்றுருவச் சிலைகள் பல செதுக்கப்பட்டுள்ளன.

சுவர்களில் தேவகோட்டங்கள் இல்லை. ஆயினும், பட்டை வடிவமுள்ள அரைத் தூண்களால் அவை அணி செய்யப்பெற் றுள்ளன. தூண்கள் அனைத்தும் பலகை, கும்பம், சதுரம் முதலான உறுப்புகளை உடையனவாய்க் காட்சியளிக்கின்றன. கொடுங்கையில் உள்ள கூடுகள் சிதைந்துள்ளன. ஓரிரு கூடுகளில் மனிதனின் தலையைக் காண்கிறோம். கொடுங்கையின்மேல் யாளி வரிமானம் உண்டு.

## சிற்பங்கள்

மகாமண்டபத்து பீடத்திலும், படிகளிலும், குமுதப்படையிலும் அழகிய சிற்றுருவச் சிலைகள் பல நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன. மத்தளம் அடிக்கின்ற மங்கையர், துடிகொட்டும் பிடியிடையார், 'ஆடிய காலும் அதிற் சிலம்பு ஓசையும் பாடிய பாட்டும் பலவான நட்டமும் கூடிய கோலம்' கொண்டிலங்கும் கோதையர், மலையென மோதுகின்ற களிறுகள், யாளியால் தாக்குறும் யானைகள், 'பாம்பணைமேல் பாற்கடலுள் பள்ளிகொண்ட பெம்மான்', 'உறிக் கொண்ட வெண்ணெய் பால் ஒளித்துண்ணும் அம்மான்', 'ஆயர்

கொழுந்தாய் அவரால் கடையுண்ணும் மாயன்' முதலான கவினுறு காட்சிகள் ஆங்காங்கே வடிக்கப்பட்டுள்ளன.

## இராமகாதை

'நீள்கடல்சூழ் இலங்கைக்கோன் தோள்கள்தலை துணிசெய்யும்' காட்சி,

கங்கையாற்றில் குகன் ஓடத்தைச் செலுத்த அதில் 'தாமரை நயனத்தான் இந்துவின் நுதலாளோடும் இளவலொடும்' இனிதேறிச் செல்லும் காட்சி,

கானகத்தில் இராமனைக் கண்ட பரதன் 'வேதனைத் திருமகள் மெலிகின்றாள் விடுநீதெனத் தொழுதெழும்' காட்சி,

சீதையைக் கடத்த முயன்ற சூர்ப்பணகையை இலக்குவன் 'மூக்கும் காதும் வெம்முரண் முலைக்கண்களும் முறையாற் போக்கிய' காட்சி,

இராமன் தொடுத்த அம்பால் 'அட்டதிக்கிலும் அப்புறம் புகவிட்டு அழைத்து ஒருகுன்றென வீழும்' மாரீசன் காட்சி,

'வாலி கலங்கி வல்விசைக் கால்கிளர்ந்து எரிவுறக் கடைக் கால் விலங்கல் மேருவும் வேர்பரித் தாலென வீழும்' காட்சி,

'பொன்னையே பொருவுவாய் போதெனப் போதுவான், தன்னையே யனையவன் சரணம்வந் தணுகின' சுக்கிரீவன் காட்சி,

'நெடும்பல் மகல்வரை தூர்த்து நெருக்கிய' சேதுபந்தனக் காட்சி,

அரிவையுடன் அண்ணல் இளவலொடு மூவரையும் அஞ்சலித்து அனுமன் அருகிருக்கும் காட்சி,

ஆகிய இராமாயணக் காட்சிகளைக் கொண்ட சிற்பங்கள் தெற்குச் சுவரை அழகு செய்கின்றன. இத்தகு இராமாயணக் காட்சிகள் குடந்தைக் கீழ்க்கோட்டத்திலும் சிற்ப உருவில் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன.

கேழல் ஒன்றாகிக் கிடந்த கேசவன், முன்னம் குறளுருவாய் மூவடிமண் கொண்டளந்து மன்னன் மாவலியை மாய்த்திட்ட மாயவன், புள்ளேறி வீற்றிருக்கும் பெருமான், இரணியனுக்கு எதிரான நரசிம்மன், வேழம் மருப்பொசித்த வேந்தன் ஆகிய சிற்பங்கள் மேற்குச் சுவரை அணி செய்கின்றன.

## வடமொழிக் கல்லூரி

புதுவை மாநிலத்தைச் சேர்ந்த பாகூரில், பல்லவன் நிருபதுங்கன் காலத்துக்கு முன்பே வடமொழிக் கல்லூரி ஒன்று இருந்ததை அம்மன்னன் காலத்துச் செப்பேடுகளால் அறிகிறோம்.[61] தென்னார்க்காடு மாவட்டத்தில் எண்ணாயிரம் என்னும் ஊரில், சோழர் காலத்து வடமொழிக் கல்லூரி ஒன்று இருந்தமையைக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[62]

மேற்கண்ட கல்லூரிகளைப் போலவே, நமது திருபுவனையிலும் அக்காலத்தில் கல்லூரி ஒன்று இருந்துள்ளது. இதனை முதலாம் இராசாதிராச சோழனின் 30-ஆவது ஆண்டில் (கி. பி. 1048) வரையப்பட்ட சாசனம் ஒன்று புலப்படுத்துகிறது.[63] இம்மன்னனின் படைத் தலைவர்களில் ஒருவனான 'இராசேந்திர சோழ மாவலி வாணராயன்' என்பவனால், இக்கல்லூரிக்கு நிவந்தங்கள் விடப்பட்டன.[64]

குலோத்துங்க சோழன் காலத்தில் இக்கல்லூரி நிறுவப்பட்டதாகக் கூறுவாரும் உளர்.[65] குலோத்துங்கனுக்கு முன்னோனான முதலாம் இராசாதிராசனின் காலத்திலேயே இக்கல்லூரிக்கு மானியம் விடப்பட்டுள்ளதால் அக்கருத்து பொருந்தாது.

### கற்பிப்போர்

ரிக்வேதம், யசுர்வேதம், சந்தேக சாமம், தலவகார சாமம், ஆபூர்வம், வாஜஸநேயம், போதாயனீயம், சந்தியாஷ்ட சூத்திரம் ஆகியவை கற்பிக்கும் ஆசிரியர் பன்னிருவர் இக்கல்லூரியில் பணியாற்றினர்.

### கற்போர்

திருபுவனைக் கல்லூரியில் 190 மாணவர்கள் பயின்றனர். ரிக்வேதம், யசுர்வேதம், சந்தேக சாமம், வேதாந்தம், வியாகர்ணம்,

---

61. Epigraphia Indica, Vol. XVIII, No. 2
62. A. R. E. 1917, No. 333
63. A. R.. E. 1919, No. 176
64. Epigraphia Carnatica, Vol. IX, NL. 25
65. புதுவைச் செய்திகள், ஆகஸ்டு. 1970, பக்கம். 15

ரூபாவதாரம், ஸ்ரீபாரதம், இராமாயணம், மனுசாஸ்திரம், வைகானச சமம் முதலானவை மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட்டன.

### ஊதியம்

ரிக்வேதம் ஓதும் ஆசிரியர் மூவர், யசுர் வேதம் ஓதும் ஆசிரியர் மூவர், சந்தோக சாமம், தலவகார சாமம், ஆபூர்வம், வாஜஸநேயம், போதாயனீயம், சத்தியாஷ்ட சூத்திரம் முதலானவை ஓதும் ஆசிரியர் அறுவர் ஆக ஆசிரியன்மார் பன்னிருவருக்கு, நாள்தோறும் நான்கு கலம் நெல் ஊதியமாகக் கொடுக்கப்பட்டது.

### மாணவர்க்குப்படி

வேதாந்தம், வியாகர்ணம், ரூபாவதாரம், ஸ்ரீபாரதம், இராமாயணம், மனுசாஸ்திரம், வைகானச சாஸ்திரம் முதலானவை ஓதும் விரிவுரையாளர்க்கும், ரிக்வேதம் பயிலும் மாணவர் அறுபதின்மர், சந்தோக சாமம் பயிலும் மாணவர் இருபதின்மர், யசுர்வேதம் பயிலும் மாணவர் அறுபதின்மர், ஏனைய சாஸ்திரங்களைப் பயிலும் மாணவர் ஐம்பதின்மர் ஆக 190 மாணவர்க்கும் நாள்தோறும் பதினெரு கலனே குறுணிநாழி நெல் கொடுக்கப்பட்டது. வேதாந்தம், வியாகர்ணம், ரூபாவதாரம் ஆகியவை கற்கும் மாணவர்க்கும் அவ்வாறே நெல் கொடுக்கப்பட்டு வந்தது.

### வருவாய்

மேற்கண்டவாறு திருபுவனைக் கல்லூரியின் ஆசிரியர்க்கும் மாணவர்க்குமாக ஆண்டுதோறும் செலவிடப்பட்ட நெல் 9525 கலம் ஆகும். இத்தேவைக்கும் பிறவற்றுக்குமாக 72 வேலி நிலம் மானியமாக வழங்கப்பட்டிருந்தது.[66] இந்நிலங்களிலிருந்து ஆண்டு தோறும் வருகின்ற 12000 கலம் நெல் தொகுதியிலிருந்து, கல்லூரிக்கான செலவுகள் ஈடுசெய்யப்பட்டன. இக்கல்லூரியைப் பற்றிய செய்திகளைச் சாசனம் மிகத் தெளிவாக விளக்கிச் செல்கிறது.

திருபுவனையில் இருந்த சிவன் கோயில்கள், சில விஷ்ணுக் கோயில்கள், மடங்கள், மண்டபங்கள் முதலானவற்றைப் போலவே, இக்கல்லூரி இருந்த இடமும் சுவடற்றுப் போனது வருந்தத் தக்கது. இது வேதாந்த வேதிய மடத்தில் இயங்கியதாகக் கருதுதற்கு இடமுளது. பல்லவர் காலங்களிலும், சோழர் காலங்களிலும்,

---

66. A. R. E. 1919, No. 176 & Part. II, Para. 18

வடமொழி வளர்ச்சிக்கு என்று கல்லூரிகள் இருந்தமை போல, தமிழ் மொழி வளர்ச்சிக்கு என்று இத்தகைய கல்லூரிகள் இருந்தனவாகத் தெரியவில்லை.

## குலோத்துங்க சோழ சரிதை

அக்காலத்தில் நமது திருபுவனையில் வாழ்ந்த 'கவிகுமுத சந்திர பண்டிதனான திருநாராயணபட்டர்' என்பவர், கி. பி. 1097-ஆம் ஆண்டில் 'குலோத்துங்க சோழ சரிதை' என்ற பெயரில் காவியம் ஒன்று இயற்றினார்.

இக்காவியம் திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்து வீர நாராயண விண்ணகராழ்வார்க் கோயிலில் பாடப்பட்டு, அரங்கேற்றம் செய்யப்பட்டது. இவ்வரிய செயலுக்கென இப்புலவர் பெருந்தகைக்கு, அரைவேலி இரண்டு மா அளவுடைய நிலம் மானியமாக வழங்கப்பட்டது.[67] இக்காவியம் முதலாம் குலோத்துங்க சோழனைப் பற்றியது,

இனி, இக்குலோத்துங்கனின் கலிங்கப்போர் நிகழ்ச்சியைப் பாடிய செயங்கொண்டாருக்கு, இப்புலவர் பெருந்தகை காலத்தால் முற்பட்டவர் என்றும், இக்காவியத்தில் கலிங்கப்போர் நிகழ்ச்சி இடம் பெற்றிருக்க இயலாது என்றும், இந்நூற் பெயரை நோக்க இது தமிழ் மொழியிலேயே இயற்றப்பட்ட நூலாதல் வேண்டும் என்றும் ஆராய்ச்சியாளர் கருதுவர்.[68] மறைந்துபோன எண்ணற்ற தமிழ் நூல்களில் இவ்வரிய நூலும் ஒன்று.[69]

## அரசியல் தலைவர்கள்

பல்லவன் பல்லவரையன், வாணாதிராசன், பெரும்புலியூர் நம்பி, உம்பலநாட்டு மூவேந்தவேளாளர், இராசேந்திரசோழ மாவலி வாணராயர், ஆகவமல்ல குலாந்தக மூவேந்தவேளார், உத்தம சோழ வாணராசர், உத்தம சோழ விழுப்பரையர், அரும்பக்கிழான் மதுராந்தகன் பொன்னம்பலக் கூத்தனான பொற்கோயில் தொண்டைமான், கூடல் அரசநாராயணன் ஆளப்பிறந்தானான

---

67. A. R. E. 1919, No. 198
68. சாசனத் தமிழ்க்கவி சரிதம், பக்கங்கள். 59 & 60
69. மறைந்துபோன தமிழ் நூல்கள், பக்கம். 255

காடவாராயன், செங்கேணி வீரசோழன் அத்திமல்லனான எதிரிலி சோழ சம்புவராயன் முதலான அரசியல் தலைவர்களின் பெயர் களைத் திருபுவனைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவர்க ளெல்லாம் சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் திருமந்திர ஓலை, படைத்தலைமை, பாடிகாவல் முதலான பல்வேறு அரசியற் பணிகளில் ஈடுபட்டிருந்த அதிகாரிகள் ஆவர்.

திருவெண்காட்டுப் பேரரையன், சோழகுலவல்லி பட்டன், நாகமாணிக்க இளவரையன், திருமங்கலத்துப் பொற்றேவன், திரு வாழ்மறவன், சூரியதேவன், பெருமானம்பி முதலான வேறுசில அதிகாரிகள் உள்ளூர்த் தலைவர்களாக விளங்கினர்.

## பட்டர்கள்

தியாகுபட்டன், காராம்பிச்செட்டு பள்ளிகொண்டான் பட்டன், திருப்போகி பட்டன், விஷ்ணு பட்டன், சோமயாஜி சடையப் பெருமான் பட்டன், சூலபாணி அண்டநாயகன் பட்டன், காகபட்டன் முதலான பட்டர்கள், திருபுவனையில் இருந்த வைணவக் கோயில்களில் இறைப்பணி செய்துவந்தனர்.

## கட்டுப்பாடு

திருபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துக் கிராமங்களில் பணியாற்றிய பட்டர், உபாத்தியாயர், கணக்கர், தச்சர், கொல்லர் முதலானோர் தத்தமது தொழிலைத் தத்தமது ஊரிலேயே செய்தல் வேண்டும் என்றும், வேற்றூர் சென்று தொழில் செய்யின், அவர்கள் சபைக்குக் குற்றம் இழைத்தவராகக் கருதப்படுவர் என்றும், அச்சதுர்வேதி மங்கலத்துச் சபையினர் தீர்மானம் ஒன்று நிறை வேற்றினர். இதனை, முதலாம் குலோத்துங்க சோழனின் 43-ஆவது ஆண்டில் (கி. பி. 1113) வரையப்பட்ட கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[70]

"சபையினரால் மானியமாக நிலம் பெற்ற மேற்கூறிய தொழி லாளர்கள், தமது கடமையைச் செவ்வனே செய்யாமல், ஊர் விட்டு வேற்றூர் சென்று, தொழில் செய்து அவ்வப்போது கூலி பெற்று வந்தமையின், மேற்கண்ட முடிவினைச் சபையினர் இயற்ற

---

70. A. R. E. 1919, No. 205

வேண்டியது ஆயிற்று" என்று அறிஞர் திரு. T. V. S. பண்டாரத்தார் அவர்கள், சபையினரின் மேற்கண்ட முடிவுபற்றிய தமது கருத்தை வெளியிட்டுள்ளார்.[71]

## கலப்பினத்தவர்

முற்காலத்தில் அரசகுலப் பெண்ணுக்கும் வைசியனுக்கும் பிறந்தவன் 'ஆயோகவன்' எனப்பட்டான். ஆயோகவர் என்பவர்கள், பிரதிலோமப் பிரிவைச் (கலப்பினம்) சேர்ந்தவர்கள். இவர்கள் இறைவனுக்கும் அரசனுக்கும் அந்தணருக்கும் ஆடைகள் நெய்து கொடுக்க அனுமதிக்கப்பட்டனர்.[72] இத்தகைய கலப்பினத்து நெசவாளர்களில் ஒரு பிரிவினர், நமது திருபுவனியிலும் இருந்துள்ளனர். இவர்கள் பிராமணர்களுக்கு வைசியப் பெண்டிரிடம் பிறந்தவர்கள். இவர்களுக்கு இங்கு இறையிலி நிலம் மானியாகக் கொடுக்கப்பட்டிருந்தது. இச்செய்தியை விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[73]

இதுகாறும் கூறிய செய்திகளால் திருபுவனியில், முதற் பராந்தகச் சோழன் ஆட்சியின்போழ்து, அவனுடைய விருதுப் பெயரான வீரநாராயணன் என்ற பெயரால் திருமால் கோயிலும், அவனுடைய பட்டத்தரசியின் பெயரால் கோக்கிழானடிப் பேரேரியும், மற்றொரு மனைவியான திரிபுவனமாதேவியின் பெயரால் சதுர்வேதிமங்கலமும் அமைக்கப்பட்டமையை அறிகிறோம்.

ஏரியின் வாய்க்கால்களும், சிதறிக்கிடந்த சேரிகள் பலவும் முறையே சோழ மன்னர்களின் பெயர்களையும், திருமாலின் பெயர்களையும் பெற்று, மடங்களையும் மண்ணடபங்களையும் எண்ணற்ற கோயில்களையும் கொண்டு, வடமொழிச் சாத்திரங்களை வளர்த்து, குலோத்துங்க சோழ சரிதை என்னும் காவியத்தை அரங்கேற்றி, சோழர்தம் அரசியல் அதிகாரிகளின் பல்வேறு கொடைகளைப் பெற்று, கி. பி. 9-ஆம் நூற்றாண்டு தொடங்கி கி. பி. 16-ஆம் நூற்றாண்டு முடிய உள்ள முற்பட்ட வரலாற்றுச் சான்றுகளைத்

---

71. பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம். III, பக்கம். 105
72. Journal of the Annamalai University, Vol. XXII, P. 36
73. A. R. E. 1919, No. 208

தன்பாற்கொண்டு, தொன்மையும் பெருமையும் உடைய பேரூராய்த் திகழ்ந்த இத்திருபுவனை, இன்று தன் பொலிவிழந்து சீரும் சிறப்பும் குன்றி ஒரு சிற்றூராய்க் காட்சி தருகின்றது.

பிரஞ்சுக்காரர்களின் ஆட்சிக் காலத்தில், திருபுவனைக்கு ஒரு ஒன்றியத்தின் தலைமை இடமாவது கொடுக்கப்பட்டு, அதன் சீரிய பெருமை மறக்காமல் காக்கப்பட்டது. இக்காலத்தில் அதுவும் நீக்கப்பட்டுவிட்டது. காலவெள்ளத்தின் கடுமையான சுழற்சியில் சிக்கிய தொன்மைசான்ற ஊர்களில் நமது திருபுவனையும் ஒன்று.



# திருவாண்டார்க்கோயில்

புதுவையிலிருந்து மேற்கே 21 கி. மீ. தொலைவில், விழுப்புரம் செல்லும் நெடுஞ்சாலையில், திருவாண்டார்க்கோயில் என்னும் சிற்றூர் அமைந்துள்ளது. இவ்வூரில் பஞ்சநதிசுவரர் என்னும் பழமை வாய்ந்த சிவன் கோயில் உள்ளது. அக்கோயிலில் வரையப் பட்டுள்ள கல்வெட்டுகளால், இவ்வூரின் தொன்மையை அறியலாம்.

## சாசனங்கள்

பரகேசரி என்னும் பட்டம் உடைய முதலாம் பராந்தகச் சோழன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், முதலாம் குலோத்துங்க சோழன், விசயநகர வேந்த ரான விருப்பன்ன உடையார்[1] (கி. பி. 1396), வீரபுக்கர் (கி. பி. 1402), வீரப்பிரதாப கிருஷ்ணதேவ மகாராயர், சாளுவ நரசிங்க மகாராசர் (கி. பி. 1503) ஆகியோரின் ஆட்சிக் காலங் களில் வரையப்பட்ட பத்தொன்பது கல்வெட்டுகள் சிவன் கோயிலில் காணக்கிடக்கின்றன.

மேலும் சிதைவுற்ற நிலையில் காணப்படும் மற்றொரு கல்வெட்டு, முதலாம் ஆதித்த சோழனின் 5-ஆவது ஆட்சி ஆண்டைச் (கி. பி. 876) சார்ந்ததாகக் கருதப்படுகிறது.[2] இனி, இக்கல் வெட்டுகளையும் இன்னபிற சான்றுகளையும் துணையாகக்கொண்டு இதன் தொன்மையை அறிய முற்படலாம்.

## தேவாரம்கூறும் வடுகூர்

திருவாண்டார்க் கோயிலின் மேற்குத் திக்கில் தனித்த நிலையில், கிழக்கு நோக்கியவாறு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை திருஞானசம்பந்தர் பாடியதாகக் கூறுவர்.

"சுடுகூர் எரிமாலையணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூர் அடிகளே!"

---

1. இவர் அரியரன் மகன் இரண்டாம் விரவிருப்பன்ன உடையார் (See also A. R. E. 1917, Part. II, Para. 67)
2. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், பக்கம். 294

"கோலம் பொழிற்சோலைக் கூடி மடவன்னம்
ஆலும் வடுகூரில் ஆடும் அடிகளே!"

"ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு
பாடும் வடுகூரில் ஆடும் அடிகளே!"

"...... வரிவண் டிசைபாட
ஒளிரும் வடுகூரில் ஆடும் அடிகளே!"

"பறையும் அதிர்குழலும் போலப் பலவண்டாங்
கறையும் வடுகூரில் ஆடும் அடிகளே!"

எனவரும் திருஞானசம்பந்தரின் பதிகப் பகுதிகளைக் கொண்டு,[3] அவர் காலத்தில் திருவாண்டார்க் கோயில் என்னும் இச்சிற்றூர், 'வடுகூர்' என்று பெயர் பெற்றிருந்ததாகக் கூறுவர். ஞானசம்பந்தரின் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு என்பதில் ஐயமில்லை.[4] திருவாண்டார்க்கோயிலில் உள்ள கல்வெட்டுகள் கி. பி. 10-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி தொடங்கி, கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி முடிய உள்ள காலப்பகுதியில் வரையப் பட்டவை ஆகும். எனினும், இவற்றுள் ஒரு கல்வெட்டேனும், ஞானசம்பந்தர் காலத்து வடுகூர் என்னும் பெயரைக் குறிப்பிட வில்லை.

தேவாரம் பெற்ற தலங்களின் பெயர்கள், பெரும்பாலும் கல்வெட்டுகளால் உறுதி செய்யப்பெறுகின்றன. காட்டாகத் திரு வெண்ணெய் நல்லூர், திருநெல்வெண்ணெய் (நெய்வனை), இடை யாறு, அறையணிநல்லூர், திருமாணிக்குழி, திருவதிகை, கீழூர் (திருக்கோவலூர்), திருப்பாதிரிப்புலியூர் முதலானவற்றைக் கூற லாம்.[5]

---

3. திருஞானசம்பந்தர் தேவாரம், திருவடுகூர்ப் பதிகம்
4. (i) பன்னிரு திருமுறை வரலாறு, பாகம். I, பக்கம். 292
   (ii) இலக்கிய வரலாறு, பாகம். II, பக்கம். 308
5. ( i ) S. I. I., Vol. XII, No. 140
   ( ii ) A. R. E. 1908, Part. II, Para. 45
   ( iii ) A. R. E. 1928–29, Nos. 276–296
   ( iv ) A. R. E. 1934–35, No. 116
   ( v ) S. I. I., Vol. VII, Nos. 772–791
   ( vi ) S. I. I., Vol. VIII, Nos. 301–335
   ( vii) A. R. E. 1902, Nos. 230–306
   ( viii) A. R. E. 1902, Nos. 115–135

திருவாண்டார்க்கோயில் பஞ்சநதீசுவரர் ஆலயத்தின் கருவறைத் தெற்குச் சுவரில் வரையப்பட்டுள்ள முதலாம் பராந்தகச் சோழனின் 15-ஆவது ஆட்சி ஆண்டுடைய (கி. பி. 922) கல்வெட்டில்,

“திருநல்லாற்று வடகரை பிரம்மதெயமான திரிபுவனமஹாதெவிச் சதுர்வெதிமங்கலத்து திருவறை நக்கன் கொயில் பரமஸ்வாமி”

என்னும் தொடர் காணப்படுகிறது. இறைவனுக்கு வீட்டு மனை ஒன்று வழங்கியதைப் பற்றி இச்சாசனம் கூறுகிறது. பராந்தகச் சோழன் காலத்தில், தென்பெண்ணை ஆற்றுக்குத் ‘திருநல்லாறு’ என்று பெயர் இருந்ததை இக்கல்வெட்டால் அறியலாம். நக்கன் என்பது சிவபெருமானுக்கு உரிய பெயர்களில் ஒன்று.

நந்தாவிளக்கு எரிப்பதற்காகத் தொண்ணூறு ஆடுகள் நிவந்தமாக விடப்பட்ட செய்தியைக் குறிக்கும் இம்மன்னனின் 40-ஆவது ஆண்டில் (கி. பி. 947) வரையப்பட்ட மற்றொரு சாசனத்தில்,

“பெண்ணை வடகரை பிரம்மதெயமான ஸ்ரீதிரிபுவனமஹாதெவிச் சதுப்பெதிர் மங்கலத்து”

என்னும் தொடர் காணப்படுகிறது. இக்கோயிலில் உள்ள சாசனங்களில் இவை இரண்டும் மிகப் பழமையானவை. இவற்றில் திருவாண்டார்க்கோயிலுக்கு ‘வடுகூர்’ என்று பெயர் இருந்ததாகவோ வேறு பெயர் இருந்ததாகவோ குறிக்கப்பெறவில்லை.

முதலாம் இராசேந்திரசோழனின் 27-ஆவது ஆண்டில் (கி. பி. 1039) வடக்கு மேற்குச் சுவர்களில் வரையப்பட்ட சாசனம் ஒன்று, விளக்குத் தானமாக ஆடுகள் வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகிறது. அதில்,

“ஜெயங்கொண்ட சொழமண்டலத்து பிரம்மதெயமான திரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திருவறையுடைய பரமஸ்வாமி”

என்னும் பகுதி காணப்படுகிறது. எனவே, இம்மன்னன் காலத்திலும், வடுகூர் என்னும் பெயர் இருந்ததாகத் தெரியவில்லை.

“இராஜெந்திர (சொழ) வளநாட்டு விழுப்பரைய நாட்டு ஸ்ரீதிரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திருவறையுடைய மஹாதெவர்”

என்னும் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்துச் (கி. பி. 1090) சாசனத்திலும், வடுகூர் என்னும் பெயர் காணப்படவில்லை. வீரசிகாமுகச்சேரி கிளிநங்கை என்னும் பிராமணப்

பெண் ஒருத்தி, விளக்குத் தானமாகத் தொண்ணூறு ஆடுகள் கொடுத்ததை இச்சாசனம் குறிப்பிடுகிறது.

இவ்வாறு திருவாண்டார்க் கோயிலில் உள்ள சோழர் காலத்துச் சாசனங்கள், இவ்வூர் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பகுதியாக இருந்தமையைத் தெளிவாக உணர்த்துகின்றன. இதனால், இன்று தனியொரு ஊராக விளங்கும் திருவாண்டார்க் கோயில், சோழர் காலத்துப் பேரூரான திருபுவனியின் ஒரு பகுதியே என்பது இனிது புலனாகும்.

ஞானசம்பந்தர் குறிப்பிடும் வடுகூர் என்பது, இப்பகுதியில் இருந்த சிற்றூர் ஒன்றுக்குப் பெயராக இருந்ததையும், அதனை மதகடிப்பட்டுக் கல்வெட்டு ஒன்று குறிப்பால் உணர்த்துவதையும் முன் கட்டுரையில் குறித்துள்ளோம்.

## தேவாரம் பெற்ற தலம் எது ?

அக்காலத்தில் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து எல்லைக்குள் திருவறைநக்கன் கோயில், திருநாகேசுவரம் உடையார் கோயில், அருளாகர ஈசுவரம் உடையார் கோயில் எனப் பழமையான மூன்று சிவன் கோயில்கள் இருந்தனவாகக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

திருவறைநக்கன் கோயில் என்பது, இன்றுள்ள திருவாண்டார்க் கோயிலின் சிவத்தளியைக் குறிக்கும்.[6] திருநாகேஸ்வரமுடையார் என்னும் சிவபெருமானுக்கு விழா எடுப்பதற்காக, முதலாம் குலோத்துங்க சோழனின் 5-ஆவது ஆண்டில் (கி. பி. 1075) நிலதானம் செய்யப்பட்டதைக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[7] ஆதலின், அம்மன்னவன் காலத்துக்கு முன்பே இப்பகுதியில் திருநாகேசுவரமுடையார் என்ற பெயரில், சிவன் கோயில் ஒன்று இருந்ததையும் உணர்கிறோம்.

இனி, விக்கிரம சோழனின் 6-ஆவது ஆண்டில் (கி. பி. 1124) அருளாகர ஈசுவரமுடையார் என்னும் பெயருடைய மற்றுமொரு சிவன் கோயில் அமைப்பதற்கு இடமும், அக்கோயிலைச் சார்ந்து மண்டபம், திருச்சுற்று, நந்தவனம் ஆகியவை அமைப்பதற்கு நிலமும் கொடுக்கப்பட்டதாகச் சாசனம் ஒன்று புலப்படுத்துகிறது.[8] திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து மகா

6. A. R. E. 1917, No. 366
7. A. R. E. 1919, No. 197
8. A. R. E. 1919, No. 175

சபையினரின் வேண்டுகோளுக்கு இணங்க, மேற்கூறிய கொடைகள் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. ஏற்கனவே இருந்த பழமையான இச்சிவன்கோயில், அருளாகரன் என்பவன், கற்றளியாக எடுப்பித்தமையால், அது அவனுடைய பெயரால் அருளாகர ஈஸ்வரம் என்று அழைக்கப்பட்டது.

அருளாகரன் இக்கோயிலை எடுப்பிப்பதற்கு முன்பாகவே, பராந்தகச் சோழனின் பெயரால் இத்தேவருக்கு நந்தவனம் இருந்தமையால், இவன் இக்கோயிலைப் புதிதாகத் தோற்றுவித்தான் என்று கொள்ளுதற்கு இடமில்லை. ஆதலின், ஏற்கனவே இருந்த கோயிலை, இவன் கற்றளியாக மாற்றினுன் என்பது தெளிவாகிறது.

மேற்கூறிய பழமையான மூன்று சிவன் கோயில்களில் இப்போது எஞ்சியுள்ளது, திருவாண்டார்க்கோயிலில் உள்ள திருவறை நக்கன் சிவன் கோயிலே ஆகும். ஏனைய இரண்டும் இருந்த இடம் தெரியாமல் சுவடற்றுப் போயின. இவற்றுள் ஒன்று மதகடிப்பட்டுக் கல்வெட்டு குறிப்பிடும் திருவடுகூரில் இருந்திருக்கலாம். அவ்வடுகூர், இன்றைய திருபுவனைக்கு அண்மையில் உள்ள இலிங்கத்து மேடாக இருத்தல் கூடும். இவை எல்லாம் காலப் போக்கில் வெளிப்பட வேண்டிய செய்திகளாகும்.

ஆகவே, திருவறைநக்கன், திருநாகேசுவரர், அருளாகர ஈசுவரர் ஆகிய மூவருள், ஞானசம்பந்தர் குறிப்பிடும் 'வடுகூர் அடிகள்' யாரென்று உறுதியாக அறிந்துகொள்ள இயலவில்லை. அறிஞர்கள் இதுபற்றி மேலும் ஆராய்ந்து முடிபு காண்பார்களாக.

## ஊர்ப் பெயர்

கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் வரையப்பட்டுள்ள சாளுவ நரசிங்க மகாராசனின் தெலுங்குக் கல்வெட்டு ஒன்றில் சிவபெருமான், 'திருவாண்டார்' என்று குறிக்கப்பெறுகிறுர்.[9] இவ்வரசன் காலத்துக்கு முற்பட்ட கல்வெட்டு எதுவும் இப்பெயரைக் குறிப்பிடவில்லை. இங்குள்ள பழமையான சோழர் காலத்துச் சாசனங்களைத் துணையாகக் கொண்டு ஆராயின், 'திருவறைஆண்டார்' என்ற பெயரே, சாளுவ மன்னன் காலத்தில், திருவாண்டார் என்று மருவி வழங்கியதாகக் கொள்ள வேண்டும்.

---

9. A. R. E. 1917, No. 374

16-ஆம் நூற்றாண்டில் இறைவனுக்குப் பெயராக வழங்கிவந்த 'திருவாண்டார்' என்னும் பெயர், பின்னர் திருவாண்டார்க் கோயில் என்று ஊருக்கும் போயிற்று. பழைய திருபுவனி இந்நூற்றாண்டில் திருபுவனமாதேவிப்பற்று, நடுவுகரைப்பற்று, தென்மலிப்பற்று என முப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்துவிட்டது. இதனை சகம் 1425-ஆம் ஆண்டில் (கி. பி. 1503) வரையப்பட்ட நரசிங்கதேவ மகாராசரின் சாசனம் தெளிவாக்குகிறது. [10]

## இறைவனின் பெயர்கள்

பஞ்சநதீசுவரர் அல்லது சந்திரமௌலீசுவரர் என்று அழைக்கப்பெறும் திருவண்டார்க்கோயில் சிவபெருமானுக்கு, 'வடுகநாதர்' என்றொரு பெயர் இருப்பதாகவும் கூறுவர். வடுகனாகிய வைரவர் இத்தலத்தில் வழிபாடு நிகழ்த்திப் பேறு பெற்ற காரணம்பற்றி, இப்பெயர் வந்ததாக மரபுவழிச் செய்தி ஒன்றால் அறிகிறோம். சாசனவழிப் பெயர்களுக்கும் இன்றுள்ள பெயர்களுக்கும் தொடர்பு ஏதும் இல்லை. கல்லெழுத்துகளில் ஒரு பொருளுடைய பல்வேறு பெயர்களால், இப்பெருமான் குறிக்கப்பெறுகிறார்.

திருவறைநக்கன் கோயில் பரமஸ்வாமி
திருவறையாளும் பரமஸ்வாமி
திருவறையுடைய பரமஸ்வாமி
திருவறையுடைய மகாதேவர்

எனச் சோழர் காலத்துச் சாசனங்கள் குறிக்கின்றன. [11] சாளுவ நரசிங்க மகாராயர் காலத்துக் கல்வெட்டு ஒன்றில், திருவாண்டார் என்றும், மற்றொன்றில் திருவையாறுடைய நாயனார் என்றும் இவ்விறைவன் குறிக்கப்பெறுகிறார். [12]

வடுவகிர்க்கண்ணி அம்மையான இறைவியின் திருக்கோயில், கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர், சிவன் கோயிலின் திருச்சுற்றுக்கு வெளியே, தெற்கு நோக்கியவாறு அமைக்கப்பட்டிருந்தது. இன்று அக்கற்றளியின் சுவடுகளை மட்டுமே காண்கிறோம். அம்மனைப் பற்றிய குறிப்பு எதுவும் கல்வெட்டுகளில் காணப்பெறவில்லை. பரிவார ஆலயங்களில் ஒன்றான குமார சுவாமியின் கோயில், அப்பண்ண பிள்ளை மகனான பிழை பொறுத்த பிள்ளை என்பவரால் கட்டப்பட்டது. [13]

---

10. A. R. E. 1917, No. 368
11. A. R. E. 1917, Nos. 359, 361, 362, 364, 365, 366 & Part. II. Para. 24
12. A. R. E. 1917, Nos. 374 & 372
13. A. R. E. 1917, No. 360

# கட்டடக் கலை



*ரிஷபாந்திக மூர்த்தி — திருவாண்டார்கோயில்*
*[சோழர் காலம்]*
*நன்றி :* **French Institute of Indology – Pondicherry**



துர்க்கை – திருவாண்டார்க்கோயில்

[சோழர் காலம்]

நன்றி : French Institute of Indology – Pondicherry

கிழக்கு நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ள சிவன் கோயில், சதுரவடிவான கருவறையைக் கொண்டுள்ளது. இதன் பக்க அளவு 19½ அடி. இக்கருவறை 5 அடி உயரமுள்ள பீடத்தின்மீது அமைந்துள்ளது. மூலவராகப் பிரதிட்டை செய்யப்பட்டுள்ள இலிங்கத்தின் மேற்பகுதி மகேசுவர பாகம் எனப்படும். பிரம்ம பாகமும், விஷ்ணு பாகமும் அதன் பீடமாக அமையும்.

மகேசுவர பாகத்தின் சுற்றளவைப்போல மூன்று பங்கு அளவில் பீடமும், பீடத்தின் சுற்றளவைப் போல மூன்று பங்கு அளவில் கருவறையின் ஒருபக்க நீளமும் அமைந்திருத்தல் வேண்டும். கருவறையின் பக்க அளவில், மூன்றில் ஒரு பங்கு நீளம், சுவர்களாக அமைக்கப்பெறும். எஞ்சியுள்ள இரண்டு பங்கு நீளம், கருவறையின் உள்பக்க அளவாக நிற்கும். 14

திருவாண்டார்க்கோயில் இலிங்கத்தின் மகேசுவரபாகம், மேற்கூறப்பட்ட கணக்கின்படியும், 19½ அடி பக்க அள்வுக்கு ஏற்பவும் 3¼ அடி சுற்றளவாக அமைந்துள்ளது. எனவே, இது மிகச் சரியாக அமைக்கப்பட்ட பழைய கோயிலைச் சார்ந்த மூலவர் என்பதில் ஐயமில்லை. இவ்வாறு ஆகமவிதியில் சிறிதளவும் வழுவாமல் இலிங்கத்தின் அளவும், கருவறையின் அளவும் அமைந்திருந்த காரணத்தால், கருவறை என்பது கல்வெட்டுகளில் 'திருவறை' என்றும், அதனை ஆளும் பெருமான் 'திருவறை ஆளும் பரமஸ்வாமி' என்றும் குறிக்கப்பட்டது போலும்.

## தேவகோட்டம்

கருவறை தேவகோட்டங்களில் தெற்கே தட்சணாமூர்த்தி தேவர், மேற்கே இலிங்கோத்பவர், வடக்கே பிரம்ம தேவர் ஆகியோரின் சிலைகள் இடம்பெற்றுள்ளன. அர்த்த மண்டபத்துக் கோட்டங்களில் தெற்கே பிட்சாடனரும், வடக்கே துர்க்கையும் காணப்படுகின்றனர். வேறு சில கோட்டங்களில் கணேசர், அர்த்த நாரி, இடபாரூடர் முதலானோரின் சிலைகள் நிறுவப்பட்டுள்ளன.

அர்த்த மண்டபத்து வாயிலில் இரண்டு துவார பாலகர்களின் சிலைகள் உள்ளன. இவை இரண்டும் ஒரே உயரம் உடையன. ஆயினும், வெவ்வேறான அமைப்பும் வேலைப்பாடும் கொண்டவை. கணேசர், அர்த்தநாரி, இடபாரூடர் ஆகிய சிலைகள் அமைந்த தேவகோட்டங்கள் உத்தம சோழன் (கி. பி. 970–985) காலத்தன.

---

14. புள்ளிருக்கு வேளூர் ஸ்ரீவைத்தியநாத சுவாமி திருக்கோயில் கும்பாபிஷேக மலர், பக்கம். 31

முழுத் தூண்களும் அரைத் தூண்களும் கும்பம், பலகை, போதிகை முதலான உறுப்புகளைப் பெற்று, சோழர் காலக் கட்டடக் கலையின் வளர்ச்சியைக் காட்டுகின்றன.

கொடுங்கையின்கீழ்ப் பூதகண வரிசையையும், மேலே யாளி வரிமானத்தையும் காண்கிறோம். இக்கோயிலின் கட்டட அமைப் பையும் சிற்ப அமைவையும் கண்ணுற்ற அறிஞர்கள், இதனை முதலாம் பராந்தகச் சோழன் காலத்துக் கற்றளி என்று முடிபு கண்டுள்ளனர்.[15] கருவறை அர்த்தமண்டபம் ஆகிய இரண்டு பகுதிகளும் இணைந்து, மூலக் கோயிலாக விளங்கின. இப்போதுள்ள வெளி மண்டபம் பிற்காலத்தது.

## அறச்செயல்கள்

திருவாண்டார்க்கோயில் இறைவனுக்கு அரசு அதிகாரிகளும், திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையினரும், தனிப் பட்டோரும் பல்வேறு வகையான அறக்கட்டளைகளை நிறுவி யுள்ளனர். 'மதுரைகொண்ட கோப்பரகேசரி' எனப்படும் முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில், இக்கோயிலுக்கு மனைக்கட்டு களும், விளக்குத் தானமாக ஆடுகளும் கொடுக்கப்பட்டன.[16] கி. பி. 921-ஆம் ஆண்டில் இறையிலியாக நிலக்கொடை அளிக்கப் பட்டது.

இக்கோயிலுக்குச் சொந்தமான வெள்ளிப் பாத்திரங்கள் சில வற்றையும், பொன்னையும் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங் கலத்துச் சபையினர், தங்கள் (பொது) செலவுக்கு என்று எடுத் துக் கொண்டனர். அவற்றின் மதிப்புக்கு ஈடாக இரட்ட மன்னனை மூன்றும் கிருட்டினனின் (கன்னர தேவன்) 28-ஆவது ஆண்டில் (கி. பி. 967) அச்சபையினர் சில நிலங்களை விற்றுக் கொடுத்தனர்.

விளக்குத் தானமாக ஆடுகள் கொடுக்கப்பட்டதும், பின்னர் நிலம் விற்றுக் கொடுத்ததும் ஆகிய இரண்டு செயல்களும், முதலாம் இராசராச சோழனின் 5-ஆவது ஆட்சி ஆண்டில் (கி. பி. 990) மீளவும் உறுதி செய்யப்பட்டன.[17] சபையினர் எடுத்துக்

---

15. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், பக்கம். 294
16. A. R. E. 1917, Nos. 366 & 376
17. (i) A. R. E. 1917, No. 259 & Part. II, Para. 23
(ii) Les Epigraphes Sanscrites et Tamoules de l'Inde Française, No. 359 (Page. 15)

கொண்ட பாத்திரங்களும் பொன்னும் இவ்வளவென்று கீழ்வரும் சாசனப் பகுதியால் அறியலாம்.

"ஸ்வஸ்திஸ்ரீ கோராஜகேஸரி பன்மற்கு யாண்டு ரு(5)அவது வடகரை பிரம்மதேயம் ஸ்ரீதிரிபுவனமஹாதேவிச் சதுப்பெதி மங்கலத்து பெருங்குறி பெருமக்களோம் இத்தேவர் திருவறை நக்கன் கோயில் பரமஸ்வாமிகள் இத்தேவர் உடைய வெள்ளித் தளிகையும் வெள்ளி முண்டமும் (?) பொல(ம்)பூக்களும் பட்ட வகுளம்.... கண்டநாலும் பண்டாரத்து ருக (51) நக்கன்.... பொன்னும்"

முதலாம் இராசராச சோழனின் அரசியல் அதிகாரிகளில் ஒருவனும், சிக்கல் என்னும் ஊரினனும் ஆகிய 'பெருஞ்சமன் நக்கன் கணிச்சனை இருமடி சோழ மூவேந்த வேளான்' என்பவன், கி. பி. 997-ஆம் ஆண்டில் விளக்குத் தானமாக சில நிலங்களை விலைக்குப் பெற்று வழங்கியுள்ளான்.[18]

## முண்டியன் வள்ளைப் பாக்கம்

'இருமடி சோழ மூவேந்த வேளான்' என்ற அவ்வதிகாரி முண்டியன் வள்ளைப் பாக்கம் என்னும் சிற்றூரை, இவ்விறைவனுக்குத் தேவதானமாக வழங்கினான். அக்கொடையைத் தமது பொறுப்பில் ஏற்றுக் கொண்ட திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையினர், அவ்வூருக்காகக் கட்ட வேண்டிய சிற்றாயம், பஞ்சவாரம் முதலான வரிகளைக் கட்டினர்.[19] முன்னதாக அவ்வரிகளைக் கட்டுவதென்று கூட்டம் கூடி முடிவெடுத்தனர். அக்கூட்டம் கூடிய இடம், மும்முடிச் சோழ உம்பல நாட்டு மூவேந்த வேளாரின் திரு மண்டபம் ஆகும். இவ்வேளார், முதலாம் இராசேந்திர சோழனின் பெருந்தரத்து அதிகாரிகளுள் ஒருவர். அழிந்துபோன மண்டபங்களுள் இதுவும் ஒன்று.

இங்குக் குறிக்கப் பெற்ற முண்டியன் வள்ளைப்பாக்கம் என்னும் சிற்றூர், விழுப்புரத்துக்கு வடக்கே 5 கி. மீ. தொலைவில் 'முண்டியம் பாக்கம்' என்னும் பெயரில் உள்ளது.

## விளக்குத் தானங்கள்

முதலாம் இராசேந்திர சோழனின் 27-ஆவது ஆண்டில் (கி. பி. 1039) இரண்டு நுந்தா விளக்குகள் எரிப்பதற்கென்று

---

18. A. R. E. 1917, No. 364
19. A. R. E. 1917, No. 362 & Part. II, Para. 24

ஆடுகள் அறக்கொடையாக வழங்கப்பட்டன.[20] விளக்குத் தான மாக 96 ஆடுகள் கொடுக்கப்பட்ட மற்ருெரு அறச் செயலே, முதலாம் குலோத்துங்கனின் சாசனத்தால் அறிகிருேம்.[21]

## தேவரடியார்

நேரியநல்லூரில் (பள்ளிநேலியனூர்) இக்கோயிலுக்குச் சொந்த மாக இருந்த தேவதான நிலம், 'சாளுவதிம்மாராய மாணிக்கம்' என்னும் பெயருடைய தேவாடியாள் ஒருத்திக்கு மானியமாகக் கொடுக்கப்பட்டது.[22] இவள் இக்கோயிலில் பணியாற்றிய தேவ ரடியாளாக இருத்தல் வேண்டும்.

## அதிகாரிகள்

| | |
|---|---|
| மும்முடிச்சோழ உம்பல நாட்டு வேளார் | (கி.பி. 996) |
| இருமடிச்சோழ மூவேந்த வேளார் | (கி.பி. 997) |
| பெரும்புலியூர் ஆளவந்தான் பட்டன் | (கி.பி. 1402) |
| அம்பிகாமக்கிழவன் அறம்வளர்த்த நாயனுர் | (கி.பி. 1503) |
| திம்மநாயக்கன் | (கி.பி. 16-ஆம் நூ.) |
| நையான்கார அப்பன் | (?) |
| மண்டபத்தார் பிள்ளை | (?) |

ஆகிய அரசியல் அதிகாரிகளின் பெயர்களை இங்குள்ள சாசனங் கள் குறிப்பிடுகின்றன. இவர்கள் எல்லாரும் இப்பகுதியில் இருந்த அரசு அதிகாரிகள்.

## பிறசெய்திகள்

முதலாம் இராசேந்திர சோழன் மதுரைமா நகரில் ஒரு அரண்மனை கட்டி, அதற்குத் தன் மகனை சோழபாண்டியனின் பெயரை இட்டு வழங்கினுன் என்று, இங்குள்ள சாசனம் ஒன்று கூறுகிறது.[23] இராசேந்திர சோழனுக்கு மக்கள் பலர் இருந்தனர். அவர்களுள் சோழபாண்டியன் என்பவனும் ஒருவன்.[24] இவன்

---

20. A. R. E. 1917, No. 361
21. A. R. E. 1917, No. 365
22. A. R. E. 1917, No. 372
23. A. R. E. 1917, No. 363
24. A. R. E. 1905, Part. II, Para. 25

பாண்டிய நாட்டில் சோழப் பேரரசின் பிரதிநிதியாய் இருந்து அப்பகுதியை ஆண்டு வந்தவனாய் இருத்தல் வேண்டுமென்று அறிஞர் கருதுவர்.[25] சோழ பாண்டியனின் பெயரால், அவன் தந்தை இராசேந்திரன் கட்டிய அவ்வரண்மனையை, இராசராச சோழன் கட்டினான் எனல் பொருத்தமாகத் தோன்றவில்லை,[26]

சூல்வரி, மகமை, காணிக்கை, காட்டிகை, பேர்வை, கோட்டைக் காணிக்கை, தலையாரிக்கை, நாட்டு விநியோகம், பாழ்வரி, புதுவரி, சில்லிறை, பஞ்சவாரம், சிற்றாயம் என அக்காலத்தில் விதிக்கப்பட்ட வரிகளின் பெயர்களைச் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. தேவதான நிலங்கள் சிலவற்றுக்கு இவ்வரிகளினின்றும் விலக்களிக்கப்பட்டன.[27]

இன்று சிற்றூராக உள்ள திருவாண்டார்க்கோயில், சோழர் காலத்தில் திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்தின் ஒரு பகுதியாக இருந்ததென்பதையும், அது தனக்கெனத் தனிப்பெயர் ஏதும் கொண்டிருக்கவில்லை என்பதையும் இங்குத் தெளிவாகக் கூறினோம். சிவன் கோயில் முதலாம் பராந்தகச் சோழன் காலத்தது என்பதும், ஞானசம்பந்தரின் பாடல் பெற்ற தலம் இதுவே என உறுதியாகக் கூற இயலாது என்பதும் இங்குக் கூறப்பட்ட முக்கிய செய்திகளாகும். இவ்விறைவனின் பழமையான பெயர்களும், அறச் செயல்களும், வரிவகைகளும் இதன்கண் குறிக்கப்பட்டுள்ளன.



25. பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம். I, பக்கம். 164
26. புதுவைச் செய்திகள், செப்டம்பர். 1970, பக்கம். 18
27. A. R. E. 1917, Nos. 362 & 375, Part. II, Para. 24 & 67

# மதகடிப்பட்டு

புதுவையிலிருந்து மேற்கே 24 கி. மீ. தொலைவில், விழுப்புரம் செல்லும் பெருவழியில், மதகடிப்பட்டு என்னும் சிற்றூர் அமைந்துள்ளது. இங்குள்ள பழமையான சிவன் கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள், இப்பகுதியின் வரலாற்றுக்குப் பெருமளவில் துணை செய்கின்றன. குறிப்பாகத் திருபுவனையின் முற்பட்ட வரலாற்றுக்கு அவை பெரும் பயன் விளைத்தன.

## சிதைந்த கோயில்

சிவன் கோயிற் கல்வெட்டுகள் சிதைவின்றித் தொடர்ச்சியாகக் கிடைக்காதது உள்ளபடியே பேரிழப்பாகும். முற்றிலுமாகச் சிதைந்து போன சிவன் கோயில், திரு. பா. ஜெ. பட்டாபிராமன் அவர்களின் பெருமுயற்சியினாலும், திருமுடி திரு. ந. சேதுராமன் அவர்களின் உறுதுணையினாலும் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது.

அங்குப் படி எடுக்கப்பெற்ற சாசனப் பகுதிகள் பேராசிரியர் திரு. K. A. நீலகண்ட சாஸ்திரி அவர்களாலும், திரு. T. N. சுப்பிரமணியம் அவர்களாலும் படித்தறியப்பட்டன. மேற்கண்ட அனைவர்க்கும் வரலாற்றுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

மூலக்கோயிலின் பழமையான அமைப்பை இப்போதும் காண்கிறோம். ஆயினும், சாசனங்களின் தொடர்ச்சியான அமைப்புகள் மாறிவிட்டன. எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகைகள் பல, அவ்வூரின் தனியார் தோட்டங்களில் காணப்படுகின்றன. வேறு சில கேணிகளில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன. இத்தகைய செயல்களால் பெருமதிப்புடைய சாசனங்கள் பலவற்றை இழந்துவிட்டோம். ஆதலின், செய்திகளை உள்ளவாறு அறிந்து கொள்ள இயலவில்லை. எனினும், சோழ மன்னர்தம் மெய்க்கீர்த்திப் பகுதிகள் கிடைத்திருப்பதைக் கொண்டு, அன்னோர் காலத்து அரசியல் வரலாறுகளை அறிகிறோம்.

முதலாம் இராசராச சோழன் காலத்தவை ஆறு, முதலாம் இராசேந்திர சோழன் காலத்தவை ஒன்பது, முதலாம் இராசாதிராச சோழன் காலத்தவை இரண்டு, வீரராசேந்திர சோழன் காலத்தது ஒன்று, முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தவை ஏழு, விக்கிரம சோழன் காலத்தவை இரண்டு ஆக இருபத்தேழு சாசனங்கள் இங்குப் படி எடுக்கப்பட்டனவாகத் தெரிகிறது.

இச்சாசனங்களில் கிழக்குச் சுவரில் வரையப்பட்ட முதலாம் இராசராச சோழனின் 8-ஆவது ஆண்டுக் (கி. பி. 993) கல்வெட்டே மிகப்பழமையானது. [1]

## ஊரும் பேரும்

இன்றுள்ள மதகடிப்பட்டின் பழமையான பெயர் 'குண்டாங்குழி' என்று, கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. குண்டாங்குழி என்பது 'ஆழமான அழகிய நீர் நிலை' என்று பொருள்படும். ஆழமான அகழியைக் 'குண்டகழி' என்று குறிப்பிடுவர் புறப்பொருள் வெண்பாமாலையார். [2] எனவே, குண்டாங்குழி என்பது நீர்வளத்தை அடிப்படையாகக் கொண்ட பெயராகும். இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் 'திருக்குண்டாங்குழி மகாதேவர்' எனப்பட்டார்.

இனி, மதகடிப்பட்டு என்பது மதகடிப்பற்று என்பதன் மருவிய பெயராகும். பற்று என்பது நிலத்தைக் குறிக்கும் சொல்லாக வழங்கி வந்ததைக் கல்வெட்டுகளால் அறியலாம். [3] மதகடிப்பற்று என்பதற்கு, 'மதகுக்கு அண்மையில் அமைந்த நிலம்' என்பது பொருளாகும். ஆதலின், அந்நிலத்தில் உருவாகிய ஊர், அந்நிலத்தின் பெயராலேயே, மதகடிப்பற்று என்று அழைக்கப் பட்டது. அப்பெயர் மருவி மதகடிப்பட்டு ஆயிற்று.

### குண்டாங்குழி

மதகடிப்பட்டுச் சிவன் கோயில் முதலாம் இராசராச சோழனால் எடுப்பிக்கப்பட்டது. அம்மன்னன் காலத்தில் அக்கோயிலில் பணியாற்றினோரும், பட்டர்களும், அவர்களைச் சார்ந்தோரும் அப்பகுதி

---

1. இக்கல்வெட்டின் மெய்க்கீர்த்திப் பகுதியில் வரும் 'தேசுகொள்' என்ற தொடரைக்கொண்டு, இது முதலாம் இராசராச சோழனின் சாசனம் என்று முடிவு செய்தேன். ஏனெனில், இத்தொடர் வேறு சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திப் பகுதிகளில் காணப்படுவதில்லை. See also 'Temple de Madagadipattou', Page. 85 (Pierre isolée à l'est du temple E. 7)
2. புறப்பொருள் வெண்பாமாலை, செய். 99.
3. ( i ) Pudukottai State Inscriptions, No. 260
   ( ii) S. I. I., Vol. VII, No. 760

யிலேயே இருக்க வேண்டிய இன்றியமையாமை உண்டாயிற்று. இத்தேவையால், கோயிலுக்கு மேற்கே சிறிதளவு மேடாக இருந்த நிலப்பகுதியில், புதிய ஊர் ஒன்று உருவாகத் தொடங்கியது.

தொடக்க காலத்தில் குண்டாங்குழி என்னும் கோயிற் பெயரே, இப்புதிய ஊருக்கும் பெயராக இருந்தது. அப்பெயர் விக்கிரம சோழன் காலம் வரை வழக்கில் இருந்ததைக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. இன்று வழங்கும் மதகடிப்பட்டு என்னும் புதிய பெயர், விக்கிரம சோழன் காலத்துக்குப் பிறகே வழக்கில் வந்திருக்க வேண்டும். ஏனெனில், சாசனங்களில் மதகடிப்பட்டு என்னும் பெயர் காணப்பெறவில்லை.

எனவே, பிற்காலத்தில் குண்டாங்குழி என்னும் பழைய பெயர் வழக்கொழிந்து, மதகடிப்பற்று என்னும் நிலத்தின் பெயரே ஊருக்குப் பெயராக வழங்கத் தொடங்கியதாகக் கொள்ள வேண்டும். பற்று என்னும் சொல் பட்டு அல்லது பத்து என்று மருவிவிடுவது இயல்பாகும். ஆதலின், மதகடிப்பற்று என்னும் பெயர், இக்காலத்தில் மதகடிப்பட்டு என்று வழங்குகிறது.

இப்போதுள்ள ஊர்ப் பகுதியைக் காட்டிலும், கோயில் அமைந்துள்ள கிழக்குப் பகுதி, குண்டாங்குழி என்பதற்கு ஏற்ப, சரிந்து பள்ளமாக இருப்பதையும், கோயிலுக்குக் கிழக்குப் பக்கத்தில் ஆழ்ந்தகன்ற குளம் ஒன்று இருப்பதையும் காண்கிறோம். ஊருக்குச் சற்று மேடான பகுதியில் ஏரி அமைந்திருப்பது குறித்துணரத்தக்கது.

## புதிய குடியிருப்பு

சோழர் காலத்தில் புதியதொரு குடியிருப்பு ஒன்று இப் பகுதியில் உருவாக்கப்பட்டதை,

"இக்கரெயிலே வானவன்மாதெவி நல்லூரென்று குடி எற்றுவிக்கப்பட்டு.. மிவ்வூர் குடியிருந்தாரையும்"

என்னும் சாசனப் பகுதியால் உணர்கிறோம்.[4] வானவன்மா தேவிநல்லூர் என்னும் இப்புதிய ஊர் உருவாக்கப்பட்டதைப்போல,

---

4. இச்சாசனம் சிவன் கோயிலின் வடக்குச் சுவரில் உள்ளது. வானவன்மாதேவி என்பாள், முதலாம் இராசராச சோழனின் மனைவியும், முதலாம் இராசேந்திரனின் தாயுமாவாள்,
(S. I. I., Vol. V, No. 982 & A. R. E. 1908, No. 460)

குண்டாங்குழி என்னும் புதிய ஊரும், மதகடிப்பற்று என்னும் நிலப்பகுதியில் உருவாக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

## சதுர்வேதமங்கலத்துச் சிற்றூர்

"ஸ்ரீகொவிராஜராஜகெஸரிபந்மரான ஸ்ரீராஜராஜ தெவர்க்கு யாண்டு 27-ஆவது வடகரை ஜயங்கொண்ட சொழ மண்டலத்துத் தநியூர் ஸ்ரீதிரிபுவநமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீகு(ண்டாங்குழி)"

என்னும் முதலாம் இராசராச சோழனின் சாசனத்தாலும்,

"ஸ்வஸ்திஸ்ரீ ராஜெந்திர சொழ தெவற்கு யாண்டு 4-வது ஜயங்கொண்ட சொழ மண்டலத்து ப்ரஹ்மதெயம் ஸ்ரீதிரிபுவந மஹாதெவி சது(ர்)வ்வெதி மங்கலத்து திருக்குண்டாங்குழி"

என்னும் முதலாம் இராசேந்திர சோழனின் சாசனத்தாலும்,

"ஸ்ரீராஜாதிராஜ தெவர்க்கு யாண்டு 28 ட்டாவது . . நாட்டுப்ரமதெயம் ஸ்ரீ த்ரிபுவநமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து ஸ்ரீ குண்டாங்குழி"

என்னும் முதலாம் இராசாதிராச சோழன் சாசனத்தாலும்,

"ஸ்வஸ்திஸ்ரீ குலொத்துங்க சோழ தெவர்க்கு யாண்டு 4-ஆவது ராஜராஜ வளநாட்டு விராவதார வளநாட்டு பிரஹ்மதெயம் ஸ்ரீதிரிபுவந மஹாதெவி சதுவெதி மங்கலத்து திருக்குண்டாங்குழி"

என்னும் முதலாம் குலோத்துங்க சோழன் சாசனத்தாலும்,

"சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சொழ தெவற்கு யாண்டு 5-ஆவது கங்கை கொண்ட சொழ வளநாட்டு விராவதார வளநாட்டு ப்ரஹ்மதெயம் ஸ்ரீ திரிபுவனமாதெவிச் சதுப்பெதி மங்கலத்து திருக்குண்டாங்குழி"

என்னும் விக்கிரம சோழனின் சாசனத்தாலும், இவ்வூர் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து எல்லைக்குள் இருந்த சிற்றூர் என்பதைத் தெள்ளிதின் உணரலாம். ஊரும் கோயிலும் இச்சதுர்வேதி மங்கலத்துச் சபையினராலேயே நிர்வாகம் செய்யப் பட்டன. இதனை,

"இப்பரிசு இந்த ஸ்ரீகுண்டாங்குழியுடைய மஹாதெவற்குக் குடுத்தோம் ஸ்ரீத்ரிபுவனமஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து மஹா ஸபையோம்"

"இப்பரிசு சிலாலேகை செய்வித்துக் குடுத்தோம் ஸ்ரீதிரிபுவன மஹாதேவி சதுர்வெதி மங்கலத்து மஹா ஸபையோம். இது பந்மாஹெஸ்வர ரக்ஷை"

என்னும் கல்லெழுத்துப் பகுதிகளால் அறிகிறோம். இச் சதுர்வேதி மங்கலத்து எல்லைக்குள் இருந்த சேரிகள் பலவும் தமக்கென்று ஊர்ச்சபைகளைப் பெற்றிருந்தன என்று முன்னர்க் கூறினோம். அச்சேரிகளுள் ஸ்ரீதாச் சேரியும், மதுசூதனச் சேரியும் ஊர்ச்சபைகளைப் பெற்றிருந்தன. இங்குள்ள சாசனப் பகுதி களால் அதனை அறியலாம்.

"விற்று விலையாவணம் செய்துகொடுத்தோம் ஸ்ரீதாச் செரி சபையோம்"

"ஸ்ரீதாச்செரி சபையோம் விற்றுக் கொடுத்த நிலம் மெர்ப்படி அஷ்டகத்துக்குட்பட்ட"

"ஸ்ரீமதுஸூதனச்செரி மாஸபையில் திருவெங்கடக்க்ரம வித்தனும் இவன் றம்பி விஷ்ணுக்கிரமவித்தனும் இவன் றம்பி தாமோதாக்ரமவித்தனும்"

இவை மேற்கூறிய சேரிச் சபைகளை உணர்த்தவல்ல கல் வெட்டுப் பகுதிகளாகும். இவ்வூரில் இருந்த வழிகளும் வாய்க் கால்களும், அக்காலத்தில் சோழ மன்னர்களின் பெயர்களைப் பெற் றிருந்தன.

## ஊர்க்கரணத்தார்

சிவதேவனான ஏழாயிரத்து அறுநாற்றுவன்,
கணவதி மாதேவடியாளான நாலாயிரவன்,
கேசவ மல்லனான திருவள்ளறை மங்கலேரித்தமன்

என்னும் பெயருடைய மூன்று ஊர்க்கரணத்தினரின் பெயர்களை இங்குள்ள கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

"இவ்வூரிவ்வாண்டு ஊர்க்கண(க்)கெழுதுகின்ற ஸ்ரீகோவிந்தச் செரி மத்யஸ்தன் பொதுவன் சிவதெவனான எழாயிரத்தரு நூற் றுவனெனிவையென் னெழுத்து"

என்ற சாசனப் பகுதியால் ஊர்க்கணக்கு எழுதுகின்றவர்கள், ஆண்டுதோறும் மாற்றப்பட்டு வந்தனரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

## தரமும் ஆயமும்

விளைநிலங்கள் அனைத்தும், தரம் பிரிக்கப்பட்டு, தரத்துக்கு ஏற்ப வரி விதிக்கப்பட்டது. 12 தரமுடைய நிலங்கள் இப் பகுதியில் இருந்தனவாகக் கல்வெட்டுகள் குறிப்பால் உணர்த்து கின்றன. ஏரி ஆயமாக நெல் வசூலிக்கப்பட்டது. இவ்வழக்கம் பல்லவர் காலந்தொட்டு வழக்கில் இருந்துள்ளது.

ஏரி ஆயத்தால் வரும் வருவாயைக் கொண்டு ஏரி, மதகு முதலானவை அவ்வப்பொழுது பழுது பார்த்துச் செப்பனிடப் பட்டன. ஏரி வாரியங்கள் உள்ளிட்ட வாரியங்கள் பலவும் இங்கு இருந்துள்ளன. "இவ்வேரி கீழுள்ள ஏரி ஆயத்தால் வந்த நெல்லும்" என்று வரும் கல்வெட்டுத் தொடர், இங்கே குறிப்பிடத் தக்கது.

## கிரமவித்தர்

சம்ஹிதா, பதம், கிரமம், கனம், ஜடா என வேதங்களை ஓதுகின்ற முறைமை ஐந்து வகைப்படும். இவ்வைந்தனுள், கிரமம் என்ற முறைப்படி வேதங்களை ஓதியவர்கள், கிரமவித்தர் என்று அழைக்கப்பட்டனர். திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத் திலும், அதனைச் சார்ந்த பகுதிகளிலும் எண்ணற்ற கிரமவித்தர்கள் சோழர் காலத்தில் இருந்தனர். அவர்களில்,

மிழலைநம்பி கிரமவித்தன், திருப்பூஞ்சி அடிகள் கிரமவித்தன், திருவேங்கடக் கிரமவித்தன், விஷ்ணுக் கிரமவித்தன், தாமோதரக் கிரமவித்தன், மாதவக் கிரமவித்தன், பாகனூர்த் தன்மயக் கிரம வித்தன், நாராயணக் கிரமவித்தன், வாமணக் கிரமவித்தன், இருங்கண்டித்தேவ கிரமவித்தன், திருவையாற்றுதேவ கிரம வித்தன், மகேஸ்வரக் கிரமவித்தன், சூர்யவிஷ்ணுக் கிரமவித்தன், சூடாமணிக் கிரமவித்தன் முதலானோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

## பட்டர்கள்

கோயிற் காரியங்களை மேற்பார்வை செய்தலும், அறச்செயல் கள் வழுவாது நடைபெறும் வண்ணம் கண்காணித்தலும் ஆகிய பொறுப்பில் பட்டர்கள் பலர் பணியாற்றி வந்தனர். அவர்களில்,

வாசுதேவபட்ட சோமயாஜியார், ஸ்ரீதரப்பட்டர், ஆதிராத் ரயாஜியார், மாதவப்பட்டர், திருமால்பட்டர், மகாதேவபட்டர், ஸ்ரீவிகாடபட்டர், திருவடிகள் சிவநம்பிபட்டர் ஆகியோர் குறிப் பிடத் தக்கவர்கள். இவர்களில் சிலர் ஊராளும் கணப்பெரு மக்க ளாகவும் இருந்தனர்.

## குண்டாங்குழி மகாதேவர்

மதகடிப்பட்டுக்குக் கிழக்கே, மேற்கு நோக்கியவாறு அமைக்கப் பட்டுள்ள சிறிய கற்றளிக்குள் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்,

திருக்குண்டாங்குழி மகாதேவர்
திருக்குண்டாங்குழி பரமசுவாமி
திருக்குண்டாங்குழி பரமேசுவரர்
திருக்குண்டாங்குழி உடையார்
திருக்குண்டாங்குழி உடைய பரமசுவாமி
திருக்குண்டாங்குழி ஆளுடையார்

எனப்பலவாறு கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகிறார். அனைத்துப் பெயர்களும் பொருள் இயைபால் ஒன்றேயாகும்.

## அம்மன்கோயில்

அம்மனுக்கு என்று தனிப்பெயர் இருந்ததாகத் தெரியவில்லை. சாசனங்களில் 'ஸ்ரீகோயில்' என்று பொதுவாகவே குறிக்கப் படுகிறது. இதனைக் கீழ்வரும் கல்வெட்டுப் பகுதிகளால் உணரலாம்.

"ஸ்ரீகோயில் முன்றுங் காலப் படைக்கும் பணி செய்யக் குடுத்த பொன் இருபத்தொரு கழஞ்செ காலெ குன்றி"

"(நுந்தாவிளக்கு) எரிக்கக் கடவோம் ஸ்ரீ கொயில் சிவப் பிராமணரோம் இது பந்மாஹெஸ்வர ரக்ஷை"

சிவன் கோயிலுக்கும் அம்மன் கோயிலுக்கும் தனித்தனியே சிவப்பிராமணர்கள் இருந்து பணியாற்றினர். அறவோர்கள் கொடுத்த கொடையை ஏற்றுக் கொண்டு, இவர்களே அவற்றை நிறைவேற்றியும் வந்தனர். அமுது வகைகளுக்கும், விழாவுக்கும், திருப்பள்ளித்தாமத்துக்கும், சிதாரிக்கும், நந்தாவிளக்குக்கும், சந்தி விளக்குக்கும் பல்வேறு காலங்களில் பலராலும் நிவந்தங்கள் அளிக்கப்பட்டன. சிவனுக்கும் அம்மனுக்கும் நாள்தோறும் மூன்று வேளைகளில் பூசைகள் நடைபெற்றன என்று சாசனங்கள் குறிப்பிடுகின்றன.

## பேராடுகள்

முதலாம் இராசேந்திர சோழனின் 3-ஆவது ஆண்டில் (கி. பி. 1015) நுந்தாவிளக்கு ஒன்று எரிப்பதற்கு, திருமிழலைக் கௌதமன் என்பவன், 90 ஆடுகளை நன்கொடையாகக் கொடுத்துள்ளான். இக்

கல்வெட்டு உள்ளிட்ட ஐந்து சாசனங்களில், விளக்குத் தானமாக ஆடுகள் கொடுக்கப்பட்ட செய்திகள் கூறப்படுகின்றன. இவற்றில் 4 கல்வெட்டுகள், விளக்கு ஒன்றுக்கு 90 ஆடுகள் கொடுக்கப்பட்ட தாகக் குறிப்பிடுகின்றன. ஒரு சாசனத்தில் மட்டும்,

"ஆடவல்லான் தில்லையழகன் வைத்த திருநந்தா விளக்கு காலுக்கு வைத்த சாவாமூவாப் பேராடு இருபத்திரண்டரைக்கும் பன்மாஹெஸ்வர ரக்ஷை"

என்று காணப்படுகிறது. இக்குறிப்பு நமக்குப் புதிய செய்தி ஒன்றைத் தெரிவிப்பது குறிப்பிடத் தக்கது. அக்காலத்தில் அல்லும் பகலும் அறுபது நாழிகைகளும் இடைவிடாமல் எரிகின்ற நந்தா விளக்கு ஒன்றனுக்கு, ஆடுகளை மூலதனமாகக் கொடுக்க விரும்பு வோர், 90 ஆடுகள் கொடுக்க வேண்டும் என்ற நியதி பின்பற்றப் பட்டதாகத் தெரிகிறது. எனவேதான், 15 நாழிகை எரிகின்ற கால் விளக்குக்கு 22½ ஆடுகள் (23 என முழு எண்ணாகக் கொள்ள வேண்டும்.) கொடுக்கப்பட்டதாக அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

இனி, ஆடுகளைக் கொடுக்க விரும்பும் அறவோர், தாம் வழங்கும் ஆடுகளில் பொலி ஆடுகளையும் சேர்த்து வழங்குவர். இதன் விளைவால் ஆடுகளின் எண்ணிக்கை பெருகிக் கொண்டிருக்கும். அவ்வாட்டுக் கூட்டத்திற்கு அழிவும் நேராது. இளைய ஆடுகள் பெருகப்பெருக, மூப்புற்ற ஆடுகள், அக்கூட்டத்தினின்றும் களையப்பெறும். கொடை யாளன் தோற்றுவித்த அறச்செயலும் முட்டாமல் தொடரும். எனவேதான், இவ்வாடுகளைச் 'சாவா மூவாப் பேராடு' என்று சாசனங்கள் சுட்டுகின்றன.

## தட்சணாமூர்த்தி தேவர்

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில், சிவன் கோயிலில் இருந்த சட்சணாமூர்த்தி தேவர், சந்தியமுது செய்தருள நிவந்தம் வழங்கப்பட்டுள்ளது. இவர் பரிவார ஆலயத்தைச் சேர்ந்த தேவராக இருக்கலாம். இக்கோயிலில் மூன்று தட்சணாமூர்த்தி தேவரின் சிற்பங்கள் காணக்கிடக்கின்றன. அவற்றுள் இரண்டு சிலைகள் முழுமையான வேலைப்பாடு கொண்டவை அல்ல. எக் காரணம் பற்றியோ அவை முற்றுப் பெறவில்லை. ஆதலின், அவை வழிபாட்டுக்கு உரியனவாக இருந்திருத்தல் இயலாது. உயரிய வேலைப்பாட்டுடன், உடைந்த நிலையில் காணப்படும் மற்றொரு சிலையே, இக்கல்வெட்டுக் குறிப்பிடும் சிலையாதல் வேண்டும்.

## சப்தமாதர்க் கோயில்

"ஸ்ரீ குண்(டாங்குழி பரம சுவா)மிகள் ஸ்ரீ கோயிலில் எழுந்தருளி இருந்த ஸப்தமாதரிகளுக்கு வைத்த காசு 45-ம் இக்காசு நாற்பத்தைஞ்சும் கொண்டு பொலி ஸந்தி ஒன்றினுக்கு அரிசி நாநாழி திருவமுது மா(க)"

இச்சாசனத்தில் சப்தமாதர்க் கோயிலைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அத்துடன் சிவன் கோயிலும், அம்மன் கோயிலும், சப்தமாதர்க் கோயிலும் ஒரே திருச்சுற்றுக்குள் இருந்ததை இக்கல்வெட்டு தெளிவாகக் குறிப்பிடுவதைக் காணலாம்.

45 காசுகளை உடலாக (முதற்பொருளாக) வைத்து, அவற்றால் வருகின்ற பொலிசையைக் (வட்டி) கொண்டு, சந்தி ஒன்றுக்கு நாழி அரிசி விதம் சப்த மாதருக்குத் திருவமுது படையல் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டதை இதனால் அறிகிறோம். இப்போதுள்ள சப்த மாதர்க் கோயிலில் ஒரு சிலையைக் காணவில்லை.

## கோமடம்

ஸ்ரீதரச் சேரியில் கோமடம் என்ற பெயரில், மடம் ஒன்று நிறுவப்பட்டிருந்ததைக் கல்வெட்டால் அறிகிறோம். மறைந்து போன மடங்களில் இதுவும் ஒன்று.

## பண்டாரம் – TREASURY

"இத்தேவர் திருநாமத்தால் தேவர் பண்டாரத்தில் காசு இட்டு தேவர்கன்மிகள் கொண்ட நிலம் திரிபுவனமாதெவி வதிக்கு கிழக்கு விரசொழ வாய்க்காலுக்கு தெற்கு"

என்று வரும் கல்வெட்டுத் தொடர் ஒன்று, மதகடிப்பட்டுச் சிவன் கோயிலில் இருந்த தேவர் பண்டாரத்தைக் குறிப்பிடுகிறது. கோயிலுக்குச் சொந்தமான அணிகலன்கள், பொற்காசுகள், நெல் முதலானவற்றைப் பாதுகாப்பாகச் சேர்த்துவைக்கும் இடம் 'பண்டாரம்' எனப்படும்.

குங்குலியக்கலய நாயனார், தன் மனைவியின் தாலியை விற்று, இறைவனுக்காக வாங்கிய குங்குலியம் தன்னை, தேவர் பண்டாரத்தில் ஒடுக்கி வைத்த செய்தியை, "விடையவர் வீரட்டானம் விரைந்துசென் றெய்தி என்னே, உடையவர் எம்மை யாளும் ஒருவர்தம் பண்டா ரத்தில், அடைவுற ஒடுக்கி"

என்று சேக்கிழார் சுவாமிகள், தமது திருத்தொண்டர் புராணத்தில் கூறுவர்[5] முற்காலத்தில் புகழ் பெற்ற கோயில்கள் பலவற்றிலும் இவ்வாறு பண்டாரங்கள் இருந்ததைக் கல்வெட்டு களாலும் அறியலாம்.[6]

### வீரசோழதேவர்

முதலாம் குலோத்துங்க சோழனின் மகனான விக்கிரம சோழனுக்கு, வீர சோழ தேவர் என்ற வேறு பெயரும் உண்டு.[7] இவர் அரையே முக்காணி அரைக்காணி அளவுள்ள நிலத்தை இறையிலி தேவதானமாக வழங்கியதை,

"இந்நிலம் அரையே முக்காணி அரைக்காணியும் இட்டு தெவர்கள் விநியோக பொத்தகத்தை எறட்டு இறை விழுத்தி குடுக்க வெந்று பிள்ளையார் விரசொழதெவர் திருமுகப்பிரஸாதம் செய்தருளினபடியெ"

என்று வரும் சாசனப்பகுதி உறுதி செய்கிறது. இவ்விறைவனுக்கு அரசர்களே நேரடியாக நிவந்தம் வழங்கியதற்கு இஃதோர் எடுத்துக் காட்டாகும்.

## கற்றளியின் காலம்

மதகடிப்பட்டிலுள்ள திருக்குண்டாங்குழி மகாதேவர் எழுந்தருளி இருக்கும் கோயில், விமானம் உட்பட முழுவதும் கருங்கல்லால் ஆகிய அழகிய கற்றளியாகும்.

"உடையார் ஸ்ரீராஜராஜ தெவர் எடுப்பித்தருளின திருக்கற்றளி திருக்குண்டாங்குழி மஹாதெவர்கு திருவமுதுக்கும் ஸ்ரீபலிக்கும் திருவிழாவுக்கும் மற்றும் வெண்டும் நிபந்தனைகளுக்குமாகக் கொடுத்தோம் இமஹாஸபையோம்"

---

5. திருத்தொண்டர் புராணம், குங்குலியக்கலய நாயனார் செய். 13
6. (i) S. I. I., Vol. II, Part. I, No. 28
   (ii) S. I. I., Vol. II, Part. III, No. 68
   (iii) S. I. I., Vol. III, Part. II. No. 76
7. Epigraphia Indica, Vol. VI, Page. 335



மதகடிப்பட்டுச் சிவன் கோயில்
[முதலாம் இராசராச சோழன் காலம்]
நன்றி : French Institute of Indology - Pondicherry

என்று வரும் சாசனத்தால், இச்சிறிய அழகிய கற்றளியை எடுப்பித்தவன், முதலாம் இராசராச சோழன் என்று அறிகிறோம். இம்மன்னவனின் 8-ஆவது ஆண்டில் (கி. பி. 993) வரையப்பட்ட சாசனத்தின் ஒரு பகுதி இக்கற்றளியில் காணப்படுகிறது. இங்குள்ள சாசனங்களில் இதுவே மிகப் பழமையானது. ஆதலின், இம்மன்னவன் ஆட்சிக்கு வந்த கி. பி. 985-ஆம் ஆண்டிலிருந்து எட்டு ஆண்டுகளுக்குள் இக்கற்றளி நிறுவப்பட்டமை தேற்றம்.

இனி, இம்மன்னன் காலத்தில் கட்டப்பட்ட தஞ்சைப் பெரிய கோயில், இவனுடைய 19-ஆவது ஆண்டில் தொடங்கி, 23-ஆவது ஆண்டில் நிறைவு பெற்றதாக ஆராய்ச்சி வல்ல அறிஞர் கருதுவர்.[8] நமது மதகடிப்பட்டுக் கற்றளி, இம்மன்னனின் 8-ஆவது ஆண்டுக்கு முன்பே கட்டப்பட்டது. ஆதலின், தஞ்சைப் பெருவுடையார்க் கோயிலைக் காட்டிலும் இது காலத்தால் பழமையானது.

## மூலலிங்கம்

மேற்கு நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ள இக்கற்றளியின் கருவறை, 2.83 மீ. பக்கம் கொண்ட சதுரமான அமைப்புடையது. இங்குப் பிரதிட்டை செய்யப்பட்டுள்ள இலிங்கம், மூலலிங்கம் என்று பெயர் பெறும். இலிங்கத்தின் மகேசுவர பாகம் இங்கு மூலவராக உள்ளது. பீடமாக அமையவேண்டிய விஷ்ணுபாகமும் பிரம்ம பாகமும் இடம்பெறவில்லை. இத்தகைய அமைப்பு மிக அரிதாகவே காணப்படும்.

## அர்த்த மண்டபம்

கருவறை முன்னுள்ள அர்த்த மண்டபம், 2.83 மீ. நீளமும் 2.62 மீ. அகலமும் உடையது. இங்குள்ள இரண்டு தூண்கள் எண்பட்டை வடிவானவை. அவை பத்மபந்தம், கலசம், கும்பம், பலகை, போதிகை முதலான உறுப்புகளைப் பெற்று எடுப்பாகக் காட்சியளிக்கின்றன. இவை பாகூர்ச் சிவன் கோயிலிலுள்ள அர்த்த மண்டபத்துத் தூண்களை ஒத்துள்ளன. எனினும், அவை பதினாறு பட்டைகளைக் கொண்டு, கொடிக்கருக்குகளால் அலங்கரிக்கப் பட்டுள்ளன.

இங்கு நிறுவப்பெற்றிருந்த இரண்டு துவார பாலகர்களின் சிலைகளில் ஒன்று, புதுவையிலுள்ள தலைமை மருத்துவ மனையில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளது. இதற்கு இணையான மற்றொரு சிலை யாண்டுளது என்று அறிந்துகொள்ள இயலவில்லை.

அதிட்டானத்தில் உருண்டை வடிவான குமுதப்படை உண்டு. அதன்மீதுள்ள கொடுங்கையைப் போன்ற பகுதியில், சிற்றுருவச் சிலைகள் பொறிக்கப்பட்ட கூடுகள் உள்ளன. மேலே யாளி வரிமானம் காணப்படுகிறது. சுவர்கள் அரைத்தூண்களால் அணி செய்யப்

---

8. பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம். I, பக்கம். 132

பெற்றுள்ளன. அவை அனைத்தும் உருண்டை வடிவானவை. ஆயினும், கலசம் முதலான உறுப்புகளைக் கொண்டுள்ளன.

கொடுங்கையில் கூடுகள் காணப்படுகின்றன. அவை யாளியின் தலையால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. கொடுங்கையின்மேல் பூதகண வரிசையைக் காண்கிறோம். அவை பலவகையான இசைக்கருவிகளை முழக்குகின்றன. யாளி வரிமானம் அழகுற அமைந்துள்ளது. கிரீவத்தில் மூலைக்கு இரண்டாக, நான்கு மூலைகளுக்கும் எட்டு நந்திகளின் சிலைகள் இடம்பெற்றுள்ளன.

கருவறைச் சுவர்களில் மூன்றும், அர்த்தமண்டபச் சுவர்களில் இரண்டுமாக ஐந்து தேவ கோட்டங்கள் உள்ளன. கோட்டங்களின் பக்கப் பகுதிகள், அரைத்தூண்களால் அழகு பெறுகின்றன.

கருவறைக் கோட்டங்கள் மூன்றனுள் தெற்கே தட்சணாமூர்த்தி, வடக்கே பிரமன், கிழக்கே இலிங்கோத்பவர் ஆகியோரின் சிலைகள் நிறுவப்பெற்றிருந்தன. அர்த்த மண்டபக் கோட்டங்களில் தெற்கே விநாயகர், வடக்கே துர்க்கை ஆகியோரின் சிலைகள் இருந்தன. மூலக் கோயிலைச் சார்ந்திருந்த இத்தேவ கோட்டச் சிலைகளை, இக்கற்றளியில் இப்போது காண இயலாது. இங்கிருந்த விநாயகர், துர்க்கை, பிரமன், இலிங்கோத்பவர் முதலான சிற்பங்கள், இந்நாளில் புதுவையில் உள்ள பிரஞ்சுப் பண்பாட்டுக் கழக அலுவலகத்தில், காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டுள்ளன.

## விமானம்

உருண்டை வடிவிலான இக்கற்றளியின் விமானம், முழுவது மாகக் கருங்கல்லால் ஆனது. விராலூர் பூமீசுவரர் கோயில், காஞ்சி புரம் கௌசிகேசுவரர் கோயில், மேற்படி அரிஞ்சிகை ஈசுவரம் ஆகிய சோழர் காலத்துக் கோயில்களின் விமான அமைப்பை இது ஒத்துள்ளது. விமானத்தின் நான்கு பக்கங்களிலும் தேவ கோட்டங்கள் உள்ளன. மேல்பகுதி கொடிக்கருக்குகளால் அணி செய்யப்பட்ட கூடுகளைக் கொண்டுள்ளன.

இந்நான்கு கோட்டங்களில் கிழக்கே சுகாசன உருவினரான சுப்பிரமணியரின் சிலையும், தெற்கே யோக தட்சணாமூர்த்தி தேவரின் சிலையும், மேற்கே சுகாசனரான திருமாலின் சிலையும், வடக்கே பிரமனின் சிலையும் நிறுவப்பட்டுள்ளன. கலசமும் கல்லால் ஆனது.

சிவன் கோயிலுக்கு அண்மையில் தெற்கு நோக்கியவாறு அம்மன் கோயில் உள்ளது. அதன் எதிரே சப்தமாதர்க் கோயில்

அமைக்கப்பட்டுள்ளது. கல்வெட்டுக் குறிப்பிடும் சப்தமாதர்க் கோயிலின் அமைவிடம் அதுவே எனக் கொள்ளுதற்கு இடமில்லை. சிவன் கோயிலை எதிர்நோக்கியவாறு மற்றொரு சிறு கற்றளி உண்டு. அங்கு மூலவரின் உருவம் ஏதுமில்லை.

பெருமளவில் சீரழிந்து போன இப்பழமையான கோயில்கள், அவற்றின் பழைய அமைப்புகள் மாறுபடாதவாறு மீளவும் கட்டப்பட்டுள்ளன. அங்கிருந்த சாசனங்கள் படி எடுக்கப்பட்டுப் படித்தறியப்பட்டன. அழிந்துபோன வரலாற்றுக் கருவூலங்கள், இயன்றவரைக் காக்கப்பட்டுள்ளன. அவற்றுக்காகப் பெருமுயற்சி எடுத்துக்கொண்ட அனைவர்க்கும், மீளவும் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்வோம்.



# பண்டசோழனூர்

பண்டசோழனூர் என்னும் சிற்றூர், புதுவைக்குத் தென் மேற்கே ஏறத்தாழ 24 கி. மீ. தொலைவிலும், திருபுவனையிலிருந்து தெற்கே 8 கி. மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. கல்மண்டபம் என்னும் ஊரிலிருந்து தெற்கே 1.5 கி. மீ. தொலைவு சென்றால் இவ்வூரை எளிதில் அடையலாம்.

இங்குள்ள மல்லிகார்ச்சுனேசுவரர் கோயிலில், சிதைந்த நிலையில் சில பழமையான கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டு கள் இதுகாறும் தொல்பொருள் துறையினரால் படி எடுக்கப்பெற வில்லை. படித்தறியப்படவில்லை. வரலாற்று ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படும் என்று கருதி, அவற்றை இங்கு வெளியிடுகின் றேன். இங்குள்ள கல்வெட்டுகளைப் படித்தறிதற்கு எனக்கு எல்லா வகையிலும் ஏற்பாடு செய்துதவிய பெருமதிப்புக்குரிய திருமுடி திரு. ந. சேதுராமன் அவர்களுக்கு யான் என்றும் கடப்பா டுடையேன்.

## முதலாம் குலோத்துங்கன் சாசனம்:

1. ஸ்வஸ்திஸ்ரீ புகழ்(மாது)விளங்க ஜயமாது விரும்ப நில மகள் நிலவ மல(ர்)மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி வில்லவர்க் குலைதா மினவன் நிலைகெட விக்கிலவன்

2. (சிங்க)ணன் மெலகடலடய திக்கனைத்தும் தன் சக்கரம் நடத்தி விரஸிம்ஹாசனத்து புவனி முழுதுடையாளொடு விற்றிருந் தருளிய கொவிராஜகெஸரியாந சக்கரவத்தி ஸ்ரீகுலொத்துங்க சொழ தெவற்கு யாண்டு யக (11)

3. ராஜெந்திர சொழ வளநாட்டு பிரம்மதெயம் ஸ்ரீதிரிபுவன மகாதெவிச் சதுப்பெதிமங்கலத்து தென்பிடாகை திருமுடவன்பள்ளி உடைய மஹாதெவற்கு பகவனை நல்லூர் குடி பள்ளிகாசுவரன்..எரி.

4. ய வைத்த திருநுந்தா விளக்கு ஒன்றுக்கு விட்ட சாவா மூவா பெராடு தொண்ணூறுங்ஸ்ரீ....(பன்மா) ஹெஸ்வர ரக்ஷை"

பண்டசோழனூர் சென்று இக்கல்வெட்டைக் காண முற்பட் டால், இங்குள்ளவாறு முழு அமைப்பில் அதனைக் காண இயலாது. முற்காலத்தில் இக்கோயிலின் பீடத்திலுள்ள குமுதப்படையில் இது வரையப்பட்டது. பிற்காலத்தில் கோயில் திருப்பணி நடைபெற்ற போது, இக்கல்வெட்டுள்ள குமுதப்படையின் பகுதிகளை, வெவ் வேறான ஆறு இடங்களில் மாற்றி அமைத்துவிட்டனர்.

இப்பகுதிகள் கோயிலின் தெற்கு, மேற்கு, வடக்குப் பீடங்களிலும், அர்த்த மண்டபத்து வாயிலின் இடது பீடத்திலும் உள்ளன. இவற்றைத் தனித்தனியாகப் படிஎடுத்து ஒன்றாக இணைத்தால், மேற்காட்டிய முழுமையான சாசனம் கிடைக்கும்.

## சாசனத்தின் செய்தி

இது முதலாம் குலோத்துங்க சோழனின் 11-ஆவது ஆண்டில் (கி. பி. 1081) வரையப்பட்ட சாசனம். பகவனைநல்லூர் என்னும் ஊரினரான பள்ளிகாசுவரான் என்பவன், திருமுடவன்பள்ளி மகா தேவருக்கு நந்தாவிளக்கு ஒன்று எரிக்க, 90 ஆடுகளைக் கொடையாக வழங்கியதை இச்சாசனம் புலப்படுத்துகிறது.

1. "ய(10)ஆவது ராஜராஜ வளநாட்டு விராவதார வளநாட்டு பிரம்ம (தெய)

2. ம்ஸ்ரீதிரிபுவன மஹாதெவிச் சதுர்வெதி மங்கலத்து திரு முடவ(ந்ப)

3. ள்ளி ஆள்ளுடையார்க்கு கொட்டு உழான் பெரியாந் நம்பியெந் இத்தெவ(ற்கு)

4. நா(ன்) வைத்த ஸந்தி விளக்கு ஒந்றுக்கும் விட்ட ஆடு பந்திரண்டும் கை (க்கொ)

5. ண்டொம் இக்கொயில் சிவ(ப்பிராமணரோம்)"

இச்சாசனம் கருவறைத் தெற்குச் சுவரில் காணப்படுகிறது. அரசன் பெயர் இல்லாமையால், இதன் காலத்தைக் கணிக்க இயலவில்லை. இச்சாசனம் வரையப்பட்டுள்ள கற்பலகைக்கு மிகப் பொருத்தமான மற்றொரு கற்பலகை, வடக்குச் சுவரில் உள்ளது. அதில் விக்கிரம சோழனின் மெய்க்கீர்த்திப் பகுதிக்கு உரிய சில சொற்கள் காணப்படுகின்றன. இரண்டிலும் உள்ள எழுத்துகளும், வரிகளும், வரிகளுக்கு நடுவில் உள்ள இடைவெளிகளும் ஒன்றாக இருக்கும் காரணம்பற்றி, இச்சாசனம் விக்கிரம சோழனின் 10-ஆவது ஆண்டில் (கி. பி. 1128) வரையப்பட்டதாக முடிவு செய்யலாம். திருப்பணி செய்யப்பட்டபோது, இவை வெவ்வேறு இடத்தில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன.

கோட்டுழான் பெரியான் நம்பி என்பவன், திருமுடவன்பள்ளி ஆளுடையாருக்கு, சந்தி விளக்கு எரிக்க, பன்னிரண்டு ஆடுகளை விளக்குத் தானமாகக் கொடுத்ததை இச்சாசனம் கூறுகிறது.

1. ங்க சொழ தெவற்கு யாண்

2. டு எட்டாவது திருமுடவன்பள்ளி....

3. கண்டமிவிட்ட திருநுந்தா விளக்கு முக்கா....

4. மக விட்ட....

சிதைந்துள்ள இச்சாசனம் அர்த்தமண்டபத்துத் தெற்குச் சுவரில் காணப்படுகிறது, 'ங்க' என்று தொடங்குவதால், இது குலோத்துங்க சோழன் காலத்தது என்பதில் ஐயமில்லை. மூன்று குலோத்துங்க மன்னர்களில் இவன் யாவன் என்று விளங்கவில்லை. எழுத்து அமைப்புகளை ஒப்பு நோக்கி, இதனை முதலாம் குலோத் துங்க சோழன் காலத்ததாகக் கருதலாம். இம்மன்னனின் 8-ஆவது ஆண்டில், திருமுடவன்பள்ளி ஆளுடையார்க்குச் செய்யப்பட்ட விளக்குத் தானத்தைப் பற்றி இது குறிப்பிடுகிறது. விளக்கு முக்கால் என்பதால், விடப்பட்ட ஆடுகள் 68 ஆக இருத்தல் வேண்டும்.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமருவிய திருமா

2. துஞ் ஜெயமாதும் நாமருவிய....

3. ம் புகழ் மாதும் நயந்து பு(ல்)க....

4. விதி நெறி யனைத்துங்....

இது அர்த்த மண்டபத்து வடக்குச் சுவரில் காணப்படும் கல்வெட்டு ஆகும். 'பூமருவிய திருமாதும்' என்று தொடங்குவ தால், இச்சாசனம் இரண்டாம் இராசராச சோழனுக்கு உரியதாகும். இதன் பெரும் பகுதி யாண்டும் காணப்படாமையால், ஆட்சி ஆண்டையும், சாசனச் செய்தியையும் அறிந்துகொள்ள இயலவில்லை.

இம்மன்னனின் மெய்க்கீர்த்தியில் பயின்று வரும் பல சொற் கள், தொடர்பின்றிப் பல இடங்களிலும் காணக்கிடக்கின்றன. ஆதலின், இம்மன்னனின் ஒன்றுக்கு மேற்பட்ட பல சாசனங்கள், இங்கே இருந்துள்ளமை புலனாகிறது. திருப்பணி என்ற பெயரில், பிற்காலத்தார் செய்துவிட்ட பெரும்பிழையின் விளைவாகப் பெரு மதிப்புடைய சாசனங்கள் பலவற்றை இழந்துவிட்டோம்.

இனி, முதலாம் குலோத்துங்க சோழனின் மெய்க்கீர்த்திப் பகுதியில் உள்ள சில சொற்களும், பல இடங்களிலும் காணப்படு கின்றன. இவற்றை நோக்க, பழமையான மூலக் கோயிலில் எண்ணற்ற கல்வெட்டுகள் இருந்திருத்தல் வேண்டும் என்பது திண்ணம்.

மேலே காட்டப்பட்ட முழுமையான சாசனங்களின் துணைக் கொண்டும், சிதைந்த சாசனங்களைக் கொண்டும் பண்டசோழ ஊரின் தொன்மையை ஒருவாறு ஆராயலாம்.

# ஊரும் பேரும்

முதலாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டு, பண்டசோழனூரின் பழமையான பெயர் இன்னதெனத் தெளிவாகக் கூறுகிறது.

'திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகை திருமுடவன்பள்ளி'

என்று வரும் கல்வெட்டுப் பகுதியால், அவ்வூரின் பழைய பெயர் திருமுடவன்பள்ளி என்றும், அது திருபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துக்குத் தெற்கே இருக்கும் ஊர் என்றும் அறிகிறோம். விக்கிரம சோழனின் சாசனமும் இதனை உறுதி செய்கிறது.

குலோத்துங்கன், விக்கிரமன் ஆகியோர் காலத்துச் சாசனங்களில், இது திருமுடவன்பள்ளி என்று குறிக்கப்படுவதால், இம் மன்னர்களின் காலத்துக்குப் பிறகுதான், இவ்வூருக்குப் பண்டசோழனூர் என்னும் பெயர் ஏற்பட்டிருத்தல் வேண்டும். இப்புதிய பெயரை ஆராயின், அது பண்டித சோழனூர் என்பதன் மருவிய வழக்கு என்பது எளிதாக விளங்கும்.

## பண்டிதசோழன்

முதலாம் இராசேந்திர சோழன் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் சிறந்த புலமை உடையவனாய் இருந்தமைபற்றி, அம்மன்னன் 'பண்டித சோழன்' என்று பாராட்டப்பட்டான். எனவே, அவனுக்கு உரிய சிறப்புப் பெயர்களுள் பண்டித சோழன் என்பதும் ஒன்று.[1]

திண்டிவனம் சிவன் கோயிலில் உள்ள அதிராசேந்திர சோழனின் கல்வெட்டு ஒன்று,

"முஞ்ஞூரான பண்டித சோழச் சதுர்வேதி மங்கலம்"

என்று முதலாம் இராசேந்திர சோழனின் இச்சிறப்புப் பெயரால் உண்டான சதுர்வேதி மங்கலத்தைக் குறிப்பிடுதல் காணலாம்.[2]

---

1. S. I. I., Vol. II, Nos. 12 & 70
2. S. I. I., Vol. VII, No.854

இனி, நமது பண்டசோழனூர் இம்மன்னனின் சிறப்புப் பெயரால் தோற்றுவிக்கப்பட்ட ஊர் என்று கருத இடமில்லை. ஏனெனில், இவன் பெயரனுன குலோத்துங்கன் கல்வெட்டு, ஊரின் பெயரைத் திருமுடவன்பள்ளி என்று குறிப்பிடுகிறது. பாட்டன் காலத்தில் இடப்பட்ட புதிய பெயர், பெயரன் காலத்துக்குள் மறைந்துவிடக் காரணம் இல்லை. அன்றியும் இராசேந்திரனின் கல்வெட்டு எதுவும் பண்ட சோழனூரில் காணப்படவில்லை.

"முந்தை முழுதுலகுய்ய முடிசூடும் ராஜபண்டிதன்" என்று இரண்டாம் இராசராச சோழனின் மெய்க்கீர்த்திப் பகுதியால்,[3] இவ்வரசனுக்கு 'இராசபண்டிதன்' என்றொரு சிறப்புப் பெயர் இருந்ததை அறிகிறோம். இராசேந்திரனைப் போலவே, இவனும் இருமொழியில் புலமை பெற்றவன்.

"முத்தமிழ்க்கும் தலைவனெனவும் மூன்றுலகின் முதல்வ னெனவும்"

என்று இவனின் மெய்க்கீர்த்திப் பகுதி புகழ்ந்துரைக்கிறது. இவ்விரண்டு சோழ மன்னர்களைத் தவிர, வேறு யாருக்கும் 'பண்டிதன்' என்ற சிறப்புப் பெயர் இருந்ததாகத் தெரியவில்லை. முதலாம் குலோத்துங்கன், விக்கிரமன் ஆகியோர் காலத்துக்குப் பின்னர், இராசபண்டிதன் என்ற சிறப்புப் பெயருக்கு உரியவனாக விளங்கியவன், இரண்டாம் குலோத்துங்கனின் மகனான இரண்டாம் இராசராச சோழனே ஆவான். இம்மன்னனின் ஆட்சிக் காலம் கி. பி. 1146 முதல் 1163 முடிய என்பர்.

## பண்டித சோழ நல்லூர்

இரண்டாம் இராசராச சோழன் ஆட்சிக் காலத்தில்தான், அவனுடைய சிறப்புப்பெயரால், இவ்வூருக்குப் பண்டிதசோழ நல்லூர் என்று பெயர் இடப்பட்டு, அதுவே நாளடைவில் மருவி, இன்றைய பண்டசோழனூர் ஆயிற்று. இம்மன்னனின் மிகுதியான கல்வெட்டுப் பகுதிகள் இங்குக் காணப்படுவது, இக்கருத்தை உறுதி செய்கிறது.

பண்டசோழனூரின் நடுவிடத்தே, புதியதாக அமைந்துள்ள மாரியம்மன் கோயிலில் உள்ள சில கருங்கற் பலகைகள், நாம் குறிப்பிட்ட சிவன் கோயிலுக்கு உரியனவாகும். மாரியம்மன் கோயிலின் அர்த்த மண்டபத்தில் பொருத்தப்பட்டுள்ள இரண்டு

---

3. செந்தமிழ், தொகுதி. 26, பக்கம். 471 – 475

கற்பலகைகளில், கல்லெழுத்துகள் தென்படுகின்றன. அவற்றில் சோழநல்லூர் என்ற வாசகம் காணப்படுகிறது. எஞ்சியுள்ள பகுதிகளில் வண்ணமும் சுண்ணமும் பூசப்பட்டதால் படித்தறிய இயலவில்லை. அங்குக் காணப்படும் சோழநல்லூர் என்பது, பண்டித சோழநல்லூர் என்ற பெயரின் எஞ்சிய வாசகமாகும்.

இதுகாறும் கூறியவற்றால் முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் ஆகியோரின் காலங்களிலும், அவர்களுக்கு முற்பட்ட காலங்களிலும் திருமுடவன்பள்ளி என்ற பெயரைப் பெற்றிருந்த இவ்வூர், இரண்டாம் இராசராச சோழன் காலம் முதல், பண்டித சோழநல்லூர் என்று அழைக்கப்பட்டதை உணரலாம்.

பண்டசோழனூர்ச் சிவன் கோயில் இறைவனை 'திருமுடவன் பள்ளி மகாதேவர்' என்று குலோத்துங்கனின் சாசனமும், 'திருமுடவன்பள்ளி ஆளுடையார்' என்று விக்கிரமன் சாசனமும் குறிப்பிடுகின்றன.

## பள்ளிப் படைக் கோயில்

பள்ளிப்படை என்பது சமாதிக்கோயில் என்று பொருள்படும். பள்ளி என்பது சமாதியையும் படை என்பது கோயிலையும் குறிக்கும்.

"கொவிஜயகம்பற்கு யாண்டு எட்டாவது பிருதிவி கங்கரையர் அதிதர் ஆயின பிற்பாடு தத்புத்ர ராஜாதித்யன் மகாதெவன் தம் அப்பனைப் 'பள்ளிப்படுத்த' இடத்து ஈசுவர ஆலயமும் அதிந கிருகமும் எடுப்பித்துக் கண்டு செவித்தான்"

வேலூருக்குத் தெற்கே 8 கல் தொலைவிலுள்ள சோழபுரம் என்ற ஊரில் இக்கல்வெட்டு காணப்படுகிறது. இது பல்லவகுல வேந்தனை விசயகம்பவர்மனுடைய எட்டாவது ஆண்டில் (கி. பி. 886) வரையப்பட்டதாகும்.

சிற்றரசனை இராசாதித்தியன் என்பவன், இறந்துபோன தன்தந்தை பிருதிவிகங்கரையர் என்பவரின் நினைவாகப் பள்ளிப் படைக் கோயில் ஒன்றை எடுப்பித்து வழிபட்ட செய்தியை இச்சாசனம் கூறுகிறது. தென்னாட்டில் உள்ள பள்ளிப்படைக் கோயில்களில் இது மிகப்பழமையானது.

இச்சாசனத்தில் 'பள்ளிப்படுத்த இடத்து' என்ற தொடர் 'புதைத்த இடத்து' என்னும் பொருளில் வருதலைக் காணலாம். இனி,

"நமிநக்கன் சங்கான் இப்படைக்கு வைச்ச கல்லு நாலு"

என்று வரும் பாகூர்க் கல்வெட்டில், படை என்பது கோயில் என்ற பொருளில் வருதலைக் காணலாம். ஆதலின், பள்ளிப்படை என்பது, ஒருவரின் நினைவுக்கு அடையாளமாக, அவரைப் புதைத்த இடத்தில் நிறுவப்பெறும் சமாதிக்கோயில் என்பதில் ஐயமில்லை.

## நினைவுக் கோயில்கள்

ஆந்திரமாநிலம், சித்தூர் மாவட்டம் காளத்திக்கு அண்மையில் உள்ள தொண்டைமானாடு என்னும் ஊரில், முதலாம் ஆதித்த சோழன் இறந்துபோனான் என்பது, அவன் காலத்துக் கல்வெட்டால் அறியப்பெறும் செய்தியாகும்.[4] அம்மன்னனின் மகனான முதலாம் பராந்தகச் சோழன், தன் தந்தையின் நினைவாக தொண்டைமானாற் றூரில் பள்ளிப்படைக் கோயில் ஒன்றை எடுப்பித்து, அதற்கு ஆதித்தேசுவரம், கோதண்டராமேசுவரம் எனப் பெயரிட்டான்.[5]

அரிஞ்சய சோழன் தொண்டை நாட்டைக் கைப்பற்றும் முயற்சியில், வட ஆர்க்காடு மாவட்டம், திருவல்லத்துக்கு வடக்கே உள்ள மேற்பாடி என்னும் ஊரில் இறந்துபோனான். இம்மன்னனின் பேரனான முதலாம் இராசராச சோழன், தன் பாட்டனின் நினைவாகப் பொன்னி ஆற்றங்கரையில், அரிஞ்சயேச்சுரம் என்ற பெரிய பள்ளிப்படைக் கோயில் ஒன்றை நிறுவி, அதற்கு நிவந்தங்களும் வழங்கியுள்ளான்.[6] அக்கல்வெட்டு பின்வருமாறு அமைந்துள்ளது.

"ஸ்ரீகோராஜராஜ கேசரிவர்மரான ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு 29-ஆவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் பெரும் பாணப்பாடி தீவா நாட்டு மேற்பாடியான இராசாச்ரய புரத்து

---

4. S. I. I., Vol. III, No. 142
5. (i) S. I. I., Vol. VII, No. 529
   (ii) Epigraphia Indica, Vol. VII, Page. 193
   (iii) A. R. E. 1906, No. 286
   (iv) Annual Report of the Archaeological Dept, South Circle, Madras, Part. II, 1915 – 16
6. (i) S. I. I., Vol. III, Part. I, Nos. 15 to 17
   (ii) A. R. E. 1920, No. 527

ஆனைமேல் துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் எடுப்பித்தருளின திருவரிஞ்சிசுவரத்து மகா தேவர்க்கு"

இனி, கோனேரி ராஜபுரத்தில் கண்டராதித்த சோழரின் நினைவாக, அவர் மனைவி செம்பியன்மாதேவியார், பள்ளிப்படைக் கோயில் எடுப்பித்து நிவந்தங்கள் வழங்கியுள்ளார். இரண்டாம் பராந்தகச் சோழனை சுந்தர சோழன், விக்கிரம சோழன் ஆகியோருக்கும் இத்தகைய பள்ளிப்படைக் கோயில்கள் இருந்துள்ளன. இந்தோசினாவிலும், இந்தோ ஆசியாவிலும் இருந்த இத்தகைய பள்ளிப்படைக் கோயில்கள், 'தேவராஜர் கோயில்' என்று அழைக்கப்பட்டன.[7]

## நடுகல் வழக்கம்

போரில் மடிந்த பெருவீரனின் நினைவாக, அவன் பெயரையும் புகழையும் கல்லில் எழுதி, அதற்கு அணிமயில் பீலி சூட்டி, அதர்தொறும் நடுகின்ற வழக்கம், தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே இருந்துள்ளது, தொல்காப்பியர் இதனைப் பெரும்படை என்பர். இதற்கு உரை எழுதிய இளம்பூரண அடிகள்,

"நாட்டிய கல்லிற்குக் கோட்டஞ் செய்தல்" என்று விளக்கம் கூறுவர்.[8] கோட்டம் – கோயில். பெரும்படை என்பதற்குச் சாசனங்களில் பள்ளிப்படை என்று பெயர் வழங்கப்பட்டுள்ளது என்பர் அறிஞர் திரு. மயிலை. சினி. வேங்கடசாமி அவர்கள்.[9]

## பள்ளிதுஞ்சியோர்

சேரமான் சிக்கற் பள்ளி துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் இளவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் முதலான சங்ககாலத்து வேந்தர்கள் இறந்துபட்ட இடம், பள்ளி என்று குறிக்கப்பெறுதல் இங்கு உளங் கொளத் தக்கது.

---

7. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், பக்கம். 11
8. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணை இயல், சூ. 3
9. சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள், பக்கம். 119

திருப்பள்ளி

அறப்பணி அகத்தியான் பள்ளிவெள்ளைப் பொடிபூசி
　　ஆறணி வானமர் காட்டுப் பள்ளி
சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன் பள்ளி
　　திருநனி பள்ளி சீர்மகேந் திரத்துப்
பிறப்பி லவன்பள்ளி வெள்ளச் சடையன்
　　விரும்பும் மிடைப்பள்ளி வண்சக் காமல்
உறைப்பா லடிபோற்றக் கொடுத்த பள்ளி
　　உணராய்மட நெஞ்சமே உன்னி நின்றே!

என்று ஞானசம்பந்தரும், 10

பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
　　புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
காப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
　　கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
　　செழுநனி பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப்பள்ளி யென்றென்று பகர்வோ ரெல்லாம்
　　பரலோகத் தினிதாகப் பாவிப் பாரே!

என்று திருநாவுக்கரசரும் 11 பள்ளி என்று பெயர்பெற்ற சிவத் தலங்கள் பலவற்றைக் குறிக்கின்றனர். இவை பாடல் பெற்றத் தலங்களாகவும், வைப்புத் தலங்களாகவும் போற்றப்படுகின்றன. இவற்றில் சில ஊர்கள், இடைக்காலத்தே சமணர்களின் தவப் பள்ளிகளாக இருந்த காரணம் பற்றிப் பள்ளி எனவும் பாழி எனவும் வழங்கப்பட்டுள்ளன. 12

தேவாரத்தில் இடம் பெற்றுள்ள இவ்வூர்கள் சிலவற்றிலேனும், முற்காலத்தில் பெரியோர்களின் அல்லது பெருவீரர்களின் பள்ளிப் படைக் கோயில்கள் இருந்திருக்கலாம். இது முடிவான கருத்தல்ல வாயினும், அறிஞர்கள் மேலும் ஆராய்ந்து முடிவு காண்பார்களாக. இதுகாறும் எடுத்துக் காட்டப்பட்ட சான்றுகளால், பள்ளிப்படைக்

---

10. திருஞானசம்பந்தர் தேவாரம், க்ஷேத்திரக் கோவை, பா. 4
11. திருநாவுக்கரசர் தேவாரம், அடைவுத் திருத்தாண்டகம், பா. 1
12. பன்னிரு திருமுறை வரலாறு, பாகம். I, பக்கம். 689

கோயில்களைப் பற்றித் தெளிவாக அறிகிறோம். இனி, இதற்கும் பண்டசோழனூர்ச் சிவன் கோயிலுக்கும் உள்ள தொடர்பினைக் காண்போம்.

## திருமுடவன்

பண்டசோழனூர்க் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ள திருமுடவன் என்பான், முன்னொரு காலத்தில், இப்பகுதியில் வாழ்ந்த பெரியோனாகவோ பெரு வீரனாகவோ இருந்திருத்தல் வேண்டும். இவன் போரில் நிகழ்த்திய விழுமிய செயலால் முடமாகி இருக்கலாம். எனவே, இவன் திருமுடவன் என்று அழைக்கப்பட்டான். முடமோசியார், ஐயூர் முடவனார் முதலான சங்ககாலப் புலவர்களின் பெயர்கள், முற்காலத்தில் இருந்த இப்பெயர் வழக்கத்தை நமக்குக் கோடிட்டுக் காட்டுகின்றன.

"ஸ்ரீகொயிலுடைய சிவப்ராஹ்மணர் குண்டினன் சந்திரசெகரன் திருமுடவநும் சந்திரசெகர நல்லூராடிகளும் இதெவருடைய ஒருபங்கும் இறையிலி அநுபவித்து"

எனவும்,

"இப்பரிசு இச்சந்திரசெகரன் திருமுடவன் தன் சொம்பாதியில் முன்ப்ரமாதி ஸ்திரிதனம் பெற்றுடைய பாரங்கவி திருவடுலூர் மஹாதெவநும்"

எனவும் வருகின்ற கல்வெட்டுப் பகுதிகள், மதகடிப்பட்டுச் சிவன் கோயிலில் காணப்படுகின்றன.[13] இவை சோழர் காலத்தவவாகும். இவற்றால் சந்திரசேகரன் என்னும் சிவப்பிராமணன் ஒருவன், அக்காலத்தில் திருமுடவன் என்று அழைக்கப்பட்டு வந்ததை அறிகிறோம்.

## திருமுடவன்பள்ளி

பண்டசோழனூரில் இன்று "திருமுடவன்பள்ளி" என்ற பெயருடன் இருக்கும் சிவன் கோயில், முற்காலத்தில் 'திருமுடவன்' என்பானின் நினைவாக நிறுவப்பட்ட பள்ளிப்படைக் கோயிலே யாகும். மதகடிப்பட்டுக் கல்வெட்டுகள் கூறுகின்றதைல் வேண்டும். பண்டசோழனூரில் பள்ளிப்படைக் கோயில் கொண்ட திருமுடவன், அவனுக்குக் காலத்தால் முற்பட்டனாக இருத்தல் வேண்டும்.

---

*13*. Temple de Madagadipattou, Page. 66

ஆகமவிதிப்படி பள்ளிப்படைக் கோயில்களில் துவசத்தம்பமும், பலிபீடமும் அமைக்கப் பெறுவதில்லை. பண்டசோழனூர்க் கோயிலிலும் இவை காணப்படவில்லை என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. இப்போதுள்ள பலிபீடம் மிகப் பிற்காலத்தது. செங்கற்பட்டு மாவட்டம், பொன்னேரி வட்டம், சத்தியவேடு என்னும் சிற்றூரில் உள்ள சிவன் கோயில், இவ்வாறு எடுப்பிக்கப்பட்ட பள்ளிப்படைக் கோயிலாகும். அது முற்காலத்தில் மதங்கப்பள்ளி என்று பெயர்பெற்றிருந்தது. [14]

பண்டசோழனூரில் முதன்முதலாகத் திருமுடவன்பள்ளி என்னும் பள்ளிப்படைக் கோயில் மட்டுமே நிறுவப்பட்டது. இறைவன், திருமுடவன்பள்ளி உடைய மகாதேவர், திருமுடவன் பள்ளி ஆளுடையார் என்று அழைக்கப்பட்டார். ஆளுடையார் என்பது தேவார வழக்கு. "அடியேனை ஆளுடைய அடிகளாரே!" என்பர் அப்பர்.

கோயிலைச் சார்ந்து ஊரும் உருவாகத் தொடங்கவே 'திருமுடவன்பள்ளி' என்னும் கோயிலின் பெயர், ஊருக்கும் பெயராகி விக்கிரம சோழன் காலம் வரை நிலைத்திருந்தது. பின்னர் இரண்டாம் இராசராச சோழன் காலத்தில், ஊருக்கென்று தனியாகப் 'பண்டித சோழ நல்லூர்' என்று பெயர் இடப் பட்டது. அப்பெயரே இக்காலத்தில் 'பண்டசோழனூர்' என்று மருவி வழங்குகிறது.

## கட்டடக் கலை

திருமுடவன்பள்ளிச் சிவன் கோயில் பன்முறை செப்பனிடப் பட்டதால், அதன் பழமையான அமைப்பு முற்றிலுமாக மாறி விட்டது. கட்டட உறுப்புகள் பலவாறு இடம் பெயர்ந்துள்ளன. ஒழுங்கற்ற கோயிற் சுவர்களே இதனைத் தெளிவாக்குகின்றன.

மாற்றியமைக்க இயலாத கொடுங்கைப்பகுதி மட்டும் உள்ளவாறு அமைந்துள்ளது. அதில் இடம்பெற்றுள்ள கூடுகள், யாளித் தலைகளைக் கொண்டுள்ளன. கொடுங்கையின்மேல் யாளி வரிமானமும், இழே பூதகண வரிசையும் உண்டு. "பூதப்படைகள் புடைசூழக் கொண்டார்" என்பர் நாவுக்கரசர். கொடுங்கையின் மூலைகள் கொடிக்கருக்குகளால் அணி செய்யப்பட்டுள்ளன. பூதகணங்கள்

---

14. History of Ancient Dekkan, Pages. 384 & 385

பன்னியம் இயம்புகின்றன. இடையிடையே இலிங்கம், நந்தி, யாளி ஆகிய சிற்றுருவச் சிலைகளைக் காணலாம். இவை அனைத்தும் கருவறைச் சுவர்களில் மட்டுமே காணப்படுகின்றன.

## தேவகோட்டங்கள்

கருவறையையும் அர்த்தமண்டபத்தையும் சார்ந்த சுவர்களில் ஐந்து தேவ கோட்டங்கள் உள்ளன. அவற்றுள் கருவறை மேற்குக் கோட்டத்தில் உள்ள இலிங்கோத்பவரின் சிலை பழமையானது. தெற்குக் கோட்டத்துத் தட்சணாமூர்த்தியின் சிலை பிற்காலத்தது. ஏனைய கோட்டங்களில் சிலைகள் இல்லை. கோட்டத்தின் பக்கங்களை அரைத்தூண்கள் அணி செய்கின்றன.

## தொல் பொருள் சிதைவு

பண்டசோழனூரில் உள்ள பிற்காலத்து மாரியம்மன் கோயிலில், சிவன் கோயிலுக்கு உரித்தான கற்பலகைகள் உள்ளன. அவற்றில் கல்லெழுத்துகள் உண்டு. திருப்பணி என்ற பெயரில், மதிப்புடைய சாசனங்கள் அழிக்கப்பட்டுள்ளன. நாயக்கர் காலத்து முழுமை யான தூண்கள், திருச்சுற்றுக்கு வெளியே புதையுண்டு கிடக் கின்றன. நாயக்கர் காலத்து மண்டபங்களால், இக்கோயில் அழகு செய்யப்பட்டதை இத்தூண்கள் நினைவுபடுத்துகின்றன.

பண்டசோழனூர்ச் சிவன் கோயிலில், சிதைந்தும் சிதை யாமலும் கிடைத்துள்ள ஒருசில கல்வெட்டுகளின் துணையால், ஊரின் பழமையான பெயர் திருமுடவன்பள்ளி என்றும், பிற்காலத்துப் பெயர் பண்டித சோழ நல்லூர் என்றும், சிவன் கோயில் சோழர் காலத்துப் பள்ளிப்படைக் கோயில் என்றும் அறிகிறோம்.



# வில்லியனூர்

புதுவையில் இருந்து விழுப்புரம் செல்லும் பெருவழியில், புதுவைக்கு மேற்கே 8 கி. மீ. தொலைவில் வில்லியனூர் என்னும் ஊர் அமைந்துள்ளது. இவ்வூரின் தொன்மையான வரலாற்றை ஆராயப் புகுந்தவர்கள் செவிவழிச் செய்திகளையும், தலபுராணமாகிய வில்லைப்புராணத்தையும் மையமாக வைத்தே ஆராய்ந்தனர்.

மேற்கண்ட இரண்டுடன் கல்வெட்டுகளையும் துணையாகக் கொண்டு, வில்லியனூரின் உண்மை வரலாற்றைக் காண முற்படுவதே எனது நோக்கமாகும். அவ்வாறயின் செவிவழிச் செய்திகள், புராணக்கண்ணோட்டம், வரலாற்று மேலோட்டம் என்னும் மூன்று தலைப்புகளில் இதனை ஆராயத் துணியலாம்.

## செவிவழிச் செய்திகள்

"கி. பி. 14-ஆம் நூற்றுண்டுக்கு முன்னர்,[1] இப்போதுள்ள வில்லியனூர் இருக்கும் பகுதி, வில்வமரங்கள் செறிந்த காடாக இருந்தது. காட்டுப் பகுதிக்குக் கிழக்கே, உழவர்கரை என்னும் பேரூர் இருந்தது. அவ்வூர் மக்கள் செல்வச் செழிப்பு உள்ளவர் கள். இவர்களில் பலர் பொன்னாலான காலணி அணிந்திருந்தனர். இவர்களின் செல்வ வளத்துக்கு இஃதோர் எடுத்துக்காட்டு. உழவர் கரை மக்களுக்கு உரித்தான கால்நடைகள், அருகில் உள்ள காட்டுப் பகுதிச் சென்று, மேய்ந்து வரும் இயல்புடையன. அவ் வூர் நிலக்கிழார் ஒருவருக்குக் கரியநிறக் கறவைப் பசு ஒன்று சொந்தமாக இருந்தது. அப்பசுவும், வில்வவனம் சென்று மேய்ந்து வரும் இயல்பினது. காலையில் சென்று மாலையில் திரும்பிவரும் அப்பசுவின் மடி, பாலின்றி வற்றியே காணப்பட்டது. இந்நிலை பல நாட்களாகத் தொடர்ந்து நீடித்தது. ஆநிரை மெய்ப்பான், இதன் காரணத்தை ஆராய முற்பட்டான்.

வழக்கம்போல் பசு வில்வக் காட்டுக்குச் சென்றது. ஆநிரை மேய்ப்பான் அதனைப் பின்தொடர்ந்தான். மாலை நேரம் வந்தது.

---

1. இற்றைக்கு ஏறத்தாழ 900 ஆண்டுகளுக்கு முன்னர் என்றும் கூறுவர்.

பசு அவசர அவசரமாக ஏதோ ஓரிடத்தை நாடிச் சென்றது. அவனும் பின் தொடர்ந்தான். பசு சிறிதே நின்றது. அவனும் மறைந்து நின்றான். புதர்கள் மண்டியுள்ள ஓர் இடம். அங்கே ஒரு வில்வமரம். அதனை நாடிச் சென்றது பசு. செடி கொடிகளுக்கு இடையில் மறைந்திருந்த ஒரு இலிங்கத்தின்மீது, தன் பாலை அன்புடன் சொரிந்தது.

இந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற ஆநிரை மேய்ப்பான், வியப்படைந்து மெய் சிலிர்க்க நின்றான். விரைந்தோடி உழவர்கரை மக்களுக்குச் செய்தியைச் சொன்னான். அவர்களும் ஒருங்கு திரண்டனர். இருள் சூழும் நேரம். ஆதலின், தீப்பந்தம் ஏந்தி வில்வக் காட்டை அடைந்தனர். இவ்வரிய காட்சியைச் கண்டு ஆனந்தம் அடைந்தனர். பெருமானை ஒன்றுபட்ட உள்ளத்தினராய் வணங்கினர். ஆலயம் ஒன்றமைக்க முடிவு செய்தனர். அவ்விறைவனே இன்றைய வில்லியனூரில் உள்ள திருக்காமீசுவரர்." [2]

மேற்கூறப்பட்ட செய்திகள் அனைத்தும், பலரும் பல்வேறு மாறுதல்களுடன், அவ்வப்போது எழுதிவந்த செவிவழிச் செய்திகளின் தொகுப்பாகும். வில்வநேசர், ஆத்மநேசர், பாவநாசர், வைத்தீசுவரர் முதலான பெயர்களும் இறைவனின் பெயர்களாகக் கூறப்பெறுகின்றன.

செவிவழிச் செய்திகள் அனைத்தும் கால நீட்சிக்கு ஏற்ப, கூடியும் குறைந்தும் உருப்பெறும் இயல்புடையன. இச்செவிவழிச் செய்தியில் உழவர்கரை என்பது, பேரூர் என்று சொல்லப்படுகிறது. இதனை ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். ஏனெனில், இக் கருத்து கல்வெட்டுகளால் உறுதி செய்யப்படுகிறது. கோயில் உண்டான வரலாற்றுக்குத் தக்க ஆதாரங்கள் இல்லை. இவ்வாறு சாசனங்களால் உறுதி பெறும் செய்திகளை நமது வரலாற்றுக்குத் துணையாக எடுத்துக்கொள்வோம். அவற்றை உரிய இடத்தில் காண்போம்.

---

2. (i) Census of India. 1961, Vol. XXV, Part. VI, Page. 68 (Pondicherry State)

(ii) புதுவைச் செய்திகள், ஜனவரி – பிப்ரவரி. 1971, பக், 18

(iii) விந்தைப் பசு கண்ட விஸ்வநேசர் (தினமணிச் சுடர். 16-3-1969)

# புராணக் கண்ணோட்டம்

புராணம் கூறும் செய்திகளை அறிந்து கொள்ளுதற்கு முன்னர், அப்புராணத்தைப் பற்றிய செய்திகளைச் சுருக்கமாகவேனும் அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதது.

வில்லியனூர்ச் சிவபெருமான்மீது பாடப்பட்ட தலபுராணம் வில்லைபுராணம் என்று பெயர் பெறும். அது வீரராகவகவி என்பவரால் இயற்றப்பட்டது. பெருமதிப்புக்குரிய டாக்டர் உ. வே. சுவாமிநாதையர் அவர்கள், 1940-ஆம் ஆண்டில் இதனை அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். வில்லைப் புராணத்துக்கு மூல நூலாக விளங்கியது, வட மொழியில் இருந்த புராணம் என்பர். அது கி. பி. 1877-ஆம் ஆண்டில், உள்ளூர் அன்பர்கள் சிலரால், தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. இப்புராணங் கள் வெளிவருவதற்கு முன்புவரை, வில்லியனூரின் பழமைக்கு மேற்கண்ட செவிவழிச் செய்திகளே துணையாக நின்றன. இப் பொழுது அவற்றுடன் புராணச் செய்திகளும் சேர்ந்துகொண்டன.

## புராணச் செய்திகள்

வில்லைப்புராணச் செய்திகள் நமக்கு ஏற்கனவே அறிமுகம் செய்யப்பட்டவை. ஆயினும், அவசியம் பற்றி அவற்றை இங்குச் சுருக்கமாகக் காண்போம். வில்லைப்புராணம், பாயிரச் சருக்கம் முதல் மன்மதச் சருக்கம் ஈறாக ஒன்பது சருக்கங்களையும், 495 செய்யுட்களையும் உடையது. பாயிரச் சருக்கம் நீங்கலாக ஏனைய எட்டுச் சருக்கங்களிலும் தனித்தனிச் செய்திகள் கூறப்படுகின்றன. அவை ஒன்றுக்கொன்று தொடர்பற்றவை.

'பாவம் செய்தவரும் பேறு பெறுகின்ற தலம் இதுவே' என்று சிவபெருமான் முருகக் கடவுளுக்கும், முருகக் கடவுள் வியாச ருக்கும், வியாசர் சூத முனிவருக்கும் கூறியதாக நைமிசாரணியச் சருக்கம் கூறுகிறது.

கலிங்க நாட்டு நகரத்தைச் சேர்ந்த சகலாங்கசௌந்தரி என்ற கணிகை, இங்கு வழிபட்டு மகப்பேறு பெற்றதை, சகலாங்க சௌந்தரி வழிபாடு சருக்கம் குறிப்பிடுகிறது.

பிரம தேவன் முத்தாறு என்ற நதியின் இடையில், வில்வவனம் ஒன்று உண்டாக்கி, அங்குச் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து, வழிபட்டுப் பேறு பெற்றதைச் சதுமுகச் சருக்கத்தில் காணலாம்.

திருமால் நரசிங்கராகத் தோன்றி இரணியனை அழித்த வரலாற்றையும், அதனால் உண்டான பிரம்மஹத்தி தோஷத்தினின்றும் விடுபட, அவர் இங்குள்ள இறைவனை வணங்கிப் பேறு பெற்றதையும் நாரசிங்கச் சருக்கத்தால் அறியலாம்.

கமலாபுரி மன்னனான தருமபாலச் சோழன், இவ்விறைவனை வழிபட்டுத் தனக்குற்ற வெண்குட்ட நோயினின்றும் விடுபட்டதையும், அச்சோழ மன்னன் இறைவனுக்கு ஆலயம் எடுப்பித்து, தேர் இயற்றி, கோயிற் பணியாளரை நியமித்து, ஊர் உண்டாக்கி சிவப்பணி செய்ததையும் தருமபாலச் சருக்கம் விளக்கிச் செல்கிறது.

ஆதிசேடன் இப்பெருமானை வழிபட்டு நோய் நீங்கியதை சேடச் சருக்கம் கூறும். இந்திரன் நிருபமுனிவருக்கு எதிராகத் தனது இந்திர பதவியைக் காப்பாற்றிக்கொள்ள இறைவனை வழிபட்டதையும், நிருபமுனிவருக்குக் கணநாதர் பதவி கிடைத்ததையும் இந்திரச் சருக்கம் குறிப்பிடுகிறது.

காஞ்சிமாநகர் வேதியன் ஒருவன், இவ்விறைவனை வழிபட்டு மகப்பேறு பெற்றதையும், மன்மதன் வழிபட்டு நோய் நீங்கிய செய்தியையும் இறுதியில் உள்ள மன்மதச் சருக்கம் உணர்த்துகிறது.

.. இப்புராணத்தில் காமீசம், வில்லமாநகரம் ஆகிய பெயர்கள், வில்லியனூருக்கு உரிய பெயர்களாகக் குறிப்பிடப்படுகின்றன.[3] காமீசர், நரசிங்கநாதர், வைத்தியநாதர், நடுவறிவார் முதலான பெயர்கள் இறைவனுக்கு உரியனவாகக் குறிக்கப்படுகின்றன.[4]

## பிள்ளைத்தமிழ்

அருணசலக்கவி என்பவரால், 'வில்லைமுத்துகுமாரர் பிள்ளைத் தமிழ்' என்றதொரு பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் ஒன்றும் இயற்றப்பட்டுள்ளது. இது வில்லியனூர் முருகன்மீது பாடப்பட்ட பிரபந்தம் ஆகும். இப்பிள்ளைத்தமிழ் கொண்ட பெருமான், சிவன் கோயிலின் முதற் பிரகாரத்தில் உள்ளார். இது பரிவார ஆலயம் என்பது இங்குக் குறித்துணரத்தக்கது.

பிள்ளைத் தமிழ் நூல், வில்லைப் புராணத்துக்குக் காலத்தால் பிற்பட்டது. இதனை இயற்றுவித்தவர் விசயராயர் என்னும் கார்காத்த வேளாளர் ஆவார்.

---

3. வில்லைப்புராணம், செய்யுள். 141, 390, 391, 433 & 434
4. வில்லைப்புராணம், செய்யுள். 288, 394 & 441

"பக்குவ மாகக் கவிநூறு செய்து பரிசுபெற
முக்கா ணமெதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போவெனும் லோபரைப் பாடி யலுத்துவந்த
குக்கலை யாண்டருள் வில்வ வனத்துக் குயிலம்மையே!"

என்ற தனிப்பாடலில்[5] வரும் வில்வவனம், நமது வில்லிய னூரைக் குறிக்கும். இங்குள்ள அம்மனின் பெயர் குயிலம்மை என்பதாலும், இப்பாடலில் குயிலம்மையே! என்று இறைவி குறிக்கப்படுவதாலும், வில்வவனம் என்பது, நமது வில்லியனூரைக் குறிக்கும் எனக் கருதப்படுகிறது.

## புராணத்தின் காலம்

தமிழகத்தில் தலபுராணம் இயற்றுகின்ற வழக்கம், முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திலேயே தொடங்கிவிட்டதாகத் தெரிகிறது. தலபுராணங்களுள் மிகவும் பழமையானது, இம்மன்னன் காலத்தில் எழுந்த கன்னிவன புராணம் என்பதாகும்.[6] அது திருப்பாதிரிப்புலியூரின் தலபுராணம் ஆகும்.

ஆனால், வில்லைப்புராணம் அத்தகைய பழமை உடையதாகத் தோன்றவில்லை. சகலாங்க சௌந்தரி வழிபாடு சருக்கத்தில், வில்லியனூரின் சிறப்புக்களைக் கூறப்புகுந்த ஆசிரியர், அங்குச் சைவமா மடங்கள் இருந்தனவாகக் கூறுகிறார்.[7]

வில்லியனூரில் சைவ மடங்கள் இருந்த செய்தியை அங்குள்ள இரண்டு சாசனங்களால் அறிகிறோம். அவ்விரண்டனுள் 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு, சைவ மடத்துக்கு நிலதானம் செய்யப்பட்டதைக் குறிப்பிடுகிறது.[8] மற்றொன்று மெய்ஞ்ஞான மாமுனிகள் என்பவரால் மடம் ஒன்று நிறுவப்பட்டதைக் குறிப்பிடுகிறது.[9] மடத்தின் தலைவர்களாக விளங்கியவர்கள் மெய்கண்டார் சந்தானத்தைச் சேர்ந்தவர்கள். 15-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர், இங்குச் சைவ மடங்கள் இருந்தனவாகக் கல்வெட்டுச் சான்றுகள் இல்லை.

---

5. தனிப்பாடல் திரட்டு, பாகம். II, செய்யுள். 281
6. S. I. I. Vol. VII. Nos. 752 & 753
7. வில்லைப்புராணம், செய்யுள். 125
8. A. R. E. 1936 – 37, No. 207
9. A. R. E. 1936 – 37, No. 206

இவற்றைக் கருத்திற் கொண்டால், வில்லிப்புராணம் குறிப் பிடும் சைவ மடங்கள், கி. பி. 15, 16-ஆம் நூற்றுண்டு வாக்கில், இங்கு நிலைபெற்றிருந்த மடங்களே யாகும். ஆகவே, வில்லிப் புராணம் கி. பி. 15-ஆம் நூற்றுண்டுக்குப் பின்னர் இயற்றப் பட்டமை இனிது புலனுகும். வில்லியனூரின் முற்பட்ட வாலாற்றை அறிந்து கொள்ள, மிகப்பிற்காலத்து நூலான வில்லிப்புராணச் செய்திகள் நமக்குத் துணை நிற்கமாட்டா.

## வரலாற்று மேலோட்டம்

திருவாமாத்தூர், வில்லியனூர் ஆகிய இரண்டு இடங்களில் உள்ள கல்வெட்டுகள், நமது வில்லியனூரின் பழமையை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணையாக விளங்குகின்றன.

முதலாம் இராசராச சோழன், மூன்றும் குலோத்துங்க சோழன், கோப்பெருஞ்சிங்கன், பராக்கிரம பாண்டியன், இராச நாராயணச் சம்புவராயன், விசயநகர வேந்தான அரியன உடை யார், இரண்டாம் விருபாட்சராயர், அச்சுததேவ மகாராயர், சதாசிவதேவ மகாராயர், ஸ்ரீரங்கதேவ மகாராயர், சாவனதேவ மகாராயர் ஆகியோரின் காலத்து இருபத்தொன்பது சாசனங்களில் வில்லியனூரைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன.

"ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூர்ச்சாலை கலமறுத்த கொராஜராஜ கெஸரிவந்மர்(க்)கு யாண்டு 13-ஆவது வாவலூர் நாட்டுத் தெவதானந் திருவாமாத்தூருடைய பரம சுவாமிகளுக்கு சொழ நாட்டு வடகரை நல்லாற்றூர் நாட்டு பிரம்மதெயம் விடெல்விடுகுச் சதுர்பெதி மங்கலமாகிய வில்லியநல்லூர் யாளுங்கனத்தாருள் அவிசாகை மஹாதெவர் மகன் கொவத்தனக்ரமவித்தன் இத் திருவாமாத்தூர் ஆழ்வார்க்கு சிறுகாலைச் ஸந்தியிலாடியருள னிர்படாதாது(ப்பால்) நித்தப்படி உழக்கு பாலா.. ஸபையொமும் (ஊரொ)முந் திருவுண்ணாழிகை யுடையொமும் கொண்ட பொன் முக்கழஞ்சு இது சந்திராதித்தவற் பந்மாஹெஸ்வர ரக்ஷை"

இக்கல்வெட்டு தென்னூர்க்காடு மாவட்டம், விழுப்புரம் வட்டம், திருவாமாத்தூர் அபிராமேசுவரர் கோயிலின் அர்த்த மண்டபத்து வடக்குச் சுவரில் உள்ளது.[10] முதலாம் இராசராச சோழனின் 13-ஆவது ஆண்டில் (கி. பி. 998) வரையப்பட்ட

---

10. S. I. I., Vol. VIII, No. 748 (432 of 1903)

இச்சாசனம், வில்லியனூரைப் பற்றிக் குறிப்பிடும் சாசனங்களில் மிகப் பழமையானது.

இக்கல்வெட்டுக் குறிப்பிடும் அறவோனின் பெயர் கோவர்த்தனக்கிரமவித்தன். இவன் அவிசாகை மகாதேவ பட்டனின் மகன். வில்லியனூர் ஆளுங்கணத்தாருள் இக்கிரமவித்தனும் ஒருவன். திருவாமாத்தூர் இறைவனுக்கு இவன் வழங்கிய பொற்கொடையைப் பற்றி இச்சாசனம் விளக்குகிறது. கிரமவித்தனின் ஊர், நமது வில்லியனூர் என்பதை,

'சோழ நாட்டு வடகரை நல்லாற்றூர் நாட்டு பிரம்மதேயம் விடேல்விடுகுச் சதுர்வேதிமங்கலமாகிய வில்லியநல்லூர்"

என்று வரும் சாசனத் தொடர் நமக்கு அடையாளம் காட்டுகிறது 'சோழநாட்டு வடகரை' என்பது, சிதம்பரத்திற்கு அண்மையில் ஓடும் வெள்ளாற்றுக்கு[11], வடக்கே உள்ள நிலப் பகுதியைக் குறிக்கும். இப்பகுதியில் அமைந்திருந்த நாடுகளில், நடுவில் நாடு, திருமுனைப்பாடி நாடு, வேசாலிப்பாடி நாடு, வாகூர் நாடு, மாத்தூர் நாடு, நல்லாற்றூர் நாடு, வாவலூர் நாடு முதலானவை குறிப்பிடத்தக்க நாடுகளாகும். பெரும்பான்மையான நாடுகள் இங்கு விரிவஞ்சி விடப்படுகின்றன.

இக்கல்வெட்டில் வரும் நல்லாற்றூர் என்பது, நல்லாத்தூர் என்னும் பெயருடன், வில்லியனூருக்குத் தென்மேற்கே 5 கி. மீ. தொலைவில் உள்ளது.[12] நல்லாற்றூர் நாட்டின் எல்லைக்குள் இருந்த ஊர்களில் வில்லியனூரும் ஒன்று. இனி,

"நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூரும் சேற்றூரும் நாரை யூரும்"

என்னும் தேவாரப் பதிகத்தில்[13] வரும் நல்லாத்றூர் என்பது, இவ்வூரினின்றும் வேறானது.[14] வில்லியனூருக்கு விடேல் விடுகுச்

---

11. பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம். III, பக்கம். 3
12. கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகளின் சமாதி இவ்வூரில் உள்ளது.
13. திருநாவுக்கரசர் தேவாரம், அடைவுத் திருத்தாண்டகம், பாடல். 4
14. A. R. E. 1926, No. 136

சதுர்வேதிமங்கலம் என்னும் வேறு பெயர் இருந்ததை, இச்சாசனத்தால் அறிகிறோம். அத்துடன், அதன் பழமையான பெயர் வில்லிய நல்லூர் என்றும் தெரிகிறது.

## விடேல் விடுகு

பல்லவருடைய ஆணைக்கு 'விடேல்விடுகு' என்று பெயர். 'விடேல் விடுகு என்னும் ஆணையும் நடாவி' என்று வரும் சாசனத் தொடர் ஒன்றால் இதனை அறியலாம். இப்பெயர், பின்னர் பல்லவர்களின் விருதுப் பெயராகவும் விளங்கியது.

சோழ மன்னர்க்கு அடங்கி ஒழுகிய குறுநில மன்னர்கள், சோழ மன்னர்களின் பெயர்களைத் தமது பெயருடன் இணைத்து வழங்கி வந்தமை போல, பல்லவப் பெருவேந்தர்க்கு அடங்கி ஒழுகிய குறுநில மன்னர்கள், விடேல் விடுகு என்னும் பல்லவரின் விருதுப் பெயரைத் தமது பெயருடன் புனைந்து கொண்டனர். இதனை 'விடேல்விடுகு முத்தரையன்,'[15] 'விடேல்விடுகு இளங் கோவரையன்'[16] என்னும் பெயர்களால் அறியலாம்.

## விடேல்விடுகுச் சதுர்வேதி மங்கலம்

பல்லவர் காலத்தில் சதுர்வேதிமங்கலங்களாகத் திகழ்ந்த ஊர்கள் பலவும், விடேல்விடுகுச் சதுர்வேதிமங்கலம் என்று பெயர் பெற்றிருந்தன.[17] இத்தகைய பெயர்கள், முற்பட்ட சோழர் காலத்துச் சாசனங்களில் காணப்படுவது இங்குக் குறிப்பிடத் தக்கது.[18] தெள்ளாறெறிந்த நந்திவர்மனின் சாசனம் ஒன்று, 'விடேல் விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதி மங்கலம்' என்னும் பெயரைக் குறிக்கிறது.[19] 'விடேல் விடுகுச் சதுர்வேதி மங்கலத்துத் திருவேள்விக்குடி மஹாதேவர்' என்று விளாக்குடிக் கல்வெட்டு கூறுகிறது.[20]

---

15. A. R. E. 1910, No. 81
16. A Mannual of the Pudukottai State, Vol. II, Pages. 51 & 61
17. A. R. E. 1912, No. 211
18. S. I. I., Vol. XIII, No. 346 & A. R. E. 1926, No. 133
19. S. I. I., Vol. III, Part. I, Page. 93
20. S. I. I., Vol. XIII, No. 346

பல்லவர் காலத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட சதுர்வேதி மங்கலம், பல்லவ அரசன் ஒருவனின் பெயரைப் பெற்றிருந்தது. பழைய ஊர் சதுர்வேதி மங்கலமாக மாற்றப்படும்போது, அதன் புதிய பெயருடன் பழம் பெயரையும் சேர்த்துக் குறிப்பது மரபாக இருந்துள்ளது. இதனை,

"இத்திருநந்தா விளக்கு முட்டாமை செலுத்துவோமானோம் வன்னிபெடாகிய ரணவிக்கிரமச் சதுர்வெதி மங்கலத்துச் சபையோம்"

எனவும்,

"காவிரிப்பாக்கமாகிய அவநிநாராயணச் சதுர்வெதி மங்கலத்துக் கீழ் வடசெரி எட்டுக்கூர்"

எனவும் வரும் பல்லவர் காலத்துச் சாசனங்களால் அறிகிறோம்.[21] மேற்கூறிய சான்றுகளால் 'விடேல்விடுகுச் சதுர்வேதி மங்கலம்' என்பது, பல்லவர் காலத்துப் பெயர் என்பது தெளிவாதலைக் காணலாம்.

முதலாம் ஆதித்த சோழன் காலத்திலேயே தொண்டை மண்டலத்தின் பெரும்பகுதி, சோழ மன்னரின் ஆட்சியின்கீழ் வந்துவிட்டது எனலாம். பல்லவ வேந்தர்களில் இறுதி அரசனை அபராசிதனின் ஆட்சியும், இக்காலகட்டத்தில் முற்றுப் பெறுகிறது.

எனவே, முதலாம் ஆதித்த சோழன் ஆட்சிக்கு (கி. பி. 871) முன்பே, அதாவது பல்லவர் காலத்திலேயே நமது வில்லியனூர், வில்லியநல்லூர் என்று பெயர் பெற்றிருந்தது. இதுவே இதன் பழமையான பெயர் ஆகும். பல்லவர்கள் வில்லியநல்லூருக்கு 'விடேல்விடுகுச் சதுர்வேதி மங்கலம்' என்று புதிய பெயர் இட்டு, அதனை அந்தணர்களுக்குப் பிரமதேய உரிமையாக வழங்கினராதல் வேண்டும். அக்காலம் முதல் இது 'வில்லியநல்லூரான விடேல் விடுகுச் சதுர்வேதிமங்கலம்' என்று அழைக்கப்பட்டது. தொடக்கத்தில் எடுத்துக்காட்டப்பட்ட, முதலாம் இராசராச சோழனின் திருவாமாத்தூர்க் கல்வெட்டு, இப்பெயரையே நமக்கு அறிமுகப் படுத்துகிறது.

அரசர்களின் ஆணைக்கு உட்பட்டு சிற்றூர்களைத் தமது பொறுப்பில் ஆள்வோர், ஆளுங்கணத்தார் என்று அக்காலத்தில் அழைக்

---

21. S. I. I., Vol. III, Part. I, Page. 95

கப்பட்டனர். வில்லியநல்லூர் தனி ஊராய்ச் சிறந்து விளங்கி, ஆளுங்கணத்தாரையும் பெற்றிருந்தது. இதனை 'வில்லியநல்லூர் ஆளுங்கணத்தாருள்' என்ற சாசனத் தொடர் உணர்த்துகிறது.

இதுகாறும் கூறிவந்த செய்திகளால், இற்றைக்கு ஏறத்தாழ 1100 ஆண்டுகளுக்கு முன்பே, நமது வில்லியனூர், வில்லியநல்லூர் என்ற பெயருடன், நல்லாற்றூர் நாட்டின் எல்லைக்குள் இருந்தமையைத் தெளிவாக அறிகிறோம்.

ஆதலின், 'இற்றைக்கு 900 ஆண்டுகளுக்கு முன்னர் வில்லியனூர்ப் பகுதி காடாக இருந்தது' என்று கூறும் செவிவழிச் செய்தியையும், 'தருமபாலச் சோழன் இவ்வூரை உண்டாக்கினன்' என்று கூறும் தலபுராணச் செய்தியையும் ஏற்றுக் கொள்வதற்கு இல்லை.

இக்காலத்து வழங்கும் வில்லியனூர் என்னும் பெயர், வில்லியநல்லூர் என்னும் முற்காலத்துப் பெயரின் மருவிய வழக்கு ஆகும். மாறாக, வில்வநல்லூர் என்னும் பெயர், அவ்வாறு மருவியதாகக் கூறுவது [22] ஏற்புடையது அல்ல. வில்வநல்லூர் என்னும் பெயர், தலபுராணம் தோன்றிய கி. பி. 15-ஆம் நூற்றாண்டுக்குப்பின் வழங்கிய பெயராகும்.

## மூன்றாம் குலோத்துங்கன்

முதலாம் இராசராச சோழனின் திருவாமாத்தூர்க் கல்லெழுத்துக்குப் பின்னர், வில்லியனூரில் உள்ள மூன்றாம் குலோத்துங்க சோழனின் சாசனத்தில்தான் அவ்வூரைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. [23] இவ்விரண்டு சாசனங்களுக்கும் இடைப்பட்ட காலம், ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் ஆகின்றன. நீண்ட இக்காலகட்டத்தில், நாட்டுப் பிரிவினைகளில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. மூன்றாம் குலோத்துங்கனின் 13-ஆவது ஆண்டில் (கி. பி, 1191) வரையப்பட்ட சாசனத்தின் கீழ்க்கண்ட பகுதி மிக இன்றியமையாதது.

"ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் கொனெரி மெல்கொண்டான் ஸ்ரீகுலொத்துங்க சொழதெவற்கு யாண்டு 13-ஆவது இராசராச வளநாட்டு மாத்தூர்நாட்டு ஒழுகறையான குலொத்துங்க

22. புதுவைச் செய்திகள், ஜனவரி – பிப்ரவரி. 1971, பக்கம். 16
23. S. I. I., Vol. VII, No. 816

சொழநல்லூர் பிடாகை வில்லியநல்லூர் வெறு பிறிந்த திருநிற்றுச் சொழநல்லூர் உடையார் திருக்காமிசுரமுடையார்க்கு"

"இராசராச வளநாட்டு மாத்தூர் நாட்டு ஒழுகறையான குலொத்துங்க சொழ நல்லூர் பிடாகை வில்லியநல்லூர் உடையார் திருக்காமிசுரமுடைய நாயனுர்க்கு வெண்டு நிமந்தங்களுக்கு இறுப்பதாக ஒழுகறையான குலொத்துங்க சொழநல்லூர் வெறு பிரிந்த திருநிற்றுச்சொழநல்லூர்"

"தெவதான இறையிலியாக வெறுபிறிந்த திருநிற்றுச்சொழ நல்லூர் தாம்பெற்ற நிர்நிலம் நாற்பத்து ஒன்பதிற்று வெலி நிலமும்"

முதலாம் இராசராசன் காலத்தில் (கி. பி, 998), நல்லாற்றூர் நாட்டின் எல்லைக்குள் இருந்த வில்லியனூர், மூன்றும் குலோத்துங் கன் காலத்தில் (கி. பி. 1191), மாத்தூர் நாட்டு எல்லைக்குள் இருந்த தாக இக்கல்வெட்டு உணர்த்துகிறது. இங்குக் குறிக்கப்பெறும் மாத்தூர், வில்லியனூருக்கு வடமேற்கே 5 கி. மீ. தொலைவில் உள்ளது. வில்லியனூர் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த கோனே ரிக்குப்பம் என்னும் சிற்றூர், இக்குலோத்துங்க சோழனின் 'கோனேரிமேல்கொண்டான்' என்னும் பட்டப் பெயரால் உண் டானதாக இருக்கலாம்.

## திருநீற்றுச் சோழநல்லூர்

மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் வில்லியனூருக்குத் 'திருநீற்றுச் சோழ நல்லூர்' என்று வேறு பெயர் இருந்துள்ளது. முதலாம் குலோத்துங்க சோழன் சிவபெருமான்மாட்டு எல்லையற்ற ஈடுபாடு கொண்டவன். சைவநெறியைப் போற்றி ஒழுகியவன். ஆதலின், இவன் திருநீற்றுச் சோழன்[24] எனவும், பரமேசுவரன் எனவும் அழைக்கப்பட்டான்.[25] இம்மன்னனின் பேரனை இரண்டாம் குலோத்துங்க சோழனும், தன்னைத் திருநீற்றுச் சோழன் என்று அழைத்துக்கொள்வதில் பெருமை அடைந் துள்ளான்.[26] இவ்விரண்டு குலோத்துங்கருள், முதலாம் குலோத் துங்கன் பெயராலேயே இவ்வில்லியனூர், திருநீற்றுச்சோழ நல்லூர் என்று பெயர் பெற்றதாகக் கருத இடமுளது.

---

24. S. I. I., Vol. VII, No. 538 & A. R. E. 1901, No. 312
25. S. I. I., Vol. I, No. 39
26. S. I. I., Vol. VII, No. 407

"ஒழுகரையான குலொத்துங்க சொழ நல்லூர் வெறு பிரிந்த திருநிற்றுச்சொழநல்லூர்"

என்னும் தொடரில் வரும் பிரிந்த என்னும் இறந்த காலச் சொல்லால், மூன்றும் குலோத்துங்கனுக்கு முன்பே இப்பெயர் இருந்துள்ளமை தேற்றம். ஒழுகரைக்குக் குலோத்துங்கசோழ நல்லூர் என்று புதிய பெயர் இடப்பட்ட காலத்திலேயே, வில்லிய னூருக்கும் இப்புதிய பெயர் இடப்பட்டிருத்தல் வேண்டும்.

## காலமும் பெயரும்

முதலாம் இராசராச சோழனின் ஆட்சிக் காலத்தில், சோழர் தம் ஆட்சிக்கு உட்பட்ட நாடுகள் முழுமையும் அளக்கப்பட்டன. இம் மன்னனுக்குப் பின்னர், ஆட்சி உரிமை பெற்ற சோழ மன்னர்கள் யாரும், இச்செயலை மீண்டும் செய்ததாகத் தெரியவில்லை. ஆனால், முதலாம் குலோத்துங்கன் காலத்தில் நாடு முழுமையும் மீளவும் அளக்கப்பட்டது. இப்பணி கி. பி. 1086-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்று, இரண்டு ஆண்டுகளில் முடிவுற்றது.

திருவேகம்பமுடையானை உலகளந்த சோழப் பல்லவரையன், குளத்தூருடையான் உலகளந்தானை திருவரங்கத் தேவன் ஆகிய இரண்டு அதிகாரிகள் 27 குலோத்துங்கனின் ஆணைக்கிணங்க இப் பணியைச் செய்து முடித்தனர்.

இவ்வாறு நாடு முழுவதும் அளக்கப்பட்டபோது, ஏற்கனவே இருந்த வளநாடுகள், நாடுகள், ஊர்கள் ஆகியவற்றின் பழைய எல்லைகள் சிறிதே மாற்றியமைக்கப்பட்டன. அவைகளுள்ளும் சில புதிய பெயர்களைப் பெற்றன. இக்காலகட்டத்தில்தான் 'விடேல் விடுகுச் சதுர்வேதி மங்கலம்' என்று பல்லவர் காலத்துப் பெயரைப் பெற்றிருந்த வில்லியநல்லூர், முதலாம் குலோத்துங்க சோழனின் சிறப்புப் பெயரால், திருநீற்றுச் சோழநல்லூர் என்று அழைக்கப்பட்டது. அதே காலத்தில், நல்லாற்றூர் நாட்டின் எல் லைக்குள் இருந்த வில்லியநல்லூர், மாத்தூர் நாட்டின் எல்லையைச் சார்ந்ததாகக் குறிக்கப்பட்டது.

முதலாம் இராசராசனுக்குப் பின்னரும், மூன்றும் குலோத்துங் கனுக்கு முன்னரும் ஆண்ட சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் நமக்குக் கிடைக்காத காரணத்தால், கிடைத்தவற்றைக்கொண்டு மேற்கூறிய முடிபுக்கே வரவேண்டியவராகிறோம்.

---

27. பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம். II, பக்கம். 46

## கோப்பெருஞ்சிங்கன்

பல்லவர்த் தோன்றலான கோப்பெருஞ்சிங்கனின் மூன்று சாசனங்கள் வில்லியனூரில் காணப்படுகின்றன.[28] இக்கல்வெட்டுகளில் எல்லாம் ஊரின் பெயர் வில்லியநல்லூர் என்றே காணப்படுகிறது. ஒழுகரையைச் சேர்ந்த சிற்றூராகக் குறிக்கப்படவில்லை.

## பாண்டியன் காலம்

பராக்கிரம பாண்டியனின் இரண்டு சாசனங்கள் வில்லியனூரில் காணப்படுகின்றன.[29] பாண்டிய மன்னர்கள் தமக்குள் மாறி மாறிப் புனைந்துகொள்ளும் சடையவர்மன், மாறவர்மன் என்னும் இருவகையான பட்டப் பெயர்களுள், இம்மன்னனுக்கு உரியது எது என்று தெரியவில்லை. ஆயினும், சடையவர்மன் என்னும் பட்டம் உடைய பராக்கிரம பாண்டியனின் சாசனம் எதுவும் இப் பகுதியில் காணப்படாமையால், வில்லியனூரில் உள்ள சாசனங்கள் மாறவர்மன் என்னும் பட்டம் உடைய பராக்கிரம பாண்டியனின் காலத்தனவாகக் (கி. பி. 1333 – 1334) கருதப்படுகின்றன.[30]

"ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மாத்தூர் நாட்டு ஒழுகரையான குலோத்துங்க சோழ நல்லூர் பிடாகை வில்லிய நல்லூர்"

இவ்வாறு மேற்கூறிய பாண்டிய மன்னனின் சாசனங்களிலும், ஊரின் பெயர் வில்லியநல்லூர் என்றே குறிக்கப்படுகிறது. இங்கே வில்லியனூர் ஒழுகரையைச் சேர்ந்ததாகக் கூறப்படுதல் கருதத்தக்கது. அது ஆட்சி மாற்றத்தால் உண்டான நிலையாக இருக்கலாம். இனிவரும் அனைத்துச் சாசனங்களிலும் வில்லிய நல்லூர் என்றே குறிக்கப்படுகின்றன.

## சம்புவராயன் காலம்

முஸ்லிம்களின் ஆதிக்கத்திலிருந்து தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியை மீட்டு, அங்குத் தனி ஆட்சி நிறுவியவன் ஏகாம்பரச் சம்புவராயன் என்பவன். அவனுடைய மகனை இராசநாராயணச் சம்புவராயன் காலத்து (கி. பி. 1339 – 1363) மூன்று சாசனங்கள்

---

28. A. R. E. 1936 – 37, Nos. 185, 186 & 199
29. A. R. E. 1936 – 37, Nos. 187 & 189
30. A. R. E. 1936 – 37, Part. II, Para. 45

இங்கே உள்ளன.[31] வடார்க்காடு மாவட்டம், வேலூருக்கு அண்மையில் உள்ள விரிஞ்சிபுரம் என்னும் ஊர், இவனுக்குத் தலைநகராய் இருந்தது.[32] இம்மன்னனின் வில்லியனூர்ச் சாசனங்களில், ஒழுகரையின் பெயர், குலோத்துங்கசோழநல்லூர் என்று குறிக்கப்படுகிறது.

## சாளுவமங்குதேவன்

மகாமண்டலேசுவரன், சாளுவமங்குதேவ்மகாராசன், திரிபுவனராய ஸ்தாபனச்சார்யன், சம்புவராய ஸ்தாபனச்சார்யன் என்றெல்லாம் புகழ்ந்துரைக்கப்படும் மங்குதேவன், விசயநகர வேந்தனை இரண்டாம் கம்பணின் படைத்தலைவர்களுள் ஒருவன்.[33] இவனுடைய கல்வெட்டிலும் (கி. பி. 1370) இவ்வூரின் பெயர் வில்லியநல்லூர் என்றே குறிக்கப்பெறுகிறது.[34]

## அரியன உடையார் (ஹரிஹரன்)

முதலாம் புக்கனின் மகனை அரியன உடையார், கி. பி. 1377 முதல் 1404 முடிய, விசயநகர வேந்தராக ஆட்சி செலுத்தினர்.[35] இவர் காலத்திய மூன்று சாசனங்கள் வில்லியனூர்ச் சிவன் கோயிலில் காணப்படுகின்றன.[36] இவைகளும் இவ்வூரின் பெயரை வில்லியநல்லூர் என்றே சுட்டுகின்றன.

## இரண்டாம் விருபாட்சராயர்

இவர் வீரப்பிரதாபதேவமகாராயரின் மகன். கி. பி. 1485 முடிய 20 ஆண்டுகள் விசய நகர மன்னராக இருந்தவர். இறுதியில் தன் மூத்த மகனால் கொலை செய்யப்பட்டார். இவருடைய கல்வெட்டும்,

---

31. A. R. E. 1936 - 37, Nos. 188, 190 & 192
32. மதுரை நாயக்கர் வரலாறு, பக்கம். 51
33. Sources of Vijayanagara History, Page. 90 & A. R. E. 1936 - 37, Part. II, Para. 52
34. A. R. E. 1936 - 37, No. 191
35. Further Sources of Vijayanagara History, Vol. I, Page. 80
36. A. R. E. 1936 - 37, Nos. 183, 184 & 194

"ஜெயங்கொண்ட சோழமண்டலத்து மாத்தூர் நாட்டு ஒழுகரைப்பற்று வில்லியநல்லூர்"

என்று இதன் பெயரை வில்லியநல்லூர் என்றே கூறுகிறது.[37]

## அச்சுத தேவர்

இவர் கி. பி. 1530 முதல் 1542 முடிய 12 ஆண்டு காலம் ஆட்சி செலுத்திய விசயநகர வேந்தராவர். இவருடைய ஆட்சி கொடுமையானது. மக்கள் இவரைப் பெரிதும் வெறுத்ததாகத் தெரிகிறது.[38] இவர் காலத்திய மூன்று சாசனங்கள் வில்லியனூரில் உள்ளன.[39]

"மாத்தூர் நாட்டு ஒழுகரைப்பற்று வில்லியனூர் திருக்காமேசுரமுடைய நாயனுர்க்கு"

என்று வரும் அம்மன்னனின் சாசனப் பகுதி இங்குக் கருதத்தக்கது. பல்லவர் காலம் தொடங்கி இரண்டாம் விருபாட்சராயர் காலம் முடிய வில்லியநல்லூர் என்று குறிக்கப்பட்ட இவ்வூர், இம்மன்னன் காலத்தில் வில்லியனூர் என்று குறிக்கப்படுகிறது.[40]

எனவே, இம்மன்னன் காலம் முதல் வில்லியநல்லூர் என்னும் பழம் பெயர், வில்லியனூர் என்று மருவி வழங்கத் தொடங்கி, அதுவே இன்றுவரை நிலைபெற்றுவிட்டது. இதுகாறும் காட்டிய சான்றுகளால் இதனை நன்கு உணரலாம்.

## சதாசிவரும் ஸ்ரீரங்கரும்

அச்சுததேவ மகாராயர் காலத்துச் சாசனம் கூறுவது போலவே, சதாசிவ தேவர் காலத்துச் சாசனம் ஒன்றும் வில்லியனூர் என்று கூறுகிறது.[41] கி. பி. 1575-ஆம் ஆண்டில் வரையப்பட்ட ஸ்ரீரங்கதேவரின் சாசனம் ஒன்று வில்லியனூரில் காணப்படுகிறது. அது வில்லியனூர் என்னும் மருவிய பெயரைக் குறிக்

---

37. S. I. I., Vol. VII, No. 815
38. Studies in the History of the Third Dynasty of Vijayanagara, Page. 75
39. A. R. E. 1936 – 37, Nos. 181, 182 & 201
40. A. R. E. 1936 – 37, No. 181
41. A. R. E. 1936 – 37, No. 193

காமல், வில்லியநல்லூர் என்று, அதன் பழம் பெயரையே குறிக்கிறது, [42]

## பெயர்ப் பட்டியல்

| அரசன் | ஆண்டு | பெயர் |
|---|---|---|
| பல்லவர் | கி. பி. 8-ஆம் நூற்றாண்டு | வில்லியநல்லூர் & விடேல் விடுகுச் சதுர்வேதிமங்கலம் |
| இராசராசன் I | கி. பி. 998 | ,, |
| குலோத்துங்கன் III | கி. பி. 1193 | வில்லியநல்லூர் & திருநீற்றுச் சோழநல்லூர் |
| கோப்பெருஞ்சிங்கன் | கி. பி. 1248 | வில்லியநல்லூர் |
| பராக்கிரம பாண்டியன் | கி. பி. 1333 | ,, |
| இராசநாராயணன் | கி. பி. 1351 | ,, |
| சாளுவ மங்கு தேவன் | கி. பி. 1370 | ,, |
| அரியன உடையார் | கி. பி. 1379 | ,, |
| விருபாட்சராயர் | கி. பி. 1472 | ,, |
| அச்சுத தேவ மகாராயர் | கி. பி. 1537 | வில்லியனூர் |
| சதாசிவ தேவ மகாராயர் | கி. பி. 1550 | ,, |
| ஸ்ரீரங்கதேவர் | கி. பி. 1575 | வில்லியநல்லூர் |

### பெயர்க் காரணம்

"வில்ல மாலூரமே கூவிள மிவை
வில்வப் பேரே"

என்பது சூடாமணி நிகண்டு. ஆதலின், வில்வம் என்ற சொல் அதனை உடைய மரத்தைக் குறிக்கும். வில்லைப்புராணம் கூறும்

42. A. R. E. 1936 – 37. No. 198

வில்லபுரி, வில்லமாநகரம் முதலான பெயர்கள் எல்லாம், வில்லியனூரின் தலவிருட்சமான வில்வமரத்தை அடிப்படையாகக் கொண்ட பெயர்கள் ஆகும். பல்லவர் காலத்து வில்லியனூருக்கும் புராணம் கூறும் மேற்காட்டிய பெயர்களுக்கும் தொடர்பு ஏதுமில்லை.

நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னர், நமது தமிழகம் காடுகள் மலிந்த நாடாக இருந்தமையைப் பழந்தமிழ் இலக்கியங்களால் அறிகிறோம். சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

"காடு கொன்று நாடாக்கி
குளம்தொட்டு வளம் பெருக்கி"

செம்மைப்படுத்திய வேந்தனாகக் காட்டுவர். 43

## வில்லியர்-வேடர்

காடுகள் மண்டிய நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களுக்குத் துணையாகவும், அவர்தம் தொழிலுக்கு ஏற்றனவாகவும் விளங்கிய கருவிகள் வில்லும் வேலுமேயாகும். வில்லாளுதலில் வல்லவராய் விளங்கியமை பற்றி, இவர்கள் வில்லோர் என்று அழைக்கப்பட்டனர். வேட்டையாடி உணவு கொண்டமைபற்றி, இவர்கள் வேடர்கள் எனவும் பெயர் பெற்றனர்.

"கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்"

எனவும், 44

"அள்ளல் ஆடிய புள்ளி வடுக்கலை
விளையம்பின் வில்லோர்"

எனவும், 45

"வில்லுடை விளையர்"

எனவும், 46

"வடிநவில் அம்பின் வில்லோர்"

எனவும், 47

---

43. பட்டினப்பாலை, அடிகள். 283 & 285
44. திருமுருகாற்றுப்படை, அடி. 194
45. நற்றிணை, செய்யுள். 2
46. குறுந்தொகை, செ. 272
47. புறநானூறு, செ. 168

"பல்லா விளநிரை தழீஇய வில்லோர்"

எனவும் [48] இவர்களைச் சங்க இலக்கியங்கள் நமக்கு அடையாளம் காட்டுகின்றன. கானகத்து இடையே நிலைபெற்றிருந்த இவர்களின் குடியிருப்பு,

"வில்லோர்குறும்பு" [49]

"கொடுவில் எயினக் குறும்பு" [50]

என்றெல்லாம் பெயர் பெற்றிருந்தன. பிற்காலத்தில் விற்படை வீரர்கள் தங்கி இருந்த அரணும்

"வில்லோர் குறும்பு"

என்று பெயர் பெற்றதாக அறிகிறோம். [51]

## வேட்டுவத் தொழில்

மரைபிரித் துண்ட நெல்லி வேலிப்
பரலுடை முன்றி லங்குடிச் சீறூர்
எல்வடிப் படுத்த கல்லாக் காட்சி
வில்லுழு துண்மார்

என்று புறப்பாடலும் [52]

"நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கண் கானவர் கடறுகூட் டுண்ணும்
அருஞ்சுரம்"

என்று பெரும்பாணாற்றுப்படையும், [53]

'கானவன்,
வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை"

என்று நற்றிணையும் [54] இவர்களின் வாழ்க்கை முறையை நமக்குப்

---

48. புறநானூறு, செ. 269
49. அகநானூறு, செ. 261
50. பெரும்பாணாற்றுப்படை, அடி. 129
51. புறப்பொருள் வெண்பாமாலை, செ. 66
52. புறநானூறு, செ. 170
53. பெரும்பாணாற்றுப்படை, அடிகள். 115 - 117
54. நற்றிணை, செய்யுள். 336

படம்பிடித்துக் காட்டுகின்றன. மலையும் மலைசார்ந்த நிலமுமான குறிஞ்சி நிலத்திலும், காடும் காடுசார்ந்த நிலமுமான முல்லை நிலத்திலும் இவர்கள் வாழ்ந்தனர். ஆயினும், முல்லை நிலத்திலேயே இவர்கள் பெருவாரியாக நிலைத்திருந்தனர். அந்தந்த நிலத்தின் ஒழுகலாற்றின்படி இவர்கள் கானவர் எனவும், எயினர் எனவும் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர். என்றாலும், இவர்களின் வாழ்க்கை முறை ஒன்றாகவே இருந்துள்ளது.

## சிற்றரசர்

இத்தகைய வேட்டுவக் குடியில் தோன்றி வேந்தனாய் விளங்கியவனும், கடைஏழு வள்ளல்களில் ஒருவனாய்ப் போற்றப்பெறுகின்றவனும் ஆகிய பேகன் என்பவன்,

"செல்வத் தோன்றல் ஓர்வல்வில் வேட்டுவன்"

என்று குறிக்கப்படுகிறான். 55

தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த திண்டிவனமும், அதனைச் சார்ந்த பகுதியும், சங்க காலத்தில் ஓய்மான் நாடாக விளங்கிற்று. இதனைக் கல்வெட்டுகளும் உறுதி செய்கின்றன. 56 அக்காலத்தில் அப்பகுதியில் இருந்த 'ஓய்மான் வில்லியாதன்' என்னும் குறுநில மன்னனை, நன்னாகனார் என்னும் புலவர் புகழ்ந்து பாடியதைப் புறப்பாடலால் அறிகிறோம். 57

## வில்லியர்கள்

கானவர், வேட்டுவர், எயினர் என்னும் பழமையான பெயர்கள் சிறிது சிறிதாக மறைந்து, அனைவரும் வில்லோடு தொடர்புடைய காரணம் பற்றி, வில்லியர் என்னும் பெயரால் பிற்காலத்தில் அழைக்கப்பட்டனர். தொண்டை மண்டலத்தில் குறிப்பாகச் செங்கற்பட்டு, தென் ஆர்க்காடு மாவட்டங்களில், இவர்கள் இன்றும் வில்லியர்கள் என்றே குறிக்கப்படுகின்றனர். அன்றியும் புதுவையுடன் பல்லாற்றானும் வரலாற்றுப் பிணைப்புடைய செஞ்சிப் பகுதியில், இவர்கள் பெருமளவில் வாழ்கின்றனர். நீலகிரி இரு

---

55. புறநானூறு, செய்யுள். 140
56. S. I. I., Vol. VII. No. 824 & A. R. E. 1919, No. 85
57. புறநானூறு, செய்யுள். 379

எரைக் காட்டிலும், வில்லியர்கள் நாகரிகத்தில் மேம்பட்டவர் கள். [58]

## புலியொடு பொருதோர்

புலியோடு போரிட்டு இறந்துபோன வில்லியன் ஒருவனைப் பற்றிக் கோவிலூர்ச் சாதனம் ஒன்று குறிப்பிடுகிறது.[59] புலியோடு போரிட்ட மற்றுமொரு வில்லியனின் பெயர், அபிமானமுத்தரையன் மகன் மச்சான் என்று, ஆந்திர நாட்டுக் கல்லெழுத்து ஒன்று கூறுகிறது. [60]

## வில்லியநல்லூர்

புதுவை மாநிலத்தில் உள்ள நமது வில்லியனூர், நெடுங்காலத் துக்கு முன்பு, வில்லியர்கள் சேர்ந்து வாழ்ந்த ஊரேயாகும். முதன்முதலில் அது வில்லியரின் குடியிருப்பாக இருந்தமையின் வில்லியநல்லூர் எனப்பட்டது. வில்லோர்க் குறும்பாகத் தோன்றிய இச்சிறிய குடியிருப்பு, ஏறத்தாழ கி. பி. 5-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் வளர்ந்து, பல இனத்தவரும் வாழ்கின்ற பேரூராயிற்று. ஆயினும், அது வில்லியநல்லூர் என்னும் காரணப் பெயராலேயே அழைக்கப்பட்டது. இவ்வில்லிய நல்லூரைக் காஞ்சிப் பல்லவர் கள், தமது ஆட்சிக் காலத்தில் 'விடேல்விடுகுச் சதுர்வேதி மங்கலம்' என்று புதியதொரு பெயரிட்டு, அந்தணர்களுக்குப் பிரமதேய உரிமையாக வழங்கினர்.

வில்லியநல்லூர் என்னும் இப்பழம் பெயர் கி. பி. 16-ஆம் நூற்றாண்டுவரை நிலைத்திருந்தது. அச்சுததேவ மகாராயர் காலம் முதல், அது வில்லியனூர் என்று மருவி வழங்கத் தொடங்கி இன்றுவரை வழங்குகிறது. எனவே, வில்லைப்புராணம் கூறும் வில்லபுரி, வில்லமாநகரம் என்பவை பழமையான பெயர்கள் அல்ல என்பது தேற்றம்.

---

58. ( i ) Madras District Gazetteers, South Arcot (1962) Page. 158
( ii ) Castes and Tribes of Southern India, Vol. VII. Page. 405
(iii) அபிதான சிந்தாமணி, பக்கம். 1473

59. A. R. E. 1921, No. 348

60. A. R. E. 1931 – 32. No. 205

### வில்லியனூர்கள்

இனி, தென்னார்க்காடு மாவட்டம், கடலூரில் இருந்து சிதம்பரம் செல்லும் பெருவழியில், புதுச்சத்திரம் என்னும் ஊருக்கு மேற்கே ஒரு கி. மீ. தொலைவில் வில்லியநல்லூர் என்னும் பெயருடைய ஊர் ஒன்று உள்ளது. விழுப்புரத்திற்குத் தெற்கே பஞ்சவன்மாதேவி என்னும் ஊருக்கு அணித்தாக, வில்லியனூர் என்னும் பெயரில் மற்றுமொரு ஊர் உண்டு. இவை இரண்டும் வெவ்வேறு நாடுகளைச் சார்ந்திருந்த ஊர்களாகும். ஆதலின், அவை இரண்டும் நமது நல்லாற்றூர் நாட்டு வில்லியநல்லூரினின்றும் வேறானவையாகும். பெயர் ஒப்புமை கருதி இவை அனைத்தையும் ஒன்றெனக் கருதுதல் ஆகாது.

## சிவன் கோயில்

வில்லியனூரில் உள்ள சிவன் கோயில் 3.6 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. கருவறையும் அர்த்த மண்டபமும் சேர்ந்து 10.8 மீ. நீளத்தில் கட்டப்பட்டுள்ளது. கருவறையில் உள்ள இலிங்கம் 2 அடி உயரமுடையது.

### இலிங்கம்

மலை உச்சியிலிருந்து அல்லது ஆற்றங்கரையிலிருந்து எடுக்கப் பட்ட வெண்மையான தூய்மையான களிமண்ணுடன் பால், தயிர், நெய், பால்மரப் பட்டைகள், சந்தனக் குழம்பு, பாதரசம் முதலான இன்னபிற பொருட்களையும் வேண்டிய அளவு சேர்த்து, நன்கு பிசைந்து, இரண்டு வாரங்கள் அல்லது ஒரு திங்கள் சென்ற பின்னர், ஆகமத்தில் விதிக்கப்பட்ட வடிவில், இலிங்கமாக உரு வாக்கப்படும் இலிங்கம் 'மிரின்மயலிங்கம்' என்று காமிகாகமம் கூறுகிறது. 61 இவ்வகை இலிங்கம், மண்ணினால் பக்குவமாக உரு வாக்கப்படும் காரணம் பற்றி, பக்குவசைதகலிங்கம் எனவும் குறிக்கப்பெறும்.

வில்லியனூர்ச் சிவன் கோயிலில் மூலவராக நிறுவப்பட்டுள்ள இலிங்கம், மேற்கூறியவாறு களிமண்ணால் உருவாக்கப்பட்ட இலிங்க மாகும். காமிகாகம விதிப்படி இயற்றப்பட்டதால், இவ்விறைவன் திருக்காமீசர் என்று அழைக்கப்பட்டார்.

---

61. Elements of Hindu Iconography, Vol. II, Part. I, Page. 76

## மேல் பூச்சு

களிமண்ணால் நிறுவப்பட்டுள்ள இந்த இலிங்கத்தின்மீது, முற்காலத்தில் புனுகு எண்ணெய் பூசிவந்ததாக அறிகிறோம்.[62] மண் பகுதி கரைந்துவிடாவண்ணமும், மேன்மேலும் இறுகும் பொருட்டும் இவ்வாறு செய்தனர்போலும். இலிங்கத்தின் மீது புனுகு நெய் பூசும் வழக்கம், தொன்றுதொட்டு நம்மனோர் கைக்கொண்ட மரபாகும். இதனை,

"அகில் அரைக் கழஞ்சும் கஸ்தூரி மஞ்சாடியும் மிரண்டு மாவும் புழுகுநெய் யிரண்டு மஞ்சாடியும்"

என்று வரும் கல்வெட்டால் அறிகிறோம்.[63] இக்காலத்தில் வில்லியனூர் இறைவனுக்குப் புனுகுநெய் பூசும் வழக்கத்துக்கு மாறாகச் சாம்பிராணித் தைலம் பூசுவதாகக் கேள்விப்படுகிறோம். பன்னூறு ஆண்டுகளாக இவ்வாறு புனுகு நெய்யும் தைலமும் பூசப்பெற்று வந்தமையால், அப்பூச்சு இலிங்கத்தின் மீது தேனடை போல ஒட்டியுள்ளது. சில இடங்களில் அது உரிந்தும் உதிர்ந்தும் காணப்படுகிறது.

## குவளைச்சாத்து

வில்லியனூர் இலிங்கத்தின் மீது குவளை சாத்துகின்ற வழக்கம் பின்பற்றப்படுகிறது. திருமுழுக்காட்டு முதலான அனைத்தும் குவளையின் மீதே நிகழ்த்தப் பெறுகின்றன. இவை எல்லாம் உள்ளிருக்கும் மண்ணாலான இலிங்கத்துக்குப் போதிய பாதுகாப்பாகும். திருஞானசம்பந்தர் பாடியருளிய அம்பர் மாகாளத்து இறைவன், சிறிய அமைப்புடைய பாணலிங்கம் ஆகும். அங்கும் இவ்வாறே குவளை சாத்தும் மரபு பின்பற்றப்படுகிறது.

## இறைவனின் பெயர்

மூன்றும் குலோத்துங்கன் காலம் முதல்தான் கல்வெட்டின் அடிப்படையில், இறைவனின் பெயர் இன்னதென அறிய முடிகிறது. குலோத்துங்கன் III, சாளுவ மங்குதேவன், அரியன உடையார், விருபாட்சராயர் II, அச்சுததேவராயர், சாவனதேவராயர் ஆகியோர் காலத்துச் சாசனங்கள்,

---

62. Census of India. 1961, Vol. XXV, Part. II, Page. 68
63. S. I. I., Vol. III, Part. II, Page. 187

'திருக்காமீசுரமுடையார்'

எனவும், அச்சுததேவராயர், ஸ்ரீரங்கதேவர் ஆகியோர் சாசனங்கள்,

'திருக்காமியப்பர்'

எனவும், 17, 18-ஆம் நூற்றுண்டுகளைச் சார்ந்த இரண்டு கல்வெட்டுகள் முறையே,

'திருக்காமீசுரமுடைய சுவாமியார்'

'திருக்காமி ஈஸ்வரஸ்வாமி,'

எனவும் இறைவனின் பெயர்களைக் குறிப்பிடுகின்றன. இப்பெயர்களில் திருக்காமீசுரமுடையநாயனுர் என்ற பெயரே பெருவழக்காய் இருந்துள்ளது. காமீசுவரம் என்பது கோயிலின் பெயராகவும், அக்கோயிலை உடையவர் திருக்காமீசுரமுடையார் எனவும் வழங்கப் பட்டுள்ளது. கல்வெட்டுக் குறிப்பெதுவும் நமக்குக் கிடைக்காததால், அம்மனைப் பற்றி இங்கு ஆராயப் புகவில்லை.

## கொடைகள்

திருக்காமீசுரமுடைய நாயனுருக்குப் பல்வேறு காலங்களில் அரசர்களாலும், அதிகாரிகளாலும், தனிப்பட்டவர்களாலும் தேவதான நிலங்கள் வழங்கப்பட்டுள்ளன. திருமடைவிளாகம், திருக்குளம், திருநந்தவனம் ஆகியவற்றுக்கும், கோயிலைச் சார்ந்த நத்தம், நத்தத்தைச் சார்ந்த கொல்லை நிலம் ஆகியவற்றுக்கும் 10 வேலி நிலம் இருந்த செய்தியை மூன்றும் குலோத்துங்க சோழனின் கல்வெட்டால் அறிகிறேம்.

ஆண்டுதோறும் 2500 கலம் நெல் அல்லது 312½ மாடை (பொன்) வரி செலுத்துவதற்கு உரிய நூற்று எண்பத்து ஏழே மூன்று மாக்காணி அளவுடைய தேவதான நிலங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டதாகவும் அம்மன்னனின் சாசனம் கூறுகிறது. [64]

இராச நாராயணச் சம்புவராயன் காலத்தில், மோசுகுளத்தூர் கருப்புழான் அரையன் திருமுண்டமலகியானுன வல்லவதரையன் என்பவனும், மோசுகுளத்தூர் கருப்புழான் அரையன் மணிகண்டனுன பல்லவரையன் என்பவனும் முறையே 335 குழி நிலமும், 500 குழி நிலமும் இறைவனுக்கு விளக்குத் தானமாக வழங்கி

64. S. I. I., Vol. VII. No. 816

யுள்ளனர்.[65] இம்மன்னன் காலத்தில் 22! வேலி தேவதான நிலங்களுக்கு வரியினின்றும் விலக்களிக்கப்பட்டது.[66]

மேற்கூறிய இரு கொடையாளர்களும் வாழ்ந்த மோசுகுளத்தூர் என்னும் சிற்றூர், இன்று மோட்சகுளம் (மோசகுளம்) என்ற பெயருடன் மடுக்கரை என்னும் ஊரிலிருந்து மேற்கே 2.5 கி. மீ. தொலைவில் உள்ளது.

சாளுவமங்குதேவன் கி. பி. 1370-ஆம் ஆண்டில், 12 மா அளவுள்ள நிலங்களை இவ்விறைவனுக்குத் தேவதான இறையிலியாகக் கொடுத்துள்ளான்.[67] திருநுந்தாவிளக்கு பூமாலைகள், திருமஞ்சன நீர் ஆகியவற்றுக்குத் தாயப்பன் என்பவன் நிலதானம் செய்துள்ளதைச் சாசனம் ஒன்றால் அறிகிறோம்.[68]

கி. பி. 1379-ஆம் ஆண்டில் உழுந்தை வாணிகனை அரையன் மலைப்பிள்ளை என்ற தென்னாட்டரையன், விளக்குத் தானமாக 533 குழி நிலங்களை விலைக்கு வாங்கி, தேவதானமாகக் கொடுத்துள்ளான்.[69] இக்கொடையாளன் வாழ்ந்த உழுந்தை என்னும் ஊர், இப்போது தென்னார்க்காடு மாவட்டத்தில் உளுந்தூர்ப் பேட்டை என்னும் பெயருடன் உள்ளது.

## தேவதான ஊர்கள்

இரண்டாம் விருபாட்சராயர் காலத்தில் (கி. பி. 1472) கட்டாரிசாளுவ நரசிங்க உடையார் என்பவரால், உலகுய்யவந்த சோழநல்லூர் என்னும் பெயருடைய வண்ணாரக்கொல்லை, தேவதானமாகக் கொடுக்கப்பட்டது.[70] அச்சுததேவராயர் காலத்தில் (கி. பி. 1539) வண்ணத்தான்பட்டு, செங்கழுநீர்ப்பள்ளம் என்னும் பெயர்களை உடைய நிலங்களும் தேவதானங்களாக விடப்பட்டன.[71]

---

65. A. R. E. 1936–37, Nos. 188 & 190
66. A. R. E. 1936–37, No. 192
67. A. R. E. 1936–37, No. 191
68. A. R. E. 1936–37, No. 202
69. A. R. E. 1936–37, No. 184 & Part. II, Para. 53
70. S. I. I., Vol. VII, No. 815
71. A. R. E. 1936–37, No. 181

வண்ணாக்கொல்லை, புத்துமான்பட்டு, பிறையூர், வண்ணக்கன் பட்டு, மருந்தமங்கலமுடையான்பட்டு ஆகிய தேவதான ஊர்களுக் கும், இன்னபிற நிலங்களுக்கும் சதாசிவதேவராயர் காலத்தில் (கி. பி. 1550) வரிவிலக்கு அளிக்கப்பட்டதைச் சாசனத்தால் உணர்கிறோம்.[72]

இங்குக் குறிக்கப்பட்ட ஊர்களில் வண்ணாக்கொல்லை என்னும் ஊருக்கு, உலகுய்யவந்த சோழநல்லூர் என்னும் பெயர் சாசனத் தில் காணப்படுகிறது. உலகுய்யவந்த சோழன் என்பது, கலிங் கத்துப் பாணியால் அறியப்படுகின்ற முதலாம் குலோத்துங்க சோழனின் சிறப்புப் பெயர் ஆகும்.[73] வில்லியனூருக்குத் தெற்கே உள்ள செஞ்சி ஆற்றின் தென்கரையில், உலகுய்யவந்த சோழ நல்லூர் அமைந்திருந்ததாகக் குறிப்பால் அறிகிறோம். அது இன்று வண்ணாக்கொல்லை என்னும் பெயருடன் விளைநிலமாக உள்ளது.

வண்ணத்தான்பட்டு, வண்ணக்கன்பட்டு ஆகிய இரண்டு ஊர் களும் ஒரே ஊரைக் குறிக்கும் வெவ்வேறு பெயர்களாதல் வேண்டும். இது வில்லியனூருக்கு வடமேற்கே 12 கி. மீ. தொலைவில் உள்ள வம்பப்பட்டு, வண்ணத்தான் பாளையம் ஆகிய இரண்டு ஊர்களில் ஒன்றாக இருக்கலாம். புத்துமான்பட்டு என்பது வில்லிய னூருக்கு வடக்கே 12 கி. மீ. தொலைவில் புத்துப்பட்டு என்ற பெய ருடன் உள்ளது. பிறையூர் என்பது வடமேற்கே 2 கி. மீ. தொலை வில் பொறையூர் என்னும் பெயருடன் உள்ளது.

## விழாக்கள்

பராக்கிரம பாண்டியனின் காலத்தில், வில்லியனூர் இறை வனுக்கு ஆண்டுதோறும் வைகாசித் திங்களில் விழா எடுக்கப் பட்டது.[74] சாசனத்தால் உறுதி செய்யப்பெறும் இவ்விழா வில்லைப் புராணத்திலும் குறிக்கப்பெறுகிறது.

ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழாவில், இறைவனை உலாவாக எழுந்தருளச் செய்தனர். அக்காலத்தில் கடல்முழுக்காட்டும் சிறப்பு நிகழ்ச்சி ஒன்றும் நிகழ்த்தப்பெற்றது. இவற்றுக்கென அரியன உடையார் காலத்தில் (கி. பி. 1379)

---

72. A. R. E. 1936–37, No. 193
73. *கலிங்கத்துப்பரணி, தாழிசை. 94*
74. A. R. E. 1936–37, No. 187

10 மா அளவுள்ள நிலம் தேவதானமாக விடப்பட்டது.[75] சில வரித் தொகைகளையும் அவர் தானமாக வழங்கியுள்ளார். அவ்வரிகளில் ஒன்று வால்வரி.

அக்காலத்தில் கால்நடைமீது விதிக்கப்பட்ட வரி, வால்வரி எனப்பட்டது. பசு ஒன்றுக்கு அரைப் பணமும், பெண் எருமை ஒன்றுக்கு முக்கால் பணமும், ஆடு ஒன்றுக்கு அரைக்கால் பணமும் வால்வரியாக விதிக்கப்பட்டது.[76]

கி. பி. 14-ஆம் நூற்றுண்டிலிருந்துதான் வில்லியனூரில் நடைபெற்ற விழாக்களைப்பற்றிய செய்திகள், சாசனங்களில் காணப்படுகின்றன. சோழர் காலத்து விழாக்களைப் பற்றிய செய்தியொன்றும் கல்வெட்டில் இல்லை. இப்போது சிறப்பாக நிகழ்த்தப்பெறும் திருத்தேர் விழா, விசயநகர வேந்தர் காலத்தில் உண்டானதாக இருக்கலாம்.

விசய நகர வேந்தர்களின் ஆட்சிக் காலங்களில்தான், நாடெங்கும் திருத்தேர் விழாக்கள், பெருவாரியாக நிகழ்த்தப்பெற்றன. தென்னார்க்காடு மாவட்டம், எலவானசூரிலுள்ள ஊர்பாகங் கொண்டருளிய நாயனாரின் திருத்தேர் விழாவுக்கு, வீரமங்கலம் என்னும் சிற்றூர் ஒன்று மானியமாக வழங்கப்பட்டது. விசயநகரர் காலத்தில் அது வழங்கப்பட்டது இங்குக் குறிப்பிடத்தக்கது.[77]

பராக்கிரம பாண்டியனின் அம்மானன குலசேகரமாவலி வாணராயன் என்பவன், தன் பெயரால் சிறப்புக்கட்டளை ஒன்றை நிறுவி, அதற்காக 26 மா அளவுள்ள நிலங்களின்மீது புதிய வரியை விதித்துள்ளான்.[78]

## தடைபட்ட தானம்

முற்காலத்தில் இறைவனுக்குப் பிட்சாபதிராயர் என்பவரால் ஏற்படுத்தப்பட்டிருந்த விளக்குத்தானம், இடைக்காலத்தில் எக்காரணத்தாலோ தடைபட்டு நின்றுவிட்டது. இதனை உணர்ந்த வழுதாவூர் நாட்டார், மகமதியரின் ஆட்சிக் காலத்தில், இராயோஜி

---

75. A. R. E. 1936–37, Nos. 183 & 194
76. A. R. E. 1936–37, Part. II, Para. 53
77. A. R. E. 1937–38, No. 483
78. A. R. E. 1936–37, No. 189

பண்டிதரிடம் எடுத்துச் சொல்லி அதனை மீண்டும் நிறுவினர். இச் செயல் கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்துள்ளமையைக் கீழ்க் கண்ட சாசனத்தால் அறியலாம். இச்சாசனம் தெற்கு இராச கோபுரத்தின் கிழக்குச் சுவரில் உள்ளது.

1. "சிவஞான தெசிகர் வாக்குப்படி (2) காலத்துக்கு செல்லும் நற்(3)தன ஷூ ஆடி மீ 2 வழுதாவூர் சி(4)மை கிருசாரிக்கம் திருக்காமியிக(5)ப்பா சு(வா)மியாருக்கு முந்நாள் பிஷ்(6)ஷாபதி ராயர் திருவிளக்குக்கு தாரை (7) வாத்த தினம் துலக்க நிவானத் தில் (8) வழுதாவூர் கிரும நாட்டார் சகல(9) மாநபெரும் ராயோஜீ பண்டிதருக்கு (10) சொல்லி...... நடப்பும் (11) சாமியாருக்கு கட்டளையிட்டார்கள் யி(12)ந்த தன்மதுக்கு யாதாமொரு அதா (13)குதம் பண்ணினால் காராம் பசுவை (14) கொன்ற தொஷத்திலும் மாதா பி(15)தாவைக் கொன்ற தொஷத்திலெ பெ(16)ாகக் கடவ ராகவும்......கெங்கைக் க(17)ரையிலெ காராம்பசுவைக் கொன்ற (18) தொஷத்திலெ பொகக் கடவராகவும்"

வழுதாவூருக்கும் வில்லியனூருக்கும் கி. பி. 18-ஆம் நூற்றாண் டில் இருந்த தொடர்பு, இன்னதென இச்சாசனத்தில் விளக்கப் பெறவில்லை.

## தணிக்கை முறை

மூன்றாம் குலோத்துங்கனின் 37-ஆவது ஆண்டு முதல் (கி. பி. 1215) முதல், கோப்பெருஞ்சிங்கனின் 11-ஆவது ஆண்டு (கி. பி. 1243) முடிய உள்ள, கோயிற் கணக்குகள் அனைத்தும் தணிக்கை செய்யப்பட்டு, ஆறுவது தைமாதம் இருபத்தொன்றாம் தியதி முதல், இரண்டு நந்தா விளக்குகள் எரிப்பதற்கு ஏற்பாடு செய்யப் பட்டது. இதனைக் கோப்பெருஞ்சிங்கனின் கல்வெட்டு ஒன்றினால் அறிகிறோம்.[79] தணிக்கை செய்த அதிகாரியின் பெயர், 'பெருமங்கல முடையான் உடைய பெருமாளான காடுவெட்டிகள்' என்று குறிக்கப்படுகிறது.

எனவே, வில்லியனூர்ச் சிவன் கோயிற் கணக்குகள் ஆண்டு தோறும் தணிக்கை செய்யப்பட்டன என்றும், எக்காரணம் பற்றி யாவது அச்செயல் தடைப்பட்டாலும், அக்கணக்குகள் மீண்டும் ஒருசமயம் தணிக்கைக்கு உள்ளாகும் என்றும் அறிகிறோம்.

---

79. A. R. E. 1936–37, No. 186

இனி, இக்கல்வெட்டை ஆராய்ந்த திரு. S. R. பாலசுப்பிரமணியம் அவர்கள், கீழ்க்கண்டவாறு தமது கருத்தைத் தெரிவித்துள்ளார்.[80]

“கல்வெட்டு வாசகத்தில் சிறிதளவு குறையிருக்கவேண்டும். வில்லியனூர்க் கல்வெட்டிலிருந்து நாம் இயல்பாகத் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி பின்வருமாறு: கோப்பெருஞ்சிங்கனின் ஆறும் ஆண்டு (கி. பி. 1249) தை மாதம் 11-ஆம் தியதி முதல் 21-ஆம் தியதிவரை தணிக்கை நடைபெற்று தைமாதம் 22-ஆம் தேதி முதல் இரண்டு நொந்தா விளக்கு எரிப்பது என்று தீர்ப்புச் செய்தனர் என்பதே. இங்ஙனம் பொருள் செய்வதற்கு இதர கல்வெட்டுச் சான்றுகளும் உண்டு”

## திருப்பணிகள்

வில்லியனூர் சிவன் கோயில் பழமையான சோழர் காலத்துக் கற்றளி என்பதில் ஐயமில்லை. கோப்பெருஞ்சிங்கனின் ஆட்சிக் காலத்தில் கி. பி. 1251-ஆம் ஆண்டில் இக்கற்றளி திருப்பணிக்கு உள்ளாயிற்று.[81] கோயிலும் மண்டபமும் செப்பனிடப்பட்டன. இதனால் மூலக்கோயிலின் பழமையான அமைப்பு மாற்றமடைந்துள்ளது. இத்திருப்பணியை ஏற்று நடாத்தியவன், பூங்குன்றத்துக் கோட்டூர்த் தலைவன் வீதிவிடங்கன் சிற்றம்பலமுடையானை நந்தியராயன் என்ற பெருமகன் ஆவான். இக்கல்வெட்டில் வரும் பூங்குன்றம் என்னும் சிற்றூர், ஒழுகரையைச் சேர்ந்திருந்த ஒரு சிற்றூர் என்பதைத் திருவதிகைக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.[82]

தேவகோட்டச்சிலைகள் பழமைவாய்ந்தவை, கொடுங்கையின் மேல் அமைந்திருந்த யாளி வரிமானங்கள், இப்போது வசந்த மண்டபத்திலுள்ள பரிவார ஆலயங்களிலும், திருக்குளத்தின் வடமேற்கு மூலையிலும் இடம் பெற்றுள்ளன.

### திருவாயில்

தத்தனூர் சேந்தாண்டான் என்பவனால், முதற் பிரகாரத்தின் திருவாயில் அமைக்கப்பட்டது. அரசன் பெயரும் ஆட்சி ஆண்டும்

---

80. கோப்பெருஞ்சிங்கன், பக்கம் 48
81. A. R. E. 1936–37, No. 185
82. S. I. I., Vol. VIII. No. 314 (40 A of 1903)

குறிக்கப்பெருத கி. பி. 14-ஆம் நூற்ருண்டைச் சார்ந்த சாசனம் ஒன்ருல் இதனை அறிகிருேம். [83]

துவாரபாலகர்

வசந்த மண்டபத்தில் கிழக்கு நோக்கியவாறு இரண்டு வாயிற் காப்போரின் சிலைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஆணுமாகவும்,



துவார பாலகி – வில்லியனூர்ச் சிவன் கோயில்

நன்றி: French Institute of Indology - Pondicherry

83. A. R. E. 1936-37, No. 200

மற்றொன்று பெண்ணுமாகவும் அமைந்துள்ளன. இவை பழமை யான மூலக் கோயிலுக்கு உரியனவாகும். இவை இரண்டிற்கும் இணையான, மற்றுமிரண்டு சிலைகளைப் பற்றிய தகவல்கள் கிடைக்க வில்லை.

## ஆளுநர் அறச்செயல்

புதுவையில் ஆளுநராக இருந்த திரு. M. லெயோன்ஸ் லொழியே அவர்களால், கி. பி. 1880-ஆம் ஆண்டில் கோயிலின் பழமையான கட்டடங்களும் கோபுரமும் பழுது பார்த்துச் செப்பனிடப்பட்டன. இப்போதுள்ள வசந்த மண்டபம் கலவை சுப்பராய செட்டியார் குமாரர் கலவை சதாசிவ செட்டியார் அவர் களால் கி. பி. 1887-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது.

## திருக்குளம்

"திருநந்தவனத்துக்கும் திருக்குளத்துக்கும் திருமடை விளா கத்துக்கும் சதிரம் நான்மா அரைப்படி இட்ட நிலமும் ஐய் வெலியும்"

இது மூன்றும் குலோத்துங்கனின் வில்லியனூர்க் கல்வெட்டு.[84] திருக்குளம் சோழர் காலத்தது என்பதை இச்சாசனம் உறுதி செய்கிறது. நடுவிடத்தே நீராழி மண்டபத்தை உடைய இத் திருக்குளம் 3600 சதுர அடி பரப்புடையது. குளத்தை ஒட்டியவாறு கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள மண்டபம், மடுக்கரை இராமு ரெட்டி என்பவரால், கி. பி. 1765-ஆம்ஆண்டில் கட்டப்பட்டது.[85] தெற்குப் பகுதி படிகளில் சோழர் காலத்துக் கல்வெட்டுகளின் சிதைவுகளைக் காண்கிறோம்.

## இராச கோபுரங்கள்

இங்குள்ள இரண்டு இராச கோபுரங்களில் கிழக்குக் கோபுரம் 70 அடி உயரமும், தெற்குக் கோபுரம் 90 அடி உயரமும் உடையது, இவை விசயநகர வேந்தர் காலத்தனவாகத் தோன்றுகிறது. கிழக்குக் கோபுரம் பிரான்சுவா மர்த்தேன், தூய்ப்ளே ஆகிய பிரஞ்சுக் கவர்னர்களின் காலங்களில், பகைவர்தம் இராணுவ நடமாட்டங் களைக் கண்டறியும் கண்காணிப்பு நிலையமாக (Observation post) விளங்கியது. பின்னர் பிரஞ்சு அரசாங்கத்தால் பழுதுபார்த்துச் செப்பம் செய்யப்பட்டது.[86]

---

84. S. I. I., Vol. VII, No. 816
85. A. R. E. 1936–37, No. 205
86. Census of India, 1961, Vol. XXV, Part. II, Page. 66

## தூண்கள்

பிரகாரங்களில் அமைந்துள்ள தூண்களில் பல, விசயநகர வேந்தர்களின் காலங்களில், குறிப்பாக நாயக்க மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் நிறுவப்பட்டவையாகும்.

பாய்ந்துவரும் குதிரையின்மீது வீரனொருவன் வீற்றிருப்பது போல அமைந்துள்ள இத்தூண்களின் சிற்பம், மிக உயரிய வேலைப்



நாயக்கர் காலத்துத் தூண்கள்
வில்லியனூர்ச் சிவன் கோயில்
நன்றி : French Institute of Indology - Pondicherry

பாடு கொண்டவை. போதிகை கீழ் நோக்கியவாறு நீண்டு வளர்ந்து, பீடத்தைவிட மேல்மட்டம் அகன்று அழகுற அமைந்துள்ளது. முனையில் தாமரை மொட்டின் அமைப்பைக் கொண்டுள்ளது. தூண்கள் அனைத்தும் சிற்றுருவச் சிலைகளால் அலங்கரிக்கப்பட்

டுள்ளன. பெண்களின் சிற்றுருவச் சிலைகளில் சில, மேலாடை அணிந்தவாறு அமைக்கப்பட்டுள்ளன. இம்முறை பிற்காலத்து அமைப்பாகும்.

சோழர் காலத்துத் தூண்களை அடியொற்றி, இவ்வகைத் தூண்கள் வளர்ச்சி அடைந்துள்ளன. நுட்பமான சிற்றுளி வேலைப்பாடுகள், விசயநகர வேந்தர்களின் காலத்தனவாகும். இதே அமைப்புடைய தூண்களை வேலூர், சிதம்பரம், தஞ்சை, திருச்சி, மதுரை, இராமேசுவரம் முதலான இடங்களில் உள்ள விசயநகர, நாயக்க மன்னர்களின் மண்டபங்களில் காண்கிறோம். [87]

## சைவ மடம்

கி. பி. 15-ஆம் நூற்றாண்டில், மெய்கண்டார் சந்தானத்தைச் சேர்ந்த காஞ்சிபுரம் ஞானதேசிகரின் மாணாக்கர் மெய்ஞ்ஞான மாமுனிகளுக்கு, மடப்புறமாக வில்லியனூரில் நிலதானம் செய்யப் பட்டது. இங்கிருந்த மடங்களில் இது பழமையானது.

கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் திருநாவலூர் நந்திகேசுவரரின் மாணாக்கரும், மெய்கண்டார் சந்தானத்தைச் சேர்ந்தவருமான, திருவக்கரை மெய்ஞ்ஞான மாமுனிகள், வில்லியனூரில் மடம் ஒன்று நிறுவினர். [88] முன்னைய மடத்தினின்றும் இது பிற்காலத்தது.

கி. பி. 15, 16-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த எழுத்துகளால், வில்லியனூர்க் கல்(வி)மடத்தில் வரையப்பட்டுள்ள இரண்டு சாசனங்களால் மேற்கூறிய செய்திகளை அறிகிறோம். இப்பொழுது சிதைந்த நிலையில் காணப்படும் இச்சைவ மடம், கல்வெட்டுகளில் கல்மடம் என்று குறிக்கப்பெறுகிறது. இது அக்காலத்தில் சமயக் கல்வியை வளர்த்த மடமாதல் வேண்டும்.

முற்காலத்தில் இது சைவர்கள் அனைவர்க்கும் உரிய பொது மடமாகவே விளங்கியது. பிற்காலத்தில் கார்காத்த வேளாளர்கள்

---

87. (i) Indian Architecture – M. A. Anandhalvar & A. Rao, Pages. 27 & 29
(ii) ,, ,, – O. C. Gangoly, Page. 56
(iii) ,, ,, – Percy Brown, Pages. 109–110
(iv) தமிழகக் கோயிற் கலைகள், பக்கம். 91

88. A. R. E. 1936–37, Nos. 206 & 207

தமக்குரிய மடம் என்று சொந்தங் கொண்டாடினர். கார்காத்த வேளாளர் மரபினரான வேங்கடசாமி முதலியாரின் கட்டளைப்படி, அவர் மனைவியாரான அனந்தம்மாள் என்பவர், இம்மடத்தில் மண்டபம் ஒன்றைக் கட்டுவித்தார்.

வேங்கடசாமி முதலியார், அவர்தம் மனைவி அனந்தம்மாள் ஆகிய இருவரின் சிற்பங்களை இம்மடத்தில் இன்றும் காணலாம். இம்மடம் தங்களுக்கு உரியது என்று கார்காத்த வேளாளரும், தங்களுக்கே உரியதென்று துளுவ வேளாளரும் உரிமை கொண் டாடுவர்.

சைவ மடத்தில் நடைபெறுகின்ற மகேசுவர பூசைக்கு என்று, திருவக்கரைத் திருக்காளத்திப் பிச்சன் மெய்ஞான மாமுனியன் என்பவனின் பெயரில், புதுப்பாக்கம் ஏரியின்கீழ் நிலங்கள் மானியமாக விடப்பட்டிருந்தன. இதனை கிருஷ்ணதேவராயரின் திருவக்கரைச் சாசனம் ஒன்றால் அறிகிறோம்.[89] திருவக்கரை, வில்லிய னூர் ஆகிய இரண்டு ஊர்களிலும் இருந்த சைவ மடங்கள், ஒன்றுக் கொன்று தொடர்பு உடையவை என்பதை இது குறிப்பால் உணர்த்துகிறது.

வண்ணத்தான்பட்டு, செங்கழுநீர்ப்பள்ளம், வண்ணாரக்கொல்லை, புத்தூழ்ரான்பட்டு, பிறையூர், வண்ணக்கன்பட்டு, மருந்தமங்கல முடையான்பட்டு முதலான தேவாதன நிலங்களையுடைய ஊர்ப் பெயர்களையும், அக்காலத்தில் விதிக்கப்பட்டிருந்த வாசல் பணம், வால்வரி, சூல்வரி, ஜோடி, ஸ்ரீகாரியக் கொற்றிலக்கை முதலான வரிகளின் பெயர்களையும் இங்குள்ள சாசனங்கள் புலப்படுத்து கின்றன.

## உரிமைக் கிளர்ச்சி

அச்சுததேவராயர் காலத்தில், கி. பி. 1542-ஆம் ஆண்டில், வில்லியனூரில் நடைபெற்ற உரிமைக் கிளர்ச்சி பற்றிய செய்திகளை சாசனம் ஒன்று கூறுகிறது.[90]

### கைக்கோளர்

கண்டியதேவன், காலிங்கராயன், பட்டமானங்காத்தான், உல கெலாம் வென்றான் எனவரும் விருதுப் பெயர்கள் அனைத்தும், அக்காலத்தில் கைக்கோளர்களுக்கு மட்டுமே உரித்தான விருதுப் பெயர்களாக விளங்கின. கைக்கோளர்களைத் தவிர, வேறு இனத்

89. S. I. I., Vol. XVII. No. 211
90. A. R. E. 1936–37, No. 201 & Part. II, Para. 61

தவர் யாரும், இப்பெயர்களைப் பயன்படுத்தக் கூடாது என்னும் மரபு இருந்து வந்ததாகத் தெரிகிறது. கைக்கோளர்க்கு உரிய இவ்வுரிமை, செப்பேட்டுச் சாசனம் ஒன்றினுல் உறுதி செய்யப் பட்டது. அச்சாசனத்தின் நகல், வில்லியனூர்ச் சிவன் கோயிலின் குமுதப்படையில் வரையப்பட்டது. உண்மைப் பிரதியான செப் பேடு காஞ்சிபுரத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டது.

## இலைவாணிகர்

இனி, வில்லியனூரில் இருந்த இலை வாணிகர்கள் (வெற்றிலை வாணிகர்), கைக்கோளர்க்கு உரித்தான மேற்கண்ட விருதுப் பெயர்கள், தமக்கும் உரியவை என்று உரிமை கொண்டாடினர். அவ்விருதுகளைத் தாமும் புனைந்து கொண்டனர். அரசு அதிகாரி களும் இலைவாணிகரிடம் கைக்கூலி பெற்றுக் கொண்டு, இச்செயலைக் கண்டும் காணுதவாறு நடந்தனர்.

## வெளியேற்றம்

கைக்கோளர்கள் இலைவாணிகரின் இத்தகாத செயலை அரசு அதிகாரிகளுக்குத் தெரிவித்தனர். முறையிட்டு நியாயம் வழங்கக் கோரினர். எனினும், பயன் ஏதும் விளைந்தபாடில்லை. எனவே, இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் பொருட்டு, அக்கைக்கோளர்கள் தம்மோடு தேவாங்கரையும் சேர்த்துக் கொண்டு வில்லியனூரை விட்டு வெளியேறலாயினர்.

## விசாரணை

இக்கிளர்ச்சி உயர் அதிகாரிகளின் கவனத்தைத் திருப்பியது. இந்நிகழ்ச்சி பற்றிய அனைத்தும் நீதி விசாரணைக்கு உள்ளாயின. திருமலைதேவமகாராசனின் பெருந்தரத்து அதிகாரியான விசய ராயன் என்பவரும், மற்றும் சில உயர் அதிகாரிகளும் முறையான விசாரணையை மேற்கொண்டனர்.

## தீர்ப்பு

விசாரணையின் பொருட்டுக் காஞ்சிபுரத்தில் இருந்த செப்பேடு கொண்டுவரப்பட்டது. படிக்கப்பட்டது. வில்லியனூர்க் கோயிலில் பொறிக்கப்பட்டிருந்த, அதன் வாசகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கப் பட்டது. அனைத்தையும் சரிபார்த்த அதிகாரிகள், மேற்கூறிய விருதுப் பெயர்கள் கைக்கோளர்களுக்கே உரியன என்று தீர்ப்பு வழங்கினர். சிவன் கோயிலில் உள்ள இச்சாசனம், சுண்ணும்புப் பூச்சினுல் மறைந்துள்ளது.

இத்தகைய புரட்சியின் விளைவாகப் பிற்காலத்தில் சில மாற்றங் கள் நிகழ்ந்துள்ளன. குறிப்பாக ஸ்ரீரங்கதேவரின் ஆட்சிக் காலத்

தில் (கி. பி. 1575), உழவுக்குடி மக்களில் ஒரு பிரிவினருக்கு இருந்துவந்த சில சமூகக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன. இதனை இங்குள்ள ஸ்ரீரங்கதேவரின் சாசனத்தால் அறிகிறோம். [91]

கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் தோன்றிய உரிமைக் கிளர்ச்சி பற்றிய சாசனத்தால், அக்காலத்தில் வில்லிய னூரில் வெற்றிலை வணிகர்கள் பெருவாரியாக இருந்தமை புலனாகிறது. கி. பி. 18-ஆம் நூற்றாண்டிலும், இப்பகுதியில் வெற்றிலைத் தோட் டங்கள் நிறைந்திருந்ததை, ஆனந்தரங்கப்பிள்ளையின் நாட்குறிப் பினால் உணர்கிறோம். [92] வெற்றிலை வாணிகத்து நமது வில்லியனூர் இன்றளவும் சிறந்து விளங்குவது குறிப்பிடத் தக்கது.

## இராயர் விஜயம்

கிருஷ்ணதேவராயர் தனது அமைச்சர் அப்பாஜியுடன், தென் னாட்டைப் பார்வையிடும் பொருட்டு, இராய வேலூரிலிருந்து புறப்பட்டார். இடையில் தமது பரிவாரங்களுடன் வில்லியனூரில் தயங்கினார்.

அக்காலத்தில் வில்லியனூருக்குக் கிழக்கே உள்ள ஒழுகரையில், உய்யகொண்ட விசுவராய முதலியார் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர்தம் உள்ளங்கால்களிலே உரோமம் வளர்ந்திருந்ததாகக் கேள் விப்படுகிறோம். இப்புதுமை அவ்வட்டாரம் முழுமையும் பேசப் பட்டு வந்தது. வில்லியனூரில் தங்கியிருந்த கிருஷ்ணதேவராயர் இதனைக் கேள்வியுற்றார். உழவர்கரை சென்று இவ்வரிய புதுமை யைக் கண்டார். மாலைநேரம், முத்தரையர் பாளையத்தின் வழி யாகச் சென்றார்.

### மாளிகையும் மணமும்

வழியிடையே உயர்ந்த மாளிகை ஒன்று தென்பட்டது. அம் மாளிகை விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு அழகுற காட்சியளித் தது. அங்கிருந்து வந்த நறுமணப்புகை, இராயரின் நாசியைத் துளைத்தது. இறைவனிடம் எல்லையற்ற ஈடுபாடு கொண்டிருந்த கிருஷ்ணதேவராயருக்கு, அது ஓர் ஆலயமாகத் தோன்றியது. அருகில் இருந்த அப்பாஜிக்கும் அதே எண்ணந்தான். இருவரும் இறைவனை நினைந்து, அம்மாளிகையை நோக்கிக் கைகூப்பி வணங் கினர்.

---

91. A. R. E. 1936–37, No. 198
92. ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு, தொகுதி. 6, பக்கம். 4

## உண்மை உணர்ந்தார்

"அம்மாளிகை நாட்டிய நங்கையாம் கணிகை ஒருத்தியின் இல்லம். ஆயி என்பது அவளது அழகிய பெயர். கோலாகலக் காட்சி தரும் அவ்வில்லம், எந்நேரமும் விழாக்கோலம் பூண்டிருக்கும். அங்கிருந்து வருகின்ற இன்னிசையும், நறுமணப் புகையும் நீண்ட நெடுந்தூரம் ஆட்கொள்ளும்" இவ்வாறு அரசனுக்கு மெல்ல உணர்த்தினர். அவனும் உண்மை உணர்ந்தான்.

## ஆணை பிறந்தது

செய்யாத குற்றத்துக்கு ஆயி இலக்கானாள். அரசன் செயலுக்கு ஆயி பொறுப்பில்லை. ஆயினும் பயன் என்ன? அரசன் அல்லவா! ஆகவே, ஆணை பிறந்தது. அவ்வில்லத்தை அழித்திட அரசன் கட்டளை இட்டான். அத்துடன் அங்கொரு குளமும் கிணறும் வெட்ட உத்தரவிட்டான். 93

## வேண்டுகோள்

அரசனது ஆணையை அறிந்த ஆயி, செய்வதறியாது திகைத்தனள். சொல்லொண்ணு துயருற்று வருந்தினுள். தானே தனது பொருள் கொண்டு, குளமும் கிணறும் வெட்டுவித்து, அரசர்தம் விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்தாள். அரசனும் மனம் மாறினன். அவளின் வேண்டுகோளுக்கு இணங்கினன்.

அரசனிடம் வாக்களித்த ஆயிநல்லாள், முத்தரையர் பாளையத்தில் ஆழ்ந்தகன்ற குளம் ஒன்றையும், கிணறு ஒன்றையும் வெட்டுவித்தாள். அவளுக்குப் பின்னரும் அக்குளம் ஆயிகுளம் என்றே அழைக்கப்படுகிறது. 94 இந்நிகழ்ச்சி நடந்தது கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பாதி என்பது இங்கு உளங்கொளத் தக்கது.

## நினைவுச் சின்னம்

பிரான்சு நாட்டில் மூன்றும் நெப்போலியனின் ஆட்சி நடைபெறுகின்ற (கி. பி. 1852 – 1870) காலம். அப்போது பிரஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியின் கவர்னராகப் புதுவையில் இருந்தவர் 'அலெக்சாண்டர் டியூராண்டு துப்ராய்' என்பவராவர்.

நெப்போலியனும் கவர்னரும் ஆயிபற்றிய அனைத்துச் செய்திகளையும் கேள்விப்பட்டனர் போலும். அவளின் நினைவாகப் புதுவை

---

93. A. R. E. 1936–37, Part. II, Para. 80
94. A. R. E. 1937, No. 179

யில், அப்பொழுது இருந்த கோட்டைப் பகுதியில், அழகிய 'ஜலமாளிகை' ஒன்று நிறுவினர். நெப்போலியன் உத்தரவின் பேரில் இது கட்டப்பட்டதாக அறிகிறோம்.

புதுவைக் கடற் கரையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுர் அவர்களின் சிலைக்கு அருகில் (மேற்கில்), இந்த நினைவுச் சின்னம் அமைந்துள்ளது. ஆயி என்னும் அழகியின் இல்லம் அமைந்திருந்த இடமும் அதுவே எனக் கருதப்படுகிறது. ஜலமாளிகை இருந்த இடம், இப்போது அழகியதொரு மண்டபமாகக் காட்சியளிக்கிறது. அம்மண்டபத்தின் மேல், ஆயி என்பாள் இளைப்பாறும் பாவனையில் நிறுவப்பட்ட சுதை உருவச் சிலை ஒன்றையும் காண்கிறோம்.

ஆயி என்பவளால் முத்தரையர்பாளையத்தில் வெட்டப்பட்ட குளத்திலிருந்து கால்வாய் அமைத்து, ஏற்றத்தின் மூலமாக நீர் இறைத்து, அந்நீரை மேலே குறிக்கப்பட்ட ஜலமாளிகைக்குக் கொண்டுவந்ததாகத் தெரிகிறது. இவ்வரும் பணியைச் செய்து முடித்தவர் 'லமாரஸ்' என்னும் பெருந்தகை ஆவார்.

பேராசிரியர், வரலாற்றுப் பேறிஞர் திரு. ழுவோ துப்ராய் அவர்களால் படி எடுக்கப்பட்டதும், கி. பி. 1862-ஆம் ஆண்டில் வரையப்பட்டதுமான இலத்தீன் மொழிச் சாசனம் ஒன்ருல், நெப்போலியன் காலத்து மேற்சொன்ன நிகழ்ச்சிகளை அறிகிறோம்.[95]

இக்காலத்தில் புதுவை மாநிலத்தில் உள்ள ஊராட்சி ஒன்றியங்களுள், வில்லியனூர் ஒன்றியமும் ஒன்ருகும். இது காஞ்சிப் பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள், விசயநகர வேந்தர்கள், நாயக்க மன்னர்கள் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் சிறப்புடன் விளங்கிய பேரூராகும்.

அதன் பழமையான பெயர் வில்லியநல்லூர் என்பதையும், வில்வநல்லூர் என்பது வில்லைப்புராணம் தோன்றிய கி. பி. 15-ஆம் நூற்ருண்டுக்குப் பின்னர் எழுந்த பெயர் என்பதையும், அவ்வூர் பிரஞ்சுக்காரர்களின் ஆட்சிக் காலத்து, தென்னக வரலாற்ருேடு நெருக்கமான தொடர்பு கொண்டு விளங்கியது என்பதையும் இக் கட்டுரையால் அறியலாம்.

---

95. A. R. E. 1938-39, No. 318

# ஒழுகரை

புதுவையிலிருந்து விழுப்புரம் செல்லும் நெடுஞ்சாலையில், புதுவைக்கு மேற்கே 4 கி. மீ. தொலைவில் ஒழுகரை என்னும் சிற்றூர் அமைந்துள்ளது. பழங்காலத்தில் சிருஞ்சிறப்புடன் திகழ்ந்த பேரூர்களில் ஒழுகரையும் ஒன்றாக இருந்துள்ளது. பழம்பெருமை வாய்ந்த ஒழுகரையின் வரலாற்றை, இக்கட்டுரையில் இயன்ற அளவு அறிய முற்படுவோம்.

## சான்றுகள்

ஒழுகரையிலேயே நமக்குக் கல்வெட்டுகள் கிடைத்திருக்குமாயின், அதன் வரலாற்றுக்கு அவை பெருமளவில் துணையாக இருந்திருக்கும். அவ்வாறு நமக்குக் கல்வெட்டுகள் கிடைக்காதது வருந்தத் தக்கது. திருவக்கரை, திருவதிகை, திருவந்திபுரம், திருப்பாலப்பந்தல், திருவாமாத்தூர், திருவெறும்பூர், ஒழிந்தியாப்பட்டு (திருஅரசிலி), மதகடிப்பட்டு, மரக்காணம், வில்லியனூர், புதுச்சேரி ஆகிய இடங்களில் உள்ள சில சாசனங்கள், நமது ஒழுகரையைப் பற்றிய குறிப்பான சில தகவல்களைத் தருகின்றன. அவற்றை மையமாக வைத்து, அதன் தொன்மையை இங்கு அறியத் துணிவோம்.

வில்லியனூரைப்பற்றிய முன் கட்டுரையில், ஒழுகரையைப் பற்றி வழங்கிய செவிவழிச் செய்திகளைக் கண்டுள்ளோம். அது அவ்வூர் மக்களின் செல்வ மேம்பாட்டைக் காட்டுகிறது. அவர்கள் உழவுத்தொழிலை மேற்கொண்டு சீரிய வாழ்க்கை வாழ்ந்தனர். சிறந்த கால்நடைச் செல்வங்களைப் பெற்றிருந்தனர். வயலும் வயல் சார்ந்த இடமுமான மருதநிலப் பகுதிகளை மிகுதியாகப் பெற்று, இடையிடையே முல்லைநில இயல்புகளையும் கொண்டு அப்பகுதி சிறந்து விளங்கியது. செவிவழிச் செய்திகள் கால நீட்சிக்கு ஏற்ப, கூடியும் குறைந்தும் வழங்கும் இயல்புடையனவாயினும், மேற்கூறிய செய்திகள் உண்மை எனக் கோடலில் தவறில்லை.

## ஊரும் பேரும்

திருவாமாத்தூர் அபிராமேசுவரர் கோயிலில் வரையப்பட்டுள்ள, முதலாம் இராசராச சோழனின் 28-ஆவது ஆண்டுக் (கி. பி. 1013)

கல்வெட்டு ஒன்றில்,[1] ஒழுகரையின் மிகப் பழமையான பெயர் "ஒழுக்கை வடகரை" என்று குறிக்கப்படுகிறது.

இராசராசச் சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகை, 'ஒழுக்கை வடகரை' என்னும் ஊரினனான போாளம் என்பவன், திருவா மாத்தூர் இறைவனுக்குத் திருநுந்தா விளக்கொன்று அமைத்த செய்தியை அச்சாசனம் கூறுகிறது. எனவே, இச்சாசனம் குறிப்பிடும் 'ஒழுக்கை வடகரை' என்னும் பெயர், பிற்காலத்தில் ஒழுகரை என்று மருவி வழங்குவதாகக் கருதினால் அது தவறாகாது. இம் மன்னனுக்குக் காலத்தால் பிற்பட்ட சாசனங்கள் அனைத்தும் ஒழுகரை என்றே குறிக்கின்றன.

முதலாம் இராசேந்திர சோழனின் திருப்பாலப்பந்தல் சாசனமும், இரண்டாம் இராசராச சோழனின் எறும்பூர்ச் சாசனமும், கோப்பெருஞ்சிங்கனின் திருவக்கரைச் சாசனமும், மல்லிகார்ச்சுன மகாராயரின் மாக்காணம் சாசனமும் இதனை ஒழுகரை என்று சுட்டுவது இங்கு உளங்கொளத் தக்கது.

இடையறுது நீர் ஒழுகும் கரையைப் பெற்றிருந்த காரணம் பற்றி, இது ஒழுகரை எனப்பட்டது. மடுக்கரை, மதகடிப்பட்டு, குண்டாங்குழி, உளிவாய்க்கால், ஊரல்மேடு என ஊர்ப் பெயர்களாகவும், இடப்பெயர்களாகவும் வருபவை அனைத்தும், நீர் வளத்தை அடிப்படையாகக் கொண்டு வழங்கும் பெயர்கள் ஆகும். இவை எல்லாம் இப்பகுதியிலேயே அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது. இவற்றுள் உளிவாய்க்கால் என்பது, ஒழுகரைக்கு மேற்கே 2 கி. மீ. தொலைவில் அமைந்துள்ள சிற்றூர் ஆகும். நாகர் கோயிலைச் சார்ந்து, 'ஒழுகின சேரி' என்றொரு ஊர் இருப்பது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

## குலோத்துங்க சோழ நல்லூர்

"ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சொழ தெவர்க்கு யாண்டு பதினறுவது ஜயங்கொண்டசொழ மண்டலத்து ஒய்மானுடான விஜயராஜேந்திர வளநாட்டு பெருவெம்பூர்நாட்டு திருவாசிலி ஆளுடையார்க்கு மாத்தூர் நாட்டு குலொத்துங்க சொழ நல்லூர் பிடாகை பெருவெள்ளெரியிலிருக்கும் மன்றுடி செட்டன் திருவையாறுடையானான சித்திரமெழிக்கொன் வைத்த சந்தி விளக்

1. A. R. E. 1922, No. 4

கொன்றுக்கு விட்ட பசு ஞறு இப்பசு ஞறும் கைகொண்டு ஸந்தி விளக்......"

இக்கல்வெட்டு திண்டிவனம் வட்டம், ஒழிந்தியாப்பட்டுச் சிவன் கோயிலின் தெற்குச் சுவரில் காணப்படுகிறது.[2] இது முதலாம் குலோத்துங்க சோழனின் மகனான விக்கிரம சோழனின் 16-ஆவது ஆண்டில் (கி. பி. 1134) வரையப்பட்டதாகும்.

திருஅரசிலி ஆளுடையாருக்கு, பெருவெள்ளேரி என்னும் ஊரைச் சார்ந்த 'சித்திரமேழிக்கோன்' என்னும் இடையன், விளக்குத் தானமாக நான்கு பசுக்களை வழங்கியதை இச்சாசனம் கூறுகிறது. இக்கொடையாளன் வாழ்ந்த பெருவெள்ளேரி என்பது, குலோத்துங்க சோழ நல்லூரைச் சேர்ந்த சிற்றூர் என்று குறிக்கப்பட்டுள்ளது. இச்சாசனத்தில் வரும் குலோத்துங்க சோழ நல்லூர் என்பது, நமது ஒழுகரையைக் குறிக்கும். இதனை,

"மாத்தூர் நாட்டு ஒழுகரையான குலொத்துங்க சொழ நல்லூருக்கு கிழக்கு தாழை வதிக்கு மெற்கு"

என்று வரும் புதுவை ஜெயராக்கினி மாதாக் கோயில் சாசனத்தாலும், [3]

"இராசராச வளநாட்டு மாத்தூர் நாட்டு ஒழுகரையாள குலொத்துங்க சொழ நல்லூர்"

என்று வரும் மூன்றும் குலோத்துங்கனின் வில்லியனூர்ச் சாசனத்தாலும், [4]

"மாத்தூர் நாட்டு ஒழுகரையான குலொத்துங்க சொழ நல்லூர் பூங்குன்றத்துக் கொட்டூர்க் குமரன் அம்பலத் தெவனை செநிராயர்"

---

2. S. I. I., Vol. VII, No. 824

3. சோழர் காலத்து எழுத்து வரிகளைக் கொண்ட இரண்டு குமுதப் படைகள், சிதைந்து உடைபட்ட நிலையில் ஷை மாதாக்கோயிலில் உள்ளன. அவற்றுள் ஒன்று கோயிலின் தென்மேற்குத் தோட்டப் பகுதியிலும், மற்றொன்று தெற்குப் பகுதியிலும் கிடக்கின்றன. இவை பழமையான அகத்தீசுவரமுடையாரின் கற்றளியைச் சார்ந்த குமுதப்படைகள் என்று கருதுகிறோம்.

4. S. I. I., Vol. VII, No. 816

என்று வரும் திருவதிகைச் சாசனத்தாலும்[5] அறிகிறோம். இதுகாறும் எடுத்துக்காட்டப்பட்ட கல்வெட்டுகளின்மூலம், ஒழுகரைக்குக் குலோத்துங்க சோழ நல்லூர் என்று வேறு பெயர் இருந்தமை தெளிவாதல் காண்க. ஒழிந்தியாப்பட்டிலுள்ள விக்கிரம சோழன் கல்வெட்டிலேயே, நமது ஒழுகரைக்குக் குலோத்துங்க சோழ நல்லூர் என்னும் பெயர் காணப்படுவதால், அம் மன்னனின் தந்தையான முதலாம் குலோத்துங்கனின் பெயராலேயே அப்பெயர் இடப்பட்டமை தேற்றம்.

தேவராயமகாராயர் மகனை மல்லிகார்ச்சுனமகாராயர் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1462) வரையப்பட்ட கல்வெட்டு ஒன்று, மரக்காணத்திலுள்ள பூமீசுவரர் கோயிலில் காணப்படுகிறது.[6] அச்சாசனம், மாத்தூர் நாட்டு ஒழுகரையான குலோத்துங்க சோழ நல்லூர் ஊரவரால், மரக்காணம் இறைவனுக்கு 'விசயராய நல்லூர்' என்னும் சிற்றூர் ஒன்று தேவதானமாக வழங்கப்பட்டதைக் கூறுகிறது. எனவே, கி. பி. 15-ஆம் நூற்றாண்டிலும் நமது ஒழுகரை, இப்புதிய பெயரால் குறிக்கப்பட்டதை அறிகிறோம்.

ஒழிந்தியாப்பட்டில் உள்ள இரண்டாம் குலோத்துங்கனின் சாசனம் ஒன்றில் "மாத்தூர் நாட்டு ஒழுகரை" என்று காணப்படுகிறது.[7] இக்கல்வெட்டில் ஒழுகரையின் புதிய பெயர் குறிக்கப் பெறவில்லை. ஆனால், மூன்றாம் குலோத்துங்கனின் வில்லியனூர் சாசனத்தில் "ஒழுகரையான குலோத்துங்க சோழ நல்லூர்" என்று அதன் புதிய பெயரும் காணப்படுகிறது. இவ்விருவேறு நிலைகளை ஆராயின், குலோத்துங்க சோழநல்லூர் என்னும் புதிய பெயர், சிறுபான்மை வழக்காகவும், ஒழுகரை என்னும் பழம் பெயர் பெரும்பான்மை வழக்காகவும் இருந்துள்ளமை தெளிவாகும். இக்காலத்தில் தனி ஊராக நிலைத்திருக்கும் மூலைக்குளம் என்னும் சிற்றூர், அக்காலத்து ஒழுகரையின் ஒரு பகுதியே ஆகும்.

## மாத்தூர்நாடு

நமது ஒழுகரை மாத்தூர் நாட்டின் எல்லைக்குள் இருந்ததாக, அனைத்துச் சாசனங்களும் கூறுகின்றன. திருவக்கரைக்குத் தெற்கும், திருபுவனைக்கு வடக்கும் விழுப்புரத்திற்குக் கிழக்கும், புது

5. S. I. I., Vol. VIII, No. 314 (175 of 1904)
6. A. R. E. 1919, No. 42
7. S. I. I., Vol. VII, No. 823 (196 of 1902)

வைக்கு மேற்கும் அடங்கிய நிலப்பரப்பு, அக்காலத்தில் மாத்தூர் நாடு என்று பெயர் பெற்றதாகத் தெரிகிறது. [8]

மாத்தூர் என்னும் ஊர் வில்லியனூரில் இருந்து வட மேற்கே 5 கி. மீ. தொலைவிலும், மதுரப்பாக்கத்திலிருந்து தெற்கே 3 கி. மீ. தொலைவிலும், புராணசிங்கப்பாளையத்திலிருந்து மேற்கே 25 கி. மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இந்நாட்டு எல்லைக்குள் வரையப் பட்டுள்ள முதலாம் குலோத்துங்கனின் சாசனங்களும், முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன், இரண்டாம் சடையவர்மன் சுந்தரப்பாண்டியன் ஆகியோரின் சாசனங்களும் மாத்தூர் நாட் டைக் குறிக்கின்றன.

"ஜெயங்கொண்ட சொழ மண்டலத்து மாத்தூர் நாட்டு ஒழுகரை மெலப்பள்ளத்து எல்லைக்கு மெற்கு அமனகன் காலுக்கு தெற்கு.... கிடங்கில் கடம்புமாலை.... நடப்பதாகச் சம்மதித்து கல்லு வெட்டிக் கொடுத்தொம்"

இது புதுவையில் உள்ள ஜென்மராக்கினி மாதாக்கோயிலில் காணப்படும் மற்றுமொரு சாசனப் பகுதியாகும். [9] 12-ஆம் நூற் றுண்டின் எழுத்துவகையைச் சார்ந்தது. இதன் வாசகம் முழுமை யாகக் கிடைக்கப்பெறுமையின், கல்வெட்டுக் கூறும் செய்தியை அறிந்துக்கொள்ள இயலவில்லை. மாத்தூர் நாட்டு எல்லைக்குள் அடங்கி இருந்த ஊர்களில் ஒழுகரை, வில்லியனூர், பெருவெள்ளேரி, பூங்குன்றம் முதலானவை குறிப்பிடத்தக்க ஊர்கள் ஆகும்.

## அகத்தீசுவரம்

"ஒழுகரை திருவகத்திஸ்வரமுடைய மஹாதெவற்கு வைத்த திருநந்தா விளக்கு ஒன்றினுக்கு ஆடு தொண்ணூற்றைஞ்சு இவை கைக்கொண்டு பாட்டஞ் செயக்கடவான் வழுதாவூரிருக்கு மன்றாடி பூமிநக்கன்"

இக்கல்வெட்டு தென்னார்க்காடு மாவட்டம், கடலூர் வட்டம், திருப்பாலப்பந்தல் என்னும் ஊரிலுள்ள சந்திரமௌலீசுவரர்

---

8. (i) S. I. I., Vol. VII, No. 824 (197 of 1902)
   (ii) S. I. I., Vol. XVII, Nos. 207, 212 & 214

9. மாதாக்கோயிலுக்குத் தெற்கே உள்ள கட்டடத்தின் முன் பகுதியில் கிடக்கும் குமுதப்படையில் உள்ளது.

கோயிலின் கருவறைத் தெற்குச் சுவரில் காணப்படுகிறது. [10] இது முதலாம் இராசேந்திர சோழனின் 8-ஆவது ஆண்டில் (கி. பி. 1020) வரையப்பட்டது.

ஒழுகரையிலிருந்த அகத்தீசுவரமுடைய மகாதேவருக்கு, விளக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட 95 ஆடுகளை, வழுதாவூர் இடையன் பூமிநக்கன் என்பவன் பெற்றுக்கொண்டதை இச்சாசனம் கூறுகிறது. இதனால், முதலாம்இராசேந்திர சோழன் காலத்தில், நமது ஒழுகரையில் அகத்தீசுவரமுடையாரின் திருக்கோயில் ஒன்று இருந்தமை இனிது புலனாகும்.

ஒழுகரையான குலோத்துங்க சோழநல்லூரில் எழுந்தருளியுள்ள திருஅகத்தீஸ்வரமுடைய நாயனாருக்கு, நாள்தோறும் திருவமுது படைக்க, மாங்காட்டுக் கண்ணுடையானான உய்யவந்தான் சாத்தன் என்பவன் ஏற்பாடு செய்தான்.

இச்செய்தியை உணர்த்தும் கல்வெட்டு ஒன்று, புதுவை ஜென்மராக்கினி மாதாக்கோயிலில் உள்ளது. [11] இச்சாசனம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துகளால் ஆனது. சாசனச் செய்தி உள்ள கற்பலகை, கோயிலின் படியாக வைத்துக் கட்டப்பட்டுவிட்டது. அன்றியும், எழுத்து வரிகள் கீழ்நோக்கியவாறு அமைந்துவிட்டதால், இப்பொழுது இதனைப் படித்தறிய இயலாது.

முதலாம் இராசேந்திர சோழன் காலத்துக்குப் பின்னர், கி. பி. 12-ஆம் நூற்றாண்டிலும் ஒழுகரையில் இருந்த அகத்தீசுவரமுடையாரின் கோயில், நன்னிலையில் வழிபாட்டுக்குரியதாக விளங்கியதை இச்சாசனத்தால் அறிகிறோம்.

ஒழுகரையில் இன்றுள்ள சிவன் கோயில், செங்கல்லாலான பிற்காலத்துக் கோயிலாகும். கல்வெட்டுக் குறிப்பிடும் கோயில், கருங்கல்லாலான கற்றளியாய் இருந்திருத்தல் வேண்டும். இக்கோயில் எங்கிருந்ததென்று அறிந்துகொள்ள இயலவில்லை. இன்றுள்ள சிவன் கோயிலின் வடகிழக்கு முகப்பில், வழிபாடற்ற நிலையில் இலிங்கம் ஒன்று கிடப்பதைக் காண்கிறோம். கதிர்காமம் அன்பர் ஒருவரால் அது கொண்டு வரப்பட்டதாகத் தெரிகிறது.

· தேவகோட்டச் சிலைகளில் தட்சணாமூர்த்தி, திருமால் ஆகிய சிற்பங்களும், பரிவார ஆலயத்தில் உள்ள சுப்பிரமணிய தேவர்,

10. S. I. I., Vol. XVII, No. 186

11. A. R. E. 1937, No. 180

அவர்தம் தேவியர் இருவர் ஆகியோரின் சிற்பங்களும் பழமையான அமைப்புடையவை. ஒருவேளை, அவை பழைய கோயிலைச் சார்ந்தவையாக இருக்கலாம். குறிப்பிடத்தக்க வேறு பழமைச் சின்னங்கள் எவையும் அங்கே இல்லை.

## அறவோர்கள்

"ஸ்வஸ்திஸ்ரீமன் கோமாறபன்(மர்)திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீவிக்கிரம பாண்டிய தெவர்க்கு யாண்டு (திரு)விரட்டானமுடையார் கொயில் தானத்தாற்கு செய(ங்)கொண்ட சொழ மண்டலத்து மாத்தூர் நாட்டு ஒழுகரையான குலொத்துங்க சொழ நல்லூர் பூங்குன்றத்துக் கொட்டூர்(கு)மான் அம்பலத் தெவ(ஞ)ன செதிராயர் எழுந்தருளுவித்த பல்லவன்னூருடையார்க்குத் திருவதிகை ஆதிராஜ மங்கலப் புறவதிக்குக் கிழக்கு"

இச்சாசனம் திருவதிகைச் சிவன் கோயில் மண்டபத்தில் உள்ளது.[12] மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1268 – 1281) வரையப்பட்டது. இவன் நடுநாடு, தொண்டை நாடு ஆகிய பகுதிகளுக்குப் பாண்டியப் பேரரசின் பிரதிநிதியாய் இருந்தவன்.

சேதிராயன் என்பான் திருவதிகைச் சிவன் கோயிலில் 'பல்லவனூருடையான்' என்னும் பெயரில் படிமம் ஒன்றை எடுப்பித்துள்ளான். அதற்கு வழங்கப்பட்ட நிவந்தங்களைப் பற்றி இச்சாசனம் கூறிச் செல்கிறது.

பாண்டியர் காலத்திலும் ஒழுகரைக்குக் குலோத்துங்க சோழ நல்லூர் என்று பெயர் இருந்துள்ளதை இச்சாசனத்தால் அறிகிறோம். அன்றியும், பூங்குன்றம் என்பது, ஒழுகரையைச் சார்ந்த சிற்றூர் (hamlet) என்று தெரிகிறது.

திருவதிகைக் கல்வெட்டில் குறிக்கப்பெற்ற 'கோட்டூர்க்குமான் அம்பலத் தேவனுன சேதிராயன்' என்பவன், இப்பகுதியில் வாழ்ந்த பெரும்புகழ்ப் பெரியோனுதல் வேண்டும். இவன் வாழ்ந்திருந்த பூங்குன்றம் என்னும் ஊரில், வீதிவிடங்கள் திருச்சிற்றம்பலமுடையானுன நந்தியராயன் என்பவனும் வாழ்ந்தான். இவ்வீதிவிடங்கன் வில்லியனூர்ச் சிவன் கோயில் மண்டபத்தைப் புதுப்பித்தவன் என்று, அங்குள்ள கல்வெட்டு ஒன்றுல் அறிகிறோம்.[13]

---

12. S. I. I., Vol. VIII, No. 314 (40 A of 1903)
13. A. R. E. 1936–37, No. 185

எனவே, சேதிராயனும் வீதிவிடங்கனும் சமகாலத்தவர் என்பதும், ஓர் ஊரினர் என்பதும் அறியற்பாலது.

'ஒழுகரை வாசுதேவன் பெரியானான திருச்சிற்றம்பல மூவேந்த வேளான் என்பவன், உறுமூரான விக்கிரம சோழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையாரிடம் சில நிலங்களை விலைக்குப் பெற்று, அவற்றை திருவீராமீசுரமுடைய பெரியநாயனாருக்குத் தேவதான மாக வழங்கினான்.'

இச்செய்தியை உணர்த்தவல்ல கல்வெட்டு ஒன்று, சிதம்பரம் வட்டம், எறும்பூர் கடம்பவனேசுவரர் கோயிலில் காணப்படுகிறது. அது இரண்டாம் இராசராச சோழனின் 7-ஆவது ஆண்டில் (கி. பி. 1153) வரையப்பட்டது. [14]

இச்சாசனத்தில் குறிக்கப்பெறும் அறவோன், நமது ஒழுகரை யைச் சேர்ந்தவன் என்பதும், மூவேந்தவேளான் என்னும் பட்டம் பெற்ற அரசியல் அதிகாரி என்பதும் நினைவுறத் தக்கது. இவன் ஒழுகரையினவன் ஆயினும், உறுமூர்ப் பகுதியில் பாடிகாவல் அதிகாரி யாகப் பணியாற்றினான். அங்குள்ள நிலங்கள்மீது விதிக்கப்பட் டிருந்த கடமை, பாடிகாவல் முதலான வரித் தொகைகளைத் தனக்கு ஊதியமாகப் பெற்றுவந்தான்.

இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் 10-ஆவது ஆண்டுக் (கி. பி. 1286) கல்வெட்டு ஒன்று, தென்னார்க்காடு மாவட் டம், கடலூருக்கு அண்மையில் உள்ள திருவந்திபுரம் தேவநாயகப் பெருமாள் கோயிலில் காணப்படுகிறது. [15]

இறைவனுக்கு மடப்புறமாகவும், விளக்குப்புறமாகவும், மாலைப் புறமாகவும் கொடுக்கப்பட்ட நிலங்களைப் பற்றி அச்சாசனம் குறிப் பிடுகிறது. அச்சாசனத்தில் ஒப்பமிட்டுள்ள அதிகாரிகளில், ஒழு கரையில் இருந்த அரசியல் அதிகாரியும் ஒருவன்.

"ஒழுகரை பனைப்பாக்கிழான் வேளான் ஆபரணமிட்டானான அரிந்தமன் முவேந்த வேளான் எழுத்து"

என்று வரும் சாசனப் பகுதியால், அவ்வதிகாரியின் பெயர் அரிந்தமன் என்றும், மூவேந்த வேளான் என்னும் பட்டம் உடைய

---

14. A. R. E. 1913, No. 397
15. S. I. I., Vol. VII, No. 761 (137 of 1902)

வன் என்றும் அறிகிறோம். அக்காலத்து ஒழுகரை, அரசியல் அதிகாரிகளின் வாழ்விடமாகவும் இருந்தமைக்கு, இச்சாசனங்கள் சான்றாக விளங்குகின்றன.

## கரணத்தான்

"தேவதான இறையிலி நிலங்களுக்கு உடலாக நிற்கிற நிலத்துக்கு ஊர்க்கணக்கு ஒழுகறை உடையான் எழுத்து கணக்கின்படி நிலமாய்ப் பசான முதல் தேவதான இறையிலியாக"

என்னும் மூன்றாம் குலோத்துங்க சோழனின் வில்லியனூர்க் கல்வெட்டால், [16] அக்காலத்தில் இருந்த ஊர்க்கரணத்தான் ஒருவனின் பெயர் ஒழுகரை உடையான் என்று அறிகிறோம். இதே பெயருடைய மற்றுமொரு கரணத்தான், கி. பி. 1379-ஆம் ஆண்டில் இருந்தனன் என்பதை, அரியன உடையாரின் வில்லியனூர்ச் சாசனத்தால் [17] உணர்கிறோம். இவ்விருவரும் ஒரே பெயரினர் ஆயினும், வெவ்வேறு காலத்தில் வாழ்ந்தவராவர்.

ஒழுகரை மகாதேவ பூரிபட்டன்' என்பவன், திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்து ரிஷிகேசவச்சேரியில் இருந்து பணியாற்றியவன் என்று, மதகடிபட்டுச் சாசனம் ஒன்று குறிப்பால் உணர்த்துகிறது. [18]

## ஒழுகரை ஏரி

"ஸ்வஸ்திஸ்ரீ சகலபுவன சக்கரவர்த்தி காடவன் அவனி ஆளப்பிறந்தான் கொப்பெருஞ்சிங்கன்.... ஒழுகரை எரிக்கு மதகுஞ்செய்வித்து இவ்வெரிக்கு நிர் புகிரக் காலும் கல்லுவித்தபடி"

இக்கல்வெட்டு திருவக்கரை சந்திரமௌளீசுவரர் கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தில் காணப்படுகிறது. 19 பிற்காலத்துப் பல்லவர்த் தோன்றலான கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் (கி. பி. 1243 — 1273) வரையப்பட்டது.

---

16. S. I. I., Vol. VII, No. 816 (189 of 1902)
17. A. R. E. 1936–37, No. 183
18. Temple de Madagadipattou, Page. 65
19. S. I. I., Vol. XII, No. 246 (191 of 1904)

கோப்பெருஞ்சிங்கன் ஒழுகரை ஏரிக்கு மதகும், நீர்புக வாய்க்காலும் அமைத்தான் என்று இச்சாசனம் குறிப்பிடுகிறது. எனினும், ஏற்கனவே பழுதுற்றுக் கிடந்தவற்றை, இவன் மீளவும் புதுப்பித்தான் என்று கொள்ளுதலே பொருத்தமாகும்.

இம்மன்னன் காலத்தில் இவ்வாறு மதகும், வாய்க்காலும் பெற்ற ஏரி, ஒழுகரைக்கு மேற்கே 2.5 கி. மீ. தொலைவில் உள்ள உசுடு என்னும் ஏரியாதல் வேண்டும். இது ஒழுகரைஏரி என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டதைச் சாசனத்தால் உணரலாம்.

இராசநாராயணச் சம்புவராயன் ஆட்சிக் காலத்தில், வில்லியனூர் இறைவனுக்கு, மொத்தம் 835 குழி நிலம் தேவதானமாக விடப்பட்டது. அந்நிலம் பரியனேரி என்னும் பெயருடைய ஏரிக்கு அருகில் அமைந்திருந்ததாகச் சாசனங்கள் புலப்படுத்துகின்றன.[20] இச்சாசனங்கள் குறிப்பிடும் பரியனேரி, ஒருவேளை ஒழுகரை ஏரியாகவும் இருத்தல் கூடும். அவ்வாறுயின், இன்றைய உசுடு ஏரியின் பழமையான பெயர் பரியனேரி என்றும், அது ஒழுகரையைச் சார்ந்திருத்தல் பற்றி ஒழுகரை ஏரி என்று பெயர் பெற்றதாகவும் கொள்ளலாம்.

பிற்காலத்தில் நாயக்க மன்னர்களால் இவ்வேரி செம்மைப் படுத்தப்பட்டு, உசுடு என்னும் பெயரைப் பெற்றிருத்தல் வேண்டும். இனி, கர்நாடகப் போரின் போழ்து, நாசர்ஜங் என்பவர், தமது படையுடன் வந்து இவ்வேரிக் கரையில் தங்கியதாகக் 'கர்நாடக ராசாக்கள் சரிதம்' என்னும் நூல்[21] கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

"இதாயத்து மோதீன்கான் அம்பாரி நின்றுகொண்டு இருந்தது. அது நவாபு பார்த்து யாருடைய அம்பாரி என்று கேழ்க்க, இதாயத்து மோதீன்கான் அம்பாரி என்று சொன்னார்கள். அந்த புத்தி கெட்டவனைப் பிடித்து பாருவிலே வையுங்கள் என்று சொன்னார். இதாயத்து மோதீன்கானை அம்பாரியோடே கொண்டுவந்து பாருவிலே வைத்து நவாபு தண்டோடே ஊசுத்து ஏரியண்டை இறங்கினார்"

இப்பகுதியில் நமது உசுடு ஏரி, கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் ஊ(ர்)சுத்து ஏரி என்று குறிக்கப்பெறுதல் ஈண்டுக் குறித்துணரத் தக்கது.

---

20. A. R. E. 1936–37, Nos. 188 & 190
21. Madras Government Oriental Series, Vol. LXXXVIII. Pages. 75 & 76

இவ்வாறு பழம்பெருமைக்கு நிலைக்களனாக விளங்கிய ஒழுகரை, இன்றுவரை அதே பெயரைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. அதனை உழவர்கரை என்று வழங்குதல் தவறாகும். இது பண்டைய பெருமையைப் பறைசாற்ற வல்ல செவிவழிச் செய்திகளையும் கொண்டுள்ளது. இன்றும் ஒரு ஒன்றியத்தின் தலைமை இடமாகத் திகழ்கிறது. முற்காலத்து அரசு அதிகாரிகளின் இருப்பிடமாக இருந்த சிறப்புடையது. இங்கிருந்த அகத்தீசுவரமுடையாரின் திருக்கோயில், அதன் தொன்மைக்கு மேலும் மெருகூட்டி நின்றது.

இங்கிருந்த சாசனங்கள் மறைந்துவிட்டன. மறைக்கப்பட்டு விட்டன. நமக்குக் கிடைத்துள்ள வெளியூர்க் கல்வெட்டுக்களி லாவது, ஒழுகரையைப்பற்றிய செய்திகள் இருப்பது கண்டு பெருமையடைகிறோம். ஒழுகரைக் கல்வெட்டுகள் முழுமையும் நமக்குச் சிதைவின்றிக் கிடைத்திருக்குமாயின், அவை புதுவை யின் முற்பட்ட வரலாற்றுக்குப் பெருந்துணை புரிந்திருக்கும் என் பதில் ஐயமில்லை.



# நெட்டைப்பாக்கம்

நெட்டைப்பாக்கம் என்னும் சிற்றூர், புதுவையிலிருந்து தென் மேற்கே ஏறத்தாழ 32 கி. மீ. தொலைவில் உள்ளது. இன்று இது ஒரு ஒன்றியத்தின் தலைமை இடமாகத் திகழ்கிறது புதுவை மாநிலத்தில் உள்ள பழம்பெருமை வாய்ந்த ஊர்களில் இதுவும் ஒன்று.

ஒழுகரைக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுச் சான்றுகளின் அளவுக்குக் கூட, நெட்டைப்பாக்கத்துக்குக் கிடைக்கவில்லை. எனினும், திருமாணிக்குழி, திருக்காஞ்சி, திருவந்திபுரம், தீர்த்தனகிரி முதலான ஊர்களில் உள்ள கல்வெட்டுகள், நெட்டைப்பாக்கத்தைப் பற்றிய சில குறிப்பான தகவல்களை நமக்குத் தருகின்றன.

இவ்வூரின் விளக்கமான வரலாற்றை அறிதற்கு உரிய முழுமையான கல்வெட்டுகள் இல்லையாயினும், கிடைத்துள்ள சிலவற்றின் துணைக்கொண்டு, இயன்றவரை ஆராய்ந்து, நெட்டைப்பாக்கத்தின் பழமையை அறிய முயலுவோம்.

## முதலாம் குலோத்துங்கன் காலம்

நெட்டைப்பாக்கத்தைப் பற்றிய செய்தியைக் கூறுகின்ற சாசனம் ஒன்று, திருக்காஞ்சியில் உள்ள கங்கைவரேசுவரர் கோயிலில் காணப்படுகிறது. அது முதலாம் குலோத்துங்கனின் 44-ஆவது ஆண்டில் (கி. பி. 1114) வரையப்பட்டது.[1]

நெட்டைப்பாக்கத்திற்கு பூபாலசுந்தர நல்லூர் என்று வேறொரு பெயர் இருந்ததையும், அங்குச் சோழகோனூர் என்பவருக்கு நிலம் கொடுக்கப்பட்டதையும் இக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

வில்லியனூருக்குத் திருநீற்றுச் சோழநல்லூர், ஒழுகரைக்குக் குலோத்துங்க சோழநல்லூர் என்று பெயர் வழங்கப்பட்டமை போல, நெட்டைப்பாக்கத்துக்கு பூபாலசுந்தர நல்லூர் என்று பெயர் வழங்கியது.

---

1. A. R. E. 1919, No. 216

## சோழ கோனர்

மேற்கூறிய சாசனத்தில் குறிக்கப்பெறும் சோழகோனர் என்பவரின் முழுமையான பெயர், 'புத்தமங்கலமுடையான் ஒற்றியூரன் பூபாலசுந்தரானை சோழகோனர்' என்று திருக்காஞ்சிக் கல்வெட்டால் அறிகிறோம்.[2] இவன் பூபாலசுந்தரன் என்னும் இயற்பெயரும், சோழகோனர் என்னும் பட்டப் பெயரும் உடையவன்.

முற்காலத்தில் முதலாம் குலோத்துங்க சோழனின் அரசியல் அதிகாரிகளாக விளங்கியவர்களில் இவனும் ஒருவன். இவன் மனைவியார், இராஜேந்திர சோழியார்' என்பது திருமழபாடியிலுள்ள கல்வெட்டு ஒன்றால் அறியப்படுகிறது.

குலோத்துங்க சோழனின் மகனான விக்கிரம சோழன் காலத்தில், நம் பூபாலசுந்தரன் திறமைவாய்ந்த படைத்தலைவர்களுள் ஒருவனாக விளங்கினான். கங்கர், மராட்டியர், கலிங்கர், கொங்கர், குடகர் ஆகியோரைப் போரில் வென்று வாகை சூடியவன் என்று, இவனை விக்கிரம சோழன் உலா புகழ்ந்துரைக்கின்றது.[4]

எனவே, குலோத்துங்கன், விக்கிரமன் ஆகிய இருபெரு வேந்தர்களின் ஆட்சிக் காலங்களில் வாழ்ந்த படைத்தலைவனான நம் பூபாலசுந்தரனின் பெயராலேயே நெட்டைப்பாக்கம் என்பது, பூபாலசுந்தரநல்லூர் என்று அழைக்கப்பட்டது.

## திருபுவனை ஏரி

குலோத்துங்கன் காலத்தில் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்து ஏரிக்கரை, பல இடங்களிலும் உடைபட்டுப் பழுதுற்றுக் கிடந்தது. பூபாலசுந்தரனின் முயற்சியால், ஏரிக்கரை பலவாறு செப்பனிடப்பட்டது. பூபாலனின் சார்பில், இப்பணியை ஏற்று நடத்தியவன் 'சேங்கலூருடையான் ஆரியன் திருமழபாடி உடையானான மலையப்பிராசன்' என்று கல்வெட்டுக் கூறுகிறது.[5] இப்பணியும் குலோத்துங்கன் பெயரால் நடைபெற்றதாகத் தெரிகிறது.

---

2. A. R. E. 1919, No. 215
3. S. I. I., Vol. V, No. 640
4. விக்கிரம சோழன் உலா, வரிகள். 143–146
5. A. R. E. 1919, No. 215

### செலவுத் தொகை

திருபுவனை ஏரிக்கரையில் கல்லிட்டுச் செப்பனிடப்பட்டதால் உண்டான செலவுத் தொகைக்காக, பூபாலசுந்தரனுக்கு நெட்டைப் பாக்கத்தில் நிலம் கொடுக்கப்பட்டது.

திருபுவனையில் துர்க்கைக் கோயிலுக்காக விடப்பட்ட தேவ தான நிலம், இவன் பெயரால் பூபால சுந்தர விளாகம் என்று அழைக்கப்பட்டதை அங்குள்ள கல்வெட்டால் அறிகிறோம்.[6] இது பற்றிய செய்திகள், திருபுவனை என்ற தலைப்பில் விளக்கமாகக் குறிக்கப்பட்டன.

திருக்காஞ்சியிலுள்ள கல்வெட்டுகளால் நெட்டைப்பாக்கம் என்பது அவ்வூரின் பழமையான பெயர் என்பதும், அது பூபால சுந்தரன் என்ற படைத் தலைவனின் பெயரால், பூபால சுந்தர நல்லூர் என்று புதிய பெயரால் அழைக்கப்பட்டதும் இனிது புலனாகும்.

## மூன்றும் குலோத்துங்கன் காலம்

"இவ்வூர்ப்பிடாகை பூபாலசுந்தர நல்லூரிலே ஐம்பதிற்று வேலி நிலம் மூன்றாவது முதல் தேவதான இறையிலியாக இட்டு"

இது திர்த்தனகிரிச் சிவன் கோயிலில் காணப்படும் கல்வெட்டாகும்.[7] கோனேரிமேல்கொண்டான் என்று அழைக்கப்படும்.[8] மூன்றும் குலோத்துங்கனின் 3-ஆவது ஆண்டில் (கி. பி. 1181) வரையப்பட்டதாகும்.

திர்த்தனகிரி இறைவனுக்கு, நெட்டைப்பாக்கத்தில் 50 வேலி நிலங்களை தேவதானமாக வழங்கியதைப் பற்றி இச்சாசனம் குறிப்பிடுகிறது. இச்சாசனத்திலும் நெட்டைப்பாக்கத்தின் பெயர், பூபால சுந்தர நல்லூர் என்று குறிக்கப்படுவது கருதத்தக்கது.

திர்த்தனகிரி இறைவனுக்கு உரிய 50 வேலி தேவதான நிலங்கள், நெட்டைப்பாக்கத்தில் இருந்தமையால், இது திர்த்தனகிரியைச்

---

6. A. R. E. 1919, No. 207
7. S. I. I., Vol. XVII, No. 136 (116 A of 1904)
8. இம்மன்னனுக்கு உரிய இப்பட்டப் பெயர், வில்லியனூர்க் கல்வெட்டிலும் உள்ளது. (S. I. I., Vol. No. 816)

சேர்ந்த சிற்றூராக 'இவ்வூர்ப்பிடாகை பூபால சுந்தர நல்லூர்' என்று குறிக்கப்பட்டது போலும். திர்த்தனகிரி என்னும் ஊர், நெட்டைப்பாக்கத்துக்குத் தென்மேற்கே 7 கி. மீ. தொலைவில் உள்ளது.

## நெட்டைப்பாக்கமுடையான்

"ஸ்வஸ்திஸ்ரீ கொலொத்துங்க சொழ தெவர்க்கு யாண்டு 34-ஆவது விருதுராஜ பயங்கர வளநாட்டு மெற்கா நாட்டு திருமாணிக்குழி மஹா தெவர்க்கு நெட்டைப்பாக்கமுடையான் மாயிலட்டி செந்தனை அபிமான சொழ மூவெந்த வெளான் வைத்த திருநுந்தாவிளக்கு கொண்டு"

இக்கல்வெட்டு தென்னார்க்காடு மாவட்டம், கடலூர் வட்டம், திருமாணிக்குழி என்னும் ஊரில் உள்ள சிவன் கோயிலில் காணப் படுகிறது.[9] மூன்றும் குலோத்துங்க சோழனின் 34-ஆவது ஆண்டில் (கி. பி. 1212) வரையப்பட்டது.

நெட்டைப்பாக்கத்திலிருந்த 'அபிமான சோழ மூவேந்த வேளான்' என்ற கொடையாளன், திருமாணிக்குழி இறைவனுக்கு விளக்குத் தானம் செய்ததை இக்கல்வெட்டால் அறிகிறோம். இவன் மூவேந்த வேளான் என்னும் பட்டம் பெற்ற அதிகாரி ஆவான். இவனுடைய ஊர் நெட்டைப்பாக்கம் என்பது உளங்கொளத்தக்கது.

இதுகாறும் எடுத்துக்காட்டப்பட்ட மூன்றும் குலோத்துங்க னின் இரண்டு கல்வெட்டுகளில், 3-ஆவது ஆண்டு (கி. பி. 1181) உடைய திர்த்தனகிரிச் சாசனத்தில், பூபால சுந்தர நல்லூர் என்று பெயர் குறிக்கப்பட்ட நெட்டைப்பாக்கம், 34-ஆவது ஆண்டுடைய (கி. பி. 1212) திருமாணிக்குழிச் சாசனத்தில் வறிதே நெட்டைப் பாக்கம் என்று மட்டும் குறிக்கப்படுவதைக் காண்கிறோம். இவற்றால், இச்சோழ மன்னனுடைய ஆட்சிக் காலத்து இறுதிப் பகுதியில், புதிய பெயரான பூபாலசுந்தர நல்லூர் என்பது வழக்கொழிந்த தாகக் கருதலாம். அடுத்துவரும் பாண்டியனின் சாசனமும் இதனை உறுதி செய்கிறது.

## சுந்தர பாண்டியன் காலம்

இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் 10-ஆவது ஆண்டில் (கி. பி. 1286) வரையப்பட்ட சாசனம் ஒன்று, கட

---

9. S. I. I., Vol. VII, No. 779

லூருக்கு அண்மையில் உள்ள திருவந்திபுரம் தேவநாயகப் பெருமாள் கோயிலில் காணப்படுகிறது.[10]

திருமடப்புறம், திருவிளக்குப்புறம், திருமாலைப்புறம் முதலான அறச்செயல்களுக்காக, தெய்வநகருக்கும், நாயனர் ஏழிசைநாதப் பெருமாளுக்கும் நன்செய் புன்செய் நிலங்கள் கொடையளிக்கப் பட்டதை இச்சாசனம் கூறுகிறது.

மேற்கூறிய செய்தியை உடைய அச்சாசனத்தில் 27 அரசியல் உயர் அதிகாரிகள் ஒப்பம் இட்டுள்ளனர்.

"இவை நெட்டைப்பாக்கத்துப் பாவாளி கிழான் வெளான் தில்லைநாயகமூவேந்த வேளானெழுத்து"

என்னும் சாசனப் பகுதியைக் கொண்டு, ஒப்பம் இட்டுள்ள இருபத்தேழு அதிகாரிகளுள், தில்லைநாயகனும் ஒருவன் என் பதை அறிகிரும். தில்லைநாயகம் என்பது இவனின் இயற் பெயர். மூவேந்த வேளான் என்பது இவனின் பட்டப் பெயர். இவனது ஊர் நெட்டைப்பாக்கம் என்பது குறிப்பிடத்தக்கது.

மூன்ரும் குலோத்துங்கன் காலத்தவனை அபிமான சோழ மூவேந்த வேளான் என்ற அதிகாரியும், இப்பாண்டிய மன்னன் காலத்தவனை தில்லைநாயக மூவேந்தவேளான் என்ற அதிகாரியும் நமது நெட்டைப்பாக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்பது இங்குக் குறித்துணரத்தக்கது. இதே சாசனத்தில் ஒப்பமிட்டுள்ள அரிந்த மன் மூவேந்த வேளான் என்பவன், ஒழுகரையைச் சேர்ந்தவன் என்பது முன்னரே கூறப்பட்டது.

இனி, அச்சாசனத்தில் வரும் மேலும் சில அதிகாரிகளின் பெயர்களும், அவர்தம் ஊர்களும் இன்னவை என்று கீழ்வரும் தொடர்களால் உணரலாம்.

"இவை அழிசுபாக்கமுடையான் வானவன் பல்லவரையன் எழுத்து"

"இவை அழிசுபாக்கமுடையான் அரையன் பேசும்பெருமாள் எழுத்து"

"இவை குரப்பாக் கிழவன் எழுத்து"

---

10. S. I. I., Vol. VII, No. 761 (137 of 1902)

"இவை ஏரிப்பாக்கமுடையான் கானகனுடு உடையான் எழுத்து"

இங்கு அதிகாரிகளின் பெயர்களாக வரும் வானவன் பல்ல வரையன், அரையன் ஆகியவை, அன்னேரின் பட்டப் பெயர்கள் ஆகும். வானவன் பல்லவரையன், அரையன் பேசும் பெருமாள் ஆகிய இரண்டு அதிகாரிகளின் ஊர், அழிசுபாக்கம் என்பது இவற்ருல் அறியப்பெறும் செய்தியாகும்.

புதுவையில் இருந்து கடலூர் செல்லும் நெடுஞ்சாலையில், தவளக்குப்பம் என்னும் ஊரில் இருந்து மேற்கே 5 கி. மீ. தொலை வில் அமைந்துள்ள அபிஷேகப்பாக்கம் என்னும் சிற்றூர் முற்காலத் திய அழிசுபாக்கம் ஆகும்.

கானகனுடுடையான் என்னும் அதிகாரியின் ஊர், ஏரிப்பாக்கம் என்று இச்சாசனத் தொடர் குறிக்கிறது. இது நெட்டைப்பாக்கத் துக்கு அண்மையில் உள்ள சிற்றூர் என்பது குறிப்பிடத்தக்கது.

சூரப்பாக்கங் கிழவன் என்பது இங்கு 'சூரப்பாக் கிழவன்' என்று குறிக்கப்படுகிறது. இவ்வூர் நெட்டைப்பாக்கத்துக்கு அண் மையில் உள்ள சூரமங்கலம் என்னும் ஊராதல் வேண்டும்.

நெட்டைப்பாக்கம், ஒழுகரை, அபிஷேகப்பாக்கம், சூரமங்கலம், ஏரிப்பாக்கம் ஆகிய இடங்களில் வாழ்ந்திருந்த அதிகாரிகள், அக் காலத்துப் பேரரசர்களின் பெருந்தரத்து அதிகாரிகள் அல்லர். சிறுபாடிக்காவல் பொறுப்பை மேற்கொண்டிருந்த அதிகாரிகளே ஆவர்.

நெட்டைப்பாக்கத்தைப் பற்றிக் குறிப்பிடும் முதலாம் குலோத் துங்க சோழனுக்கு முற்பட்ட கல்வெட்டு எதுவும் நமக்குக் கிடைக் காததால், கி. பி 12-ஆம் நூற்ருண்டுக்கு முற்பட்ட நெட்டைப் பாக்கத்தின் வரலாற்றை அறிந்து கொள்ள இயலாமற் போயிற்று. எனினும், இதன் பழமையான பெயர் நெட்டைப்பாக்கம் என்பது எடுத்துக்காட்டிய சான்றுகளால் தெரிகிறது. இடைக்காலத்தில் இதற்குப் 'பூபால சுந்தர நல்லூர்' என்று வேறு பெயர் இருந் துள்ளது. பொதுவாகவே, முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் இடப்பட்ட புதிய பெயர்கள், நீண்ட காலம் நிலைபெற வில்லை.

---

